வீரேர் ஸ்ரீ சக்கிரவர்த்தி நயினுர் M.A. இவர் தமது பிதா வீரேர் ஸ்ரீமத் அப்பாசாமி சாஸ்திரியா ரவர்கட்கும் மாமனுர் ஸ்ரீ அருக தாச நயினுருக்கும் கடிதம் கொடுத்துப் பழைய ஏட்டுப் பிரதி களும் வேறு குறிப்பும் கிடைக்கும்படி உதவி புரிந்தார். அவ் வுதவியோ சமய சஞ்சீவியாய் இக்காவியம் வெளியாகப் பேருத வியாயது. இம்மூவர் புரிந்த பேருதவிக்குக் கைம்மாறொன்றை யும் யாமறியோம்.

பெருங்காவியம் ஐந்தினுள் வளையாபதி குண்டலகேசி இவ்விரண்டிலும் கிடைத்துள்ள பாகத்தையும் சரித்திரசாரத்து டனும் சிறு பஞ்ச காவியங்களுள் வெளிப்படாத உதயணகாவி யம் நாககுமாரகாவியம் நீலகேசி இவைகளையும் யசோதரகாவி யம் நாககுமார காவியங்களின் வடமொழிச்சுலோக மூல பாடங் களையும் வெளியாக்க முயற்சி நடைபெறுகின்றது. எல்லாம் வல்ல பரம்பொருள் இப்பூதவுடல் நழுவுமுன் எமது முயற் சியை நிறைவேற்றிக் காத்தளிக்கு மென்று நம்புகின்றேன். தமிழ்நாட்டிற் றமிழ்வளர்க்க முயற்சிசெய்யு மெமது நண்பர் களும் தம்மாலியன்றவரை எமது முயற்சி ஈடேறும் வண்ணம் உதவுவார்களென்றும் நம்புகின்றோம்.

வளையாவதி, குண்டலகேசி இவ்விரு பெருங்காவியங்க ளும் பல இடங்களில் ஜைனர்கள் கையில் சிற்சில பாகங்கள் குறைவாகவோ அல்லது பூர்த்தியாகவோ கிடைக்கக்கூடியன வேயாம். பிறரிடத்தும் பெருந் தொகை செலவிடின் கிடைப் பனவேயாம். பாஷைக்குப் பாடு படுமவர்களோ பெரும்பான் மை கலைமகளின் அருட்குமட்டு முடையராதலின் செல்வமக ளின் ஸான்னித்தியம் பெறுதற் கிடமில்லை. மாமியும் மருமக ளும் ஒருமித்து வாழ்தலரிதே யன்றோ. செல்வத்திற் களிப்ப வர்க்கோ தமிழ்நாட்டில் தேசபாஷாப் பிரியமும் அப்பாஷை நூல்களைக் காப்பதில் பிரியமும் இரண்டொரு இடங்களிலுள்ள வர்நீங்க இக்கலியில் வேறிடத்தில்குதிரைக் கொம்பாய்விட்டன.

இக்காப்பியத்தின் ஸாராம்சம் யாதெனிலோ கன்ம பரி பாகத்தால் மனிதர் முயற்சி செய்தால் தேவகதிபெற்று நற் பதமும் பெறுவாரென்பதே. தீவினையால் விலங்குகதி நரககதிக ளில் மனிதர்க்குப் பலதுன்பங்களுண்டாம். மறு ஜனனமும் உண்டு என்பதுமாம். ஸ்ரீவாதிராஜ, முனிவரா லிக்காவியம் வடமொழியிற் பாடப்பெற்றுள்ளது. தமிழ்க்கவி பாடியவர் ஜைனமுனிவரென்று மட்டும் தெரிகின்றது. பெயர் தெரிந்து கொள்ள வகையில்லை. இவ்வாதி ராஜமுனிவரே தமிழிலும்பாடி யிருக்கலாமென்று கொள்ளலாம். ஏனென்றால் நாககுமார காவி யத்தை வடமொழியிற் செய்த முனிவரே தமிழிலும் கத்தியரூப மாகப் பாடியிருப்பதாகக் காணப்படுகின்றது. அவரை உபய பாஷா கவிசக்கிரவர்த்தி மல்லிஷேணர் என்று ஜைனர்கள் வழங்கி வருகின்றார்கள்.

இச்சரித்திரம் தோன்றியகாலம் இற்றைக்கு 2192வருஷங் களுக்கு முன் மகததேசத்தி லரசாண்ட அசோகன் காலத்திற் குப் பிந்தியதேயாம். இக்காவியகதாநாயகன் யசோதரன். இவன் அசோகனுக்குச் சந்திரமதியிடம் பிறந்த குமாரன். இக்காவியத் திற் கூறப்பட்டுள்ள மற்ற அரசர் முனிவர்களின் காலமும் கதாநாயகனுடைய காலமேயாம். கதைச்சுருக்கம் பார்த்து மற் றைய நயங்களை அறிந்து கொள்ளலாம், ஓலைப்பிரதிகளை வைத் துக்கொண்டு இக்காவியம் சீராக்கப்பட்டது.

## நமக்குக்கிடைத்த ஓலைப்பிரதிகள்.

தமிழ்ப்பண்டிதர் பவானி பாலபாரதி முத்துசா மையர் கொடுத்தது. ............1.

திருநெல்வேலி ஜில்லா நான்குனேரி தாலூக்கா ராதாபுரம் பிரதி .........1.

வீரர் ஸ்ரீ அப்பாசாமி சாஸ்திரியார் பிரதி ......1.

இவைகளெல்லாம் மூலபாடங்களே.

சுத்தமான பிரதிரூபங்கள் வைத்துள்ளோர் இப்பதிப்பில் தாம் கண்ட பிழைகளை நமக்கறிவித்துதவிபுரிந்தால் வேறு பதிப்பில் அப்பிழைகளை நீக்கி சுத்தமாக வெளிப்படுத்தப் படும்.

அகவல்.

அறிவெனப் படுவது துன்பந் துடைத்தல்
செறிவெனப் படுவது மும்மையுஞ் செறிதல்
ஆண்மை யெனப்படுவ தைம்புலன் வென்றல்
கேண்மை யெனப்படுவது கேட்டிடத் துதவல்
அருமை யெனப்படுவ தறநெறி வழுவாமை
பெருமை யெனப்படுவது பிறனில் விழையாமை
அறமெனப் படுவ தாருயி ரோம்பல்
உறவெனப் படுவ துற்றுழி நிற்றல்
வாய்மையெ னப்படுவது வருந்தா துரைத்தல்
தூய்மை யெனப்படுவ துள்ளந் தூய்மை
இன்பமெனப் படுவது ஈறி லின்பம்
அன்பெனப் படுவ தார்வ முடைமை
தவமெனப் படுவ தைம்புலம் வெறுத்தல்
விரதமெனப் படுவது கொல்லா விரதம்.

வேறு.

ஆக்குவ தேதெனி லறத்தை யாக்குக
போக்குவ துளதெனில் வெகுளி போக்குக
நோக்குவ தேதெனின் ஞான நோக்குக
காக்குவ தேதெனில் விரதங் காக்கவே.

இங்ஙனம்,

தி. வே.

# ஜைனசமய பரிபாஷை.



## தொகைவிளக்க அகராதி.

1. அருகந்தர்: ஜினர், கேவலர், பரமேஷ்டி, அதீச்வரர், புத்தர் இவ்வபிதானங்கள் தேவாதிதேவராம் அருகர் ஒருவரையே குறிப்பனவாம்.

2. ஆகாசம்: 1. லோகா காசம் 2. அலோகாகாசம்.

„ கருமம்: 1. காதிகருமம் (மோக்ஷத்தைக்கெடுப்பது) 2. அகாதிகருமம் (மோக்ஷத்தைக் கெடுக்காது அனுகூலிப்பது).

„ காலம்: 1. உற்சற்பிணி (ஆயுளும் ஆகிருதியும் மிகுங்காலம்) 2. அவசற்பிணி (ஆயுளும் ஆகிருதியும் குறையுங்காலம்).

„ பதார்த்தம்: 1. ஜீவபதார்த்தம் (அறிவுப்பொருள்) 2. அஜீவ பதார்த்தம் (சடப்பொருள்).

3. இரத்தினத்திரயம்: 1. நற்காட்சி, 2. நன்ஞானம் 3. நல்லொழுக்கம்.

„ காரவத்திரயம்: 1. ரஸகாரவம், 2. ரித்திகாரவம், 3. ஸாதுகாரவம்.

„ குணவிரதம்: 1. திக்குவிரதம், 2. அநர்த்ததண்டவிரதம், 3. போக உபபோக பரிமாணம்.

„ குடைகள்: 1. சந்திராதித்தியம், 2. நித்தியவிநோதம் 3. ஸகலபாசனம்.

„ குப்தி: 1. மனோகுப்தி, 2. வாக்குப்தி, 3. காயகுப்தி.

„ சல்லியம்: 1. மித்தியாசல்லியம் 2. மாயாசல்லியம் 3. நிதானசல்லியம். (சல்லியம்=முள். பாணம்).

„ சீவர்கள்: 1. நித்தியஸித்தர், 2. முத்தர், 3. பத்தர்.

3\. தண்டம்: 1. மனோதண்டம், 2. வாக்தண்டம், 3. காய தண்டம்.

,, விரதம்: 1. அணுவிரதம், 2. குணவிரதம், 3. சிக்ஷாவிரதம்.

4\. அகாதிகருமம்: 1. வேதனீயம், 2. நாமிகம், 3. கோத்திரிகம், 4. ஆயுஷ்கம்.

,, ஆகாரவகை: 1. அன்னம், 2 பானம், 3. காத்யம், 4. லேகியம்

,, கதி: 1. நரக, 2. திரியக்கு, 3. நர, 4. சுரகதிகள்.

,, காதிகருமம்: 1. ஞானவரணீயம், 2. தர்சனவரணீயம் 3. மோகனீயம், 4. அந்தராயம்.

,, சங்கங்கள்: 1. முனிகள், 2. ஆரியாங்கனைகள், 3. சிராவகர்கள், 4. சிராவகிகள்.

,, சிக்ஷாவிரதம்: 1. தேசாவகாயிகம், 2. ஸாமாயிகம், 3. புரோஷதோபவாஸம், 4. வையாப் பிரத்தியம் (நியமவிருதம்).

,, தானம்: 1. ஆகாரதானம், 2. அபயதானம், 3. சாஸ்திரதானம் 4. ஔஷததானம்.

,, துக்கம்: 1. மனோதுக்கம், 2. காயதுக்கம், 3. ஆகந்துக துக்கம் 4. சுபாவதுக்கம்.

4\. தேவர்வகை: 1. பவணர், 2. வியந்தரர், 3. சோதிஷ்கர் 4. கற்பவாஸிகள்.

,, மோக்ஷவழி: 1. ஞானம், 2. தரிசனம், 3. சாரித்திரம், 4. தபம்.

5\. அணுவிரதம்: 1. கொலை, 2. பொய், 3. களவு, 4. பிறர்மனை நயத்தல், 5. விபரீத பரிக்கிரகம்.

,, அஸ்திகாயம்: 1. சீவ, 2. புற்கல, 3. தரும, 4. அதரும, 5. ஆகாசங்கள்.

5 ஆச்சரியம்: 1. இரத்தினமழை, 2. புஷ்பமழை, 3. மந்த மாருதம், 4. ஜயகோஷம், 5. தேவ துந்துபி.

„ கலியாணம்: 1. சுவர்க்காவதரணம், 2. ஜன்மாபிஷேகம், 3. பரிநிஷ்கிரமணம், 4. கேவல ஞானம், 5. பரி நிர்வாணம்.

„ சமிதி: 1 ஈகா, 2. பாஷா, 3. ஏஷணை, 4. ஆதான நிக்ஷேபனை, 5. உத்சர்க சமிதிகள்.

„ ஞானம்: 1. மதிஞானம் (இயற்கையறிவு).
2. சுருதஞானம் (நாலுணர்ச்சி.)
3. அவதி ஞானம் (தனது முன்பிறப்பை யறிவுமுணர்வு).
4. மனப்பரியய ஞானம் (தனதும் பிறரதுமாகிய முன்பிறப்பையறியு ஞானம்)
5. கேவல ஞானம் (த்ரிகாலவுணர்ச்சி.)

„ பரமேஷ்டிகள்: 1. அருகர், 2. ஸித்தர், 3. ஆசாரியர், 4. உபாத்தியாயர், 5. ஸாதுக்கள்.

„ பரிவர்த்தனை: 1. திரவியம், 2. க்ஷேத்திரம், 3. காலம், 4. பவம், 5. பாவம்.

„ மந்திரம்: பஞ்ச பரமேஷ்டிகளின் பெயர்களின் முதலெழுத்தைந்துஞ் சேர்ந்தாய மந்திரம். அ, ஸி, ஆ, உ, ஸா, இதைப் பஞ்ச நமஸ்காரமாகக் கொள்ளப்பட்டிருக்கின்றது.

„ விரததினம்: 1. பஞ்சமி, 2. ஷஷ்டி, 3. ஏகாதசி, 4. சதுர்த்தசி 5. பூர்ணிமை அல்லது, அமாவாஸியை. இவைகளை நோன்புதினம் என்றும் கூறுகின்றார்கள்.

6. காலம் (நல்) 1. தீத்தீக்காலம், 2. தீக்காலம், 3. தீ நற்காலம். 4. நற் றீக்காலம், 5. நற்காலம், 6. நன்னற்காலம், (இது உத்சற்பிணிகாலம்.)

6. காலம் (த்) 1. நன்னற்காலம், 2. நற்காலம், 3. நற்றீக் காலம்4 தீநற் காலம், 5. தீக்காலம், 6. தீத்தீக்காலம். (இதுஅவசற் பிணிகாலம்.)

,, திரவியம்: அஸ்திகாயம் ஐந்துடன் காலமுஞ் சேரத் திரவியம் ஆறுதல் காண்க.

7. இருத்தி. 1. புத்திரித்தி, 2. தபோரித்தி, 3. பலரித்தி, 4. விக்கிரயரித்தி, 5. ரஸரித்தி, 6. ஔஷதரித்தி, 7. அக்ஷீணரித்தி (ரித்தி = விருத்தி.)

,, குணம்: (ஈவோன்) 1. சிரத்தை, 2. பத்தி, 3. அலோபத்துவம்; 4. தயை 5. சத்தி, 6. க்ஷமை, 7. விஞ்ஞானம்.

,, பங்கி: 1. இருப்பதாம், 2. இராததாம், 3. இருப்பதுமிராததுமாம், 4. சொல்லொணாததாம் 5. இருப்பதுஞ் சொல்லொணாததுமாம், 6. இல்லையாம் சொல்லொணாததுமாம், 7. உள்ளதுமாமில்லாததுமாம் சொல்லொணாததுமாம்.

8. அர்ச்சனைவிதம்: 1. நீர், 2. சாந்து, 3. அக்ஷதை, 4. பூமாலை, 5. திருவமுது, 6. தீபம், 7. தூபம், 8. பழம்.

## ஜீவஸம்போதனை வெண்பா.

விரைகமழ்நீர் சாந்தரிசி மேதகப்பூந் தாமம்
திருவமுது தீபமொடு தூபம்.........தருகனியும்
மிக்க புகழிறைவன் வீரனடிக் கேற்றித்
தக்க துதிநவின்றுன் றுன்.

,, கருமம்: காதிநான்கு அகாதிநான்கு. ஆக எட்டு.

,, குணம்: 1 கடையிலாவறிவு, 2 கடையிலாக்காட்சி, 3 கடையிலாவீரியம், 4 கடையிலாவின்பம், 5 நாமமின்மை, 6 கோத்திரமின்மை, 7 ஆயுவின்மை, 8 அழியாவியல்பு,

8. மகாப்ராதிஹாரியம்: 1. அசோகவிருக்ஷம், 2. சுரபுஷ்பவ்ருஷ்டி, 3. திவியத்தொனி 4. சாமரஸமூகம், 5 சிங்காசனம், 6. பிரபாமண்டலம், 7. துந்துபி, 8. முக்குடை.

9. பதார்த்தம்: 1. ஜீவம், 2. அஜீவம், 3. புண்ணியம், 4. பாபம், 5. ஆஸ்ரவம், 6. ஸம்வரம் 7. நிர்ச்சரை, 8. பந்தம், 9. மோக்ஷம். (நவதத்துவமுமிதுவே.)

„ பலதேவர்: 1. விஜயர், 2. அசலர், 3. சப்பிரபர், 4. சுதரிசனர், 5. நந்தி, 6. நந்திமித்திரர், 7. தருமர், 8. ராமர், 9. பதுமர்.

9. பிரதிவாஸுதேவர்: 1. அசுவக்ரீவர், 2. தாரகர், 3. நிசும்பர், 4. மது, 5. மதுக்கிரீடர், 6. மதுசூதனர், 7. புஜபலி, 8. இராவணன், 9. ஜராஸந்தன்.

„ புண்ணியம்: 1. எதிர்கொள்ளுதல், 2. பாதப்ரக்ஷாளனம், 3. உச்சஸ்தானத்திலிருக்கச் செய்தல், 4. நமஸ்காரஞ் செய்தல், 5. எட்டுவிதார்ச்சனைபுரிதல், 6. மனசுத்தி, 7. வசனசுத்தி, 8. காயசுத்தி 9. ஆஹாரசுத்தி.

„ வாஸுதேவர்: 1 த்ரிபிருஷ்டர், 2 த்விபிருஷ்டர் 3 சுயம்பு 4 புருஷோத்தமர், 5 புருஷஸிம்மர், 6 புண்டரீகர், 7 தத்தர், 8 இலக்ஷ்மணர், 9 நாராயணர்.

10. கர்மக்ஷயாதிசயம்: 1 அச்சாயத்துவம், 2 நிர்நிமேஷத்வம், 3 நிர்புக்தி, 4 நிர்ஜந்துவதை 5 நிருபஸர்க்கம், 6 துர்பிக்ஷவிரகம், 7 சதுராननத்வம், 8 ஸர்வவித்யேச்வரத்வம், 9 ஸமான நகேசத்வம். 10 வியோமகமனத்துவம்.

10. சகஜாதிசயம்: 1. ஸ்வேதா டாவம் 2. ரஜோமலா பாவம். 3. க்ஷீரஸமான ரஸவிசேஷம். 4. சிரவண ப்ரியமான வசன முதித்தல்

5. உபமாதீத ஸவுந்தரியம்.
6. பரமமாகிய பரிமளகந்தம்.
7. ஸ்ரீதேவியாதி ஸ்ரீலக்ஷணம்.
8. வஜ்ர விருஷப நாராச ஸம்ஹநநம்.
9. ஸமசதுரச்ர ஸம்ஸ்தானம்.
10. ப்ரமித மகா வீர்யம்.

11. கணதரர்: கௌதமர், 2 வாயுபூதி, 3 அக்நிபூதி, 4 சுதன்மர் 5 மௌரியர் 6 மந்தரர், 7 புத்திரர், 8 மைத்திரேயர் 9 அகம்பனர் 10 அசேலகர், 11 பிரபாஸர்.

11. சிராவகநிலை: 1 தர்சனிகன் 2 விருதிகன், 3, ஸாமாயிகன் 4 ப்ரோஷதோபவாஸன் 5 ஸச்சித்தவிரதன் 6 ராத்ரியபுக்தன் 7 பிரமசாரி 8 அநாரம்பன் 9 அபரிக்கிரகன் 10 அநநுமதி 11 உத்திட்டபிண்டன்.

12. சக்கிரவர்த்திகள்: 1 பரதன், 2 ஸகரன் 3 மகவான் 4 ஸநத்குமாரர் 5 சாந்திநாதர், 6 குந்துநாதர் 7 அரநாதர் 8 சுபூமர், 9 பதுமர் 10 அரிஷேணர் 11 ஜயஸேனர் 12 பிரமதத்தர்.

12. பத்நஜீவன் தன்மை: 1 அநித்தியம் 2 அசரணம் 3. ஏகத்துவம் 4 அந்நியத்துவம் 5 ஸம்ஸாரம் 6 லோகம் 7 அசுசித்துவம் 8 ஆஸ்ரவம் 9 ஸம்வரை 10 நிர்ஜரை 11 தர்மசங்கியானம் 12 போதி துர்லபம்.

ஜீவஸம்போதனை வெண்பா.

நில்லாமை யாதுஞ் சரணின்மை யேகநிலை
பொல்லாத் தடமோற் றினலோகம்......பொல்லா
வுடலூறு சம்வரையே நிர்ச்சரைகோ டன்மந்
துடர்போதி யாறிரண்டே தொக்கு.

13. சாரித்திரம்; பஞ்சமகாவிரதம் / பஞ்சஸமிதி / திரிகுப்தி } இப்பத்தின்மூன்றையு மனுட்டித்தல்

14. நைவீசாதிசயம்: 1 ஸர்வபாஷாஸமந்வித வாக்குதித்தல், 2 ஸர்வஜந மித்திரபாவம், 3 ஸமஸ்த ஜீவ ஸந்தோஷ ப்ர விருத்தி, 4 ஷட்ரிதி ஸம்பூர்ண ஸறப்ர விருத்தி, 5 ஸர்வ ஸஸ்யஸ மிருத்தி, 6 தர்ப்பண ஸமான பூதலம், 7 வாயுகுமார உன் மார்ஜனம் 8 மேககுமார ஜலப்ரோ க்ஷணம், 9 ஜய ஜயா ராவகோஷணை, 10 மந்தமாருத சலனம், 11 ஆகாச திசாவைமல்யம் 12 அரவிந்த ச்ரேணி, 13 அஷ்டமங்கல ஸமூகம், 14 தரும சக்கிரம்.

15. மார்க்கணை: 1 கதி, 2 இந்திரிய, 3 காய, 4 யோக, 5 வேத, 6 கஷாய, 7 ஞான, 8 ஸம்யம, 9 தர்சன 10 லேச்யா, 11 பவ்யத்வ, 12 ஸம்யக்த்வ 13 ஸம்ஞத்வ: 14 ஆகாரிக, மார்க்கணைகள்.

16. பாவனை: 1 தர்சநவிசுத்தி, 2 விநயஸம்பன்னதை, 3 சீலவ்ரதைஷ்வனதீசாரம், 4 அபீக்ஷண ஞானோபயோகம், 5 ஸம்வேகம், 6 சக்திதஸ்தியாகம், 7 சக்திதஸ்தபஸ், 8 ஸாதுஸமாதி, 9 வையாப்ரத்தியம், 10 அருகத்பக்தி, 11 ஆசார்யபக்தி, 12 பகுச்ருதபக்தி, 13 பிரவசனபக்தி, 14 ஆவச்யகாபரிஹாணி, 15 மார்க்கப்ரபாவனை, 16 ப்ரவசன வத்ஸலத்வம்.

24. தீர்த்தங்கரர்:

| | | | |
|---|---|---|---|
| 1. | ரிஷபர் | 13. | விமலர் |
| 2. | அஜிதர் | 14. | அநந்தர் |
| 3. | ஸம்பரர் | 15. | தீர்த்தகிருது |
| 4. | அபிநந்தனர் | 16. | தருமர் |
| 5. | ஸுமதி | 17. | சாந்தி |
| 6. | பத்மப்ரபர் | 18. | குந்தரதர் |
| 7. | ஸுபார்ச்வர் | 19. | மல்லி |
| 8. | சந்த்ரப்ரபர் | 20. | முனிஸுவ்ரதர் |
| 9. | ஸுவிதி | 21. | நிமி |
| 10. | சீதலர் | 22. | நேமி |
| 11. | சிரேயாம்சர் | 23. | பார்ச்வர் |
| 12. | வாஸுபூஜ்யர் | 24. | வீரர். |

இந்த முறைப்படி இவர்களின் பிதா, மாதாக்கள்,

| | தகப்பன. | தாய. |
|---|---|---|
| 1. | நாபி ... | ... மருதேவி. |
| 2. | ஜிதசத்ரு ... | ... விஜயா. |
| 3: | ஜிதாரி ... | ... ஸேனா. |
| 4. | ஸம்வரர் ... | ... ஸித்தார்த்தை. |
| 5. | மேகோதரர்... | ... மங்கலா. |
| 6. | பிரதிஷ்டர்... | ... ஸுஸீமா. |
| 7. | மகாஸேனர் | ... பிருத்வீ. |
| 8. | சுக்ரீவர் ... | ... லக்ஷ்மணா. |
| 9. | திருடரதர் ... | ... ராமா. |
| 10. | விஷ்ணு ... | ... நந்தா. |
| 11. | வஸுபூஜ்யர் | ... விஷ்ணு. |
| 12. | கிருதவர்மா... | ... ஜயா. |
| 13. | சிங்கசேனர்... | ... சியாமா. |
| 14. | பானு ... | ... ஸுயசா. |
| 15. | விச்வசேனர் | ... ஸுவிர்தா. |
| 16. | ஸுரர் ... | . சிரா. |
| 17. | சுதர்சனர் ... | ... ஸ்ரீ. |
| 18. | கும்பர் ... | ... தேவா. |
| 19. | சுமித்திரர் ... | ... ப்ரபாவதீ. |
| 20. | விஜயர் ... | ... பத்மா. |
| 21. | சமுத்ரர் ... | ... விப்ரா. |
| 22. | விஜயா ... | ... சிவா. |
| 23. | அசுவஸேனர் | ... வாமா. |
| 24. | ஸித்தார்த்தர் | ... த்ரிசலா. |

முனிஸுவ்ரதரும் நேமியும் அரிவம்சத்திற் பிறந்தோர். மற்றைய இருபத்திரண்டு தீர்த்தங்கரர்களும் இக்ஷ்வாகு வம்சத்திற் பிறந்தவர்கள்.

63. சலாகாபுருஷர்கள்: *தீர்த்தங்கரர்...........24*
*சக்ரவர்த்திகள்......12*
*பலதேவர்கள்.......... 9*
*வாசுதேவர்கள்......... 9*
*பிரதி வாசுதேவர்கள்.. 9*

---
*ஆக.* 63
---

*ஜைனர்களுடைய பெருங்கிரந்தமாகிய* மகாபுராணம் *என்பது இவ்வறுபத்து மூவர்களின் சரித்திரமேயாம். இது வடமொழியிலுள்ளது.* ஸ்ரீ புராண *மென்பது இதன் மணிப்பவள ரூபமாம் கிரந்தம்.*

63. ஜினகுணஸம்பத்து: *ஷோடச பாவனை......16*
*பஞ்சகலியாணம்........ 5*
*ஸகஜாதி சயம்..........10*
*கர்மக்ஷயாதி சயம்......10*
*தைவீகாதி சயம்........14*
*அஷ்டமகா ப்ராதி ஹார்யம். 8*

---
*ஆக.* 63
---

குறிப்பு.—*ஜைனசமயக் கோட்பாடுகள் சேர்க்கப்பட்டிருப்பதால் இப்பரிபாஷை விளக்கமும் அதற்குச் சார்பாகச் சேர்க்கப் பட்டுளது : 4 அபிந்தனர் இதை அபிநந்தனர் என்றும் விஷமாய் என்றதை விஷயமாய் என்றும் படித்துக்கொள்க.*

*இங்ஙனம்,*

**தி. வே.**

## காப்பு.

உலக மேத்துங் குருகைய ருத்தமன்
சலச நாண்மலர்த் தாளிரண் டேத்துவாம்
நலய சோதர காவிய நன்கதை
யிலகு செந்தமிழ்க் கத்திய மேற்கவே.

## முன்னோர்மொழி.

நூ லுணர்வு நுண்ணொழுக்கங் காட்டுவிக்கு நொய்யவாஞ்
சால்பின்மை காட்டுஞ் சவர்ச்செய்கை...... பால்வகுத்துப்
பட்டிமையா லாகா பரமார்த்தம் பற்றின்மை
யொட்டுவோ னுய்ந்துபோ வான்.

# யசோதரன் சரித்திரம்.

## முதற் பாகம்.

நீர்வளம் நிலவளங்களோடு பல் வளங்களும் ஓங்குதற்கு முக்கியமாம் கடலினால் நாற்புறமும் சூழப்பெற்றுள்ள இவ்வுலகில் மனுக்குலத்தோராம் யாமெல்லோரும் ஒரு த்வீபத்தில் வாஸஞ் செய்கின்றோம். ஜம்பூத்வீபம் என்பது இதுதான். ஜம்பூ வென்பதைத் தமிழர் நாவல் என்பர். த்வீபம் என்பது தீவு. இத்தீவின் நடுவில் நாவல் மர நிறைந்த பொழிலுளது. அப்பொழிலின் கீழ் நிலமெங்கும் நாவற் பழச்சாறு பாய்ந்து சுவறிப் போவதால் அவ்விடமெல்லாம் மாற்றுயர்ந்த பொன் ஸன்னங்கள் விளைகின்றன. இக்காரணம் கருதியே ஜாம்பூ நதமென்பது மாற்றுயர்ந்த பொன்னின் பெயராகியது. தமிழர் இத்தீவை நாவலந்தீ வென்பர்.

இத்தீவின் ஓர்பிரிவின் பெயர்பரதம். பாரதகண்டமென்பதிதுவே. பரதனெனு மரசவம் சத்தார் வதிந்த காரணத்தாலிப்பெய ருண்டாயது. இமாலயத்திற்குத் தெற்காகவும் கன்னியா குமரிக்கு வடக்காகவும் விரிந்து பரவிக்கிடக்குங் கண்டந்தானிப் பரதகண்டம். நற்கருமானுட்டானத்தால் சுவர்க்க பதவியையும் மோட்ச பதவியையும் மாந்தர்க்கு எளிதில்அடைவிப்பது இப்பரதகண்டமே. இதுதான்உலகில் பெயர்பெற்றகருமஸாதனமாங்கண்டம். இந்நியாயம் இவ்வுலகில் வேறெவ்விடத்திலுமில்லை. இக்கண்டத்தில் ஔதயம் என்றொரு தேயமுண்டு (யௌதேயமென்பது வடமொழி நாமம்) நீர்மலிந்த ஏரிகுளம் ஓடை நதி கால்வாய்களும், பூஞ்சோலை, செந்நெல்வயல், தேன்பாயும் மலை, வனம், உய்யானம், செந்நெற்பயிர், கரும்புப் பயிர், தெங்கு, மா, பலா முதலிய பலவிருக்ஷங்களும் தாமரை நெய்தல் முல்லை மல்லிகை, வகுளம் ஜாஜி, சண்பகமுதலிய புஷ்பங்களும் ஆல் அரசு தேக்கு பிரம்மதரு, முதலியமரங்களும் அத்தேயத்தில்

மிகுந்திருப்பன. சோலைகளெல்லாம் மேகமண்டலத்தை யளாவுவன. கந்த மூல பலாதிகளும் உணவிற்கு யோக்கியமான காய்கறிவர்க்கங்களும் மலிந்துள்ளன. வஸந்தம் முதலிய ஆறுபருவங்களில் சீதமும் உஷ்ணமும் பற்பல விடங்களிலும் குறைந்தும் மிகுந்தும் வருடந்தோறும் நடைபெறுவதால் விசித்திரமாகிய மிருகங்களும் பட்சிகளும் கனிகளும் விருக்ஷங்களும் செடிகொடிகளும் பரதகண்டத்தி லுண்டாவதுபோ லுலகிலெங்கும் உண்டாவதில்லை. மனிதவாழ்க்கைக்கு இம்மணுலகில் சிறந்தொளிரும் கண்டமிதுவே.

இத்தகைய சிறப்புகள் மலிந்த ஒளதயதேயத்தில் ராஜபுரம் எனும் ஓர் பிரதான நகரமுண்டு. போகத்தாலும் செல்வத்தாலும் வேறு பல் வளத்தாலும் இந்நகரத்திற்கு இணை எங்குமில்லை. அளகா புரியை ஒருவாறு இணை கூறலாம். இத்தொன்னகரம் என்னகர்க்கும் முன்னுறும் நன்னயமுள தொன்றுகலின் பொன்னகரும் பின்னகரேயாம்.

இஞ்சி மஞ்சினை யெய்தி நிமிர்ந்தது
மஞ்சு லாமதி சூடின மாளிகை
யஞ்சொ லாரவர் பாடலொ டாடலால்
விஞ்சை யருல கத்தினை வெல்லுமே.

இந்நகரத்து மதில்களும் மாடமாளிகை கூடகோபுரங்களும் ஆகாயத்தை யளாவி மோலோங்கி விளங்குவன. மகளிரது பரத நாட்டியமும் ஆடல் பாடல்களும் திருவிழாக் கொண்டாட்டங்களும் நகரவீதிகளெங்கும் மிகுந்து ஒலிப்பன. தேவாலயமும் அந்தணர் வணிகர் முதலினோர் வீதிகளும் அறச்சாலைகளும் ஆவணமும் இவை போன்ற வேறு நகரச்சிறப்புகளும் குடிகொண்டிருந்தன. ஆனை குதிரை தேர் காலாட் பந்திகளுமனந்தம். இந்நகரத்தில் மாரிதத்தன் எனு மரசன் அரசாண்டு கொண்டிருந்

தனன். தசாங்கத்துடன் இவ்வரசனும் இவன் பிரஜைகளும் பண்டைக் காலத்திலும் மும்மடங் கதிகமாகப்போக போக்கியத்திலாழ்ந்து தம்மை மறந்து சுகித்தனர். விருதங்களையும் அவைகளின் பலமாம் தேவகதியையும் இவர்கள் மதிக்கவேயில்லை. இந்திரிய அனுபவமே பெருவாழ்வென்றெண்ணிக்கொண்டு இந்திரிய கிங்கரர்களாக விளங்கினர். அரசனு மவ்வாறொழுகி அரசுநடாத்தி வருகையில் இளவேனிற் பருவம் வந்தது.

கலி. 45586

கோங்கு பொற்குடை கொண்டு கவித்தன
வாங்கு வாகை விளைத்தன சாமரை
கூங்கு யிற்குல மின்னியங் கொண்டொலி
பாங்கு வண்டொடு பாடின வண்டினம்.

மலர்ந்த கோங்கு மரங்கள் பொற்குடை கவித்தன. வாகை மரங்களின் புஷ்பங்கள் சாமரை வீசின. குயிற் கூட்டங்கள் பல்லிய முழக்கின. வண்டுகள் பாட்டொலி எடுத்தன. முல்லை மௌவல் மாலதி முதலிய பூஞ்செடிகள் நர்த்தனமாடும் பெண்கள் போன்றன. அசோகம் நியக்குரோதம் சண்பகம் சூதம் முதலிய உயர்ந்த தருக்களாம் புருடர்கள் சந்தோஷம் விளைக்கும் தளிர்களால் அலங்காரம் செய்து கொண்டு எதிர் கொண்டழைக்க வஸந்தகால மாம் அரசன் வந்தனன். வஸந்தன் வந்தமை கேட்டு மாரிதத்தன் நகரத்தாருடன் ஓர் நாள் நகர்ப்புறத்துள்ள உய்யானவனத்தில் சென்று, வஸந்தோற்சவம் கொண்டாடிக் களித்தனன். எல்லோரும் தடாகங்களிலும் லதா மண்டபங்களிலும் கிரீடாசைலங்களிலும் வேறிடத்தும் கூடிக் குலாவி விளையாடிக்களித்திருந்தனர். இத்தருணத்தில் நகரமாந்தரிற் பலரும் ஒருங்கு திரண்டு அங்கு அரசனை நோக்கிக் கூறலாயினர்.

நாம் வஸந்தக் களியாட்டில் அமுதினு மினிய அழகிய மகளிர்களோடு விளையாடா நின்றோம். இக்காலத்தில் நகர தேவதையாகிய சண்டமாரி தேவிக்குப் பூஜைபோடும் வழக்கத்தை நாம் எல்லோரும் மறந்து விட்டோம். அது பெரும் பிழை. அத்தேவியின் கோபம் நேரிலோ, பல்பிணிகளும் உண்டாம். அதனால் பிரஜைகள் மடிவார்கள். வேறு துன்பங்களும் மிகும். நமது போகமும் குலையும். ஆதலின் மன்னனே அத்தேவியின் பூஜைக்கு யாம் எல்லோரும் புறப்படல் வேண்டுமென்றனர். இதனைக் கேட்ட அரசன் ஜின தருமத்திற் தெளிவில்லாததலின் துஷ்ட தேவதையின் வழிபாடு கொலைக்கிடமாகித் தீமை விளைவிக்கும் என்பதை உணராது அப்பூஜை ஓர் நல்ல கருமந்தானென்று எண்ணி, நல்லது அப்படியே நான் உடன் படுகின்றேன் என்று கூறி நகரத்தின் தென் புறத்தி லுள்ள சண்டமாரி தேவியின் கோயிலிடம் வெகு சிறப்போடும் சென்றான். இச்சண்டமாரி ஒரு துர்த்தேவதை. தர்மசீலம் உணராத மூடர்கள் வணங்கும் தேவி. பாபம் ஓர் வடிவு கொண்டது போலிருக்கும் அத்தேவியினது ஆலயத்தை வலஞ்செய்து அவளை வணங்கி நின்று தேவியே நீ எமது துயரங்களை எல்லாம் போக்கி அருளுகவென்று அரசன் வேண்டிக்கொண்டனன். ஆங்கு அப்பொழுது தேவியின் பூஜையை ஆரம்பிக்க எல்லோரும் சன்னத்தராய் இருந்தனர். தேவியின் பலிக்கென்று அங்கு, கோழி, மயில், பன்றி, ஆடு, எருமை, முதலிய விலங்குகள் அரசன தாணையின்படி இரட்டை இரட்டைகளாகப்பிணைக்கப் பட்டு நிற்பவைகளை அரசன் கண்ணுற்றான். ஜனங்களே நான் பின்பு எனது வெற்றிவாளினால் அழகிய வடிவமைந்த மானிடரின் இரட்டையைப் பலிகொடுத்துப் பூஜை செய்வேன். நீங்கள் விலங்கு ஜாதிகளின் பூஜையை முதலில் நிறைவேற்றக் கடவீரென்று அரசன் அங்கு வந்துள்ள தன் பிரஜைகளுக்குக் கட்டளையிட்டனன். உடனே அரசன் சண்டகருமன் எனும் தன் தளவாளை அழைத்து அவயவங்களில்யாதும் குறைபாடின்றி இணையில்

லாத மனிததம்பதிகளைக்கொணருதி என்று கட்டளையிட்டான். அத்தளவரனும் அவ்வகைத் தம்பதிகளைத் தேடிவர நகர்க்கேகி னன். அப்பொழுது சுதத்தாசாரியர் எனுமோர் திவிய ஞானி ஐந்நூறு முனிவர்களும் வேறு சிராவகர்கள் பலரும் சூழ வெகு தூரத்தினின்று தீர்த்தத்தலங்களைக் கண்டு வணங்கச்செல்லு கையில் அந்நகரத்தின் வெளியிலுள்ள உய்யானத்தில் வந்து தங்கியிருந்தனர். பிரயாணஞ் செய்தபோது நேர்ந்த தோஷங் கள் தீரும்படி பிராயச்சித்தம் முதலிய நியமங்களை நிறைவேற் றிவிட்டு அந்த ஞானி தன் பரிவாரங்கள் சூழ ஆசனத்தில் வீற்றிருந்தார். அன்று எல்லோரும் அங்கு உபவாசவிரதம் கைக்கொண்டிருந்தனர்.

அப்போழ்து சரீராதிகுணங்கள் நாள்தோறும் வளருகின் ற இளஞ்சந்திரன் போன்ற அபயருசியும் அவன் தங்கை அபய மதியும் அங்குவந்து அவ்வா சாரியருக்கு எதிரே சென்று வணங்கி அசைவின்றி நின்றனர். அப்பெரியோர் அவர்களுக் காசி கூறிப் பசியினல் நீங்கள் வாடி வருந்தி யுள்ளீர். உபவாச மிருத்தல் உங்களால் முடியாதாகலின் இந்நகரிற் சென்று இன்று ஆகாரம் கைக்கொண்டு நீங்கள் வருவீரென்று சட்டளை யிடவே அவ்விருவரும் அங்குக்கூடிய தவக் குழாத்தினரை வணங்கிவிட்டு வெளி யேறினர். சந்தனப்பூச்சும் மாலைகளும் ஆபரணமும் இன்றி வெள்ளை வஸ்திரம் தரித்து அபயருசி யும், அபயமதியும் உருவமைந்த அழகிய பால வடிவின ராகி பட்டினத்தடிகள் கூறியபடியே பிச்சை எற்கச்சென்றனர். அவர் கூறிய கவி.

வெண்பா.

இருக்கு மிடந்தேடி யென்பசிக்கே யன்ன
முருக்கமுடன் கொண்டுவந்தா லுண்பேன்—பெருக்க
வழைத்தாலும் போகே னரனேயென் றேக
மிளைத்தாலும் போகே னினி.

நகரத்துள்ளார்கண்டு மயங்கும் படி அந்நகரவீதியுள் சென்றனர்கள். செல்லுகையில் கண்ணெதிரே ஒருவில் வினளவில் ஜீவஜந்துக்கள் இல்லாதபடி பூமியைப் பார்த்துக் கொண்டும் பாதங்களைத் தரையில் மெல்லெனவைத்துக் கொண்டும் சென்றார்கள். இல்லறத்தார் யாரேனும் கருணை கொண்டு எதிர் கொண்டழைத்து விநயத்துடன் உணவளிக்கில் அதை ஏற்றுக்கொண்டு வீதியிற் போய்க்கொண்டிருந்தார்கள்.

௧௮.

வில்லின தெல்லை கண்ணுறேக்கிமெல் லடிகள் பாவி
நல்லருள் புரிந்து யிர்க்கண் ணகைமுத லாய நாணி
யில்லவ ரெதிர்கொண் டீயி னெதிர்கொளுண் டியரு மாகி
நல்லற வமுத முண்டார் நடந்தனர் வீதி யூடே.

I Iகைவர் காணினும் தயவு டனுபசரித்தஞ் சுந்தன்மையரா மிவரைச் சண்டகருமன் கண்டு மனமிளகிக் கலங்கினன். திருமகளாமொருபெண் இளைமயிலாத ஓர் மன்மதனுடன், இளம்பிராயமுடையராய், இப்படி வாட்டமுற்று இங்கே வந்த காரணம் யாதோவென்று அவர்களைச் சண்டகருமன் வினவினன். இரக்கம் இவன் நெஞ்சில் குடிகொண்டதாயினும் அரசன் கட்டளைக்குட்பட்டுத் தன் கையாள்களைக்கொண்டு இவ்விருவரையும் கைப்பற்றித்தூர்த்தேவதையாம் சண்டமாரி கோயிலின் வழிமேற் சென்றான். இச்சம்பவத்தைப் பாலர்களிருவரும் மனத்திலெண்ணினார்களே யன்றிப்பயந்திலர். தன் தங்கை அபயமதி ஒருக்கால்பயப்படுவாளோ வென்று நினைந்து அவள் முன் கையைத் தன் கையாற் பற்றிக்கொண்டு அவளைப் பார்த்து அபயருசி சொல்வ தானான். பரிவேடத்தாற் சூழ்ந்த சந்திரனு மின்னலும் போல இவ்விருபாலரும் அதட்டிப் பேசும் கிங்கரர்களுக் கிடையே சென்றார்கள். வாராய் என்தங்கையாம் நங்

கையே நீ பயப்படாதே. இவர்களால் ஆன்மாவாகிய நமக் கழிவில்லை. அழிவடையு முடல்கள் நம்முடையன வல்ல. அதற்கு நாம் அஞ்சுவதேன். நாம் பயங்கொண்டாலும் வரு வது வந்தே தீரும். அஞ்சுதலினுற் பலனில்லை. அஞ்சுதலே ஓர் துன்பம். அதனுல் நஞ்சுபோன்ற வினை நம்மைச் சூழ்ந்து தினந்தோறும் வருத்தும். வாராய் தங்கையே இதல்லாமலும் இதற்கு முன் நாமிருவரும் பல தரம் பாப கன்மோதயத்தினுல் விலங்கு ஜாதிகளில் பிறந்து வருந்திய போது நம்மவரே நம்மை வருத்தியதால் நாம் மாய்ந்ததை எல்லாம் ஆசாரிய ரால் அறிந்துள்ளோ மல்லவா? அஞ்ஞான வசத்தால் பஞ்ச பரிவர்த்தன ரூபமாய் நாமிருவரும் நால்வகைக் கதிகளில் பலதரம் எடுத்த சரீரங்கள் அளவற்றன. பேசவும் அரிதாம். நாமெடுத்த சரீரங்கள் எல்லாம் நம்மை விட்டு நீங்கின. அது போல இப் போதுள்ள நமது சரீரமும் நம்மைவிட்டு நீங்குவது சகஜமே யாம். அன்றியும் காற்றூடிபோல் நம்மை அலையச் செய் கின றநல்வினை தீவினையாமிரு காற்றுகளினுல் நாற்கதிகளிலும் பிறந்து பல சரீரங்களை எடுத்து அவைகளைப் போஷித்தும் ரக்ஷி த்தும் நாம் விருத்தி செய்துள்ளோம். ஐம்புலன்களையும் விஷயங் களில் செலுத்தித் திருப்தி செய்ததினுல் பாபம்பெருகியது. அதனுல் நமது சரீரம் பலபிறப்புகளிலும் நம்மை விடாது தொட ருகின்றது. இந்திரிய சுகத்தை வெறுத்துத் தபோ மார்க்கத்தில் ஆத்ம பாவனையைக் கைக்கொண்டு நாம் நடப்போமானுல் கன் மம் அழிந்து நாற்கதியின்சுழற்சியும் நீங்கும். இதுவரையில் இவ் வாறு சம்சார, துக்கத்தையே நாம் அனுபவித்தோம். அஃதெவ் வாறெனில் எழுவித நரகங்களிலும் அழலில் மூழ்குவதுபோல் நாம் புகுந்தோம். முதல் நரகத்து முதற்புரையில் மூன்று முழம் உன்னத மாகிய நரக சரீரத்தைப் பெற்றோம். பிறகு நரக நரகந் தோறும் முறை முறையே விருத்தியாகி ஏழாம் நர கத்தில் ஐந்நூறு வில் அளவுள்ள சரீரத்தை எடுத்தோம். அவ் வாறெடுத்த சரீரங்களோ அனந்தம்.

விலங்கின் கதியிலோ அணுவணுவாய்ப் பெருகி அங்குலி தொட்டு ஈரைஞ்ஞூறுயோஜனை அளவாம் நாறும் உடம்புகளைப் பெற்றோம். தீவினையினால் அவைகள் நம்மைச்சார்ந்து விலகின, மனிதகதியில் ஒரு முழமுதலாக ஆறுயிரஞ்சிலை அளவும் பெருகி நாமடைந்த உடல்களின் சங்கியையோ கடல் மணலினும் அதிகமாம். தேவர் கதியில் இருமுழம் ஆதியாக இருபத்தைந்து சிலையளவும் வளர்ந்து தவத்தினால் நாம் பெற்ற தேவ சரீரமும் அனந்தம். அவைகளின் அழிவும் அப்படியே, துன்பகாரணமாம், நரகயாக்கையும் இன்பகாரணமாம் தேவசரீரமும் முடிவில் அழிந்து ஒழியும். இந்திர போகத்திலிருந்த பல இந்திரர்களும் அவ்வாறு அழிந் தொழிந்தார்.

கவி

மக்களிற் பிறவி யுள்ளு மன்னர்தம் மன்ன ராகித்
திக்கெலா மடிப்ப டுத்துந் திகிரியஞ் செல்வ ரேனு
மக்குலத் துடம்பு தோன்றி யன்றுதொட் டின்று காறு
மொக்கநின் றார்கள் வையத் தொருவரு மில்லை யன்றே.

பிறப்பு மிறப்பும் பழைய ஆடையை நீக்கிப் புதிய அழகிய மற்றோராடையைத் தரித்தல் போலும். பழையவீடு இடிந்து மலின மாய்விட அவ்விடத்துப் புதிய மனை கட்டி யதில்வசிக்கப் புகுதல் போலும். ஆகையால் தங்கையே உனக்கு இப்பொழுது சம்பவித்துள்ள துயரத்திற்கு நீ அஞ்சாமல் தைரியத்துடனிருப்பாயாக வென்று அபயருசி கூறினன்:—

அதைக் கேட்ட தங்கை அபயமதி கூறுகின்றாள். எனதண்ணனாகிய நீவிர் மொழிந்த தெல்லாம் உணர்ந்து கொண்டேன். உடலில் நடுக்கமு மில்லை. மனதும் தெளிவு பெற்றுள்ளது. இதன்றி இச்சரீரம் எழுதாதுக் களாலாகியமல பாண்டம். புழுக்களுந் தோன்றி நெளிவதற்கு ஏற்ற விடம். ஒன்பது பொள்ளலாகிய அசுத்தமுடையதாகித் துற்கந்தமும் நிறை

ந்துள்ளது. இவ்வகை உடலைத்துறப்பதில் நமக்குப்பயமும் உதிக்குமோ. நாமிருவரும் ஆசாரியரிடத்தில் கேட்டுணர்ந்தபடி ஜின தருமத்தில் தெளிவடைந்திருக்கின்றோம். ஆன்மாவும் சரீரமும் வேறென்றும் சரீரம் ஆன்மாவுக்குத்துக்ககாரணமென்றும்ஆன்மா வாள்போன்றதென்றும் சரீரம் அதன் உறைபோன்றதென்றும்நாம்அறிந்துளோம். இச்சரீரத்தைத்துறந்துபரமாத்ம சொரூபத்தை அடைவது முக்கிய தருமமென்று தியானித்திருக்கின்றோம். ஆதலால் நீங்கள் இவ்விஷயத்தில் இனிவிசேஷமாக எனக்குச் சொல்ல வேண்டியதில்லை. நான் பெண் ஜன்ம முடையேனுதலால் என்மனம் ஒருவாறு சலனமுறுமோ வென்றெண்ணி அதனைச் சீராக்கத் தெளிவாய் எனக்கு உபதேசிப் பீராயின் நான் அப்படியே நடப்பேன் என்று சொல்லி இரண்டு கைகளையும் சிரத்தின்மேல் முகுளித்து நிற்க இருவரும் ரத்தினத்திரயத்தை நினைந்து அப்பாவனையோடு விளங்கினார்கள். பிறகு சித்தர், தீர்த்த கரர்கள், ஆசாரியர்கள், உபாத்தியாயர்கள், சர்வசாதுக்கள், என்னும் பஞ்சபரமேஷ்டிகளே, நமக்குச்சரண் அளித்துக் காப்பாற்றுபவர் என்றும், அபயருசி அபய மதிக்குச் சொன்னான்:—இவ்வாறு நினைந்துகொண்டே செல்லாநின்ற இளைஞரிருவரையுஞ் சண்டகருமனென்பான்விரைவாகக் கொடுபோய், அரசன் தன்னைச் சன்மானிக்கும் பொருட்டுச் சண்ட மாரிதேவதைக்கு எதிரிலிராநின்ற பலிபீடத்தின்முன் நிறுத்திவிட்டுத் தான் ஓர்புறம் விலகி நின்றான். அவனுடன் வந்த வேவு காரர்களுமப்படியே விலகி நின்றார்கள். இவர்களைக் கொலைசெய்து பலி கொடுக்க மாரிதத்தனுமரசன் தன் வீரவாளை உறையினின்றும் உருவிக் கையிற்கொண்டு அங்கு வந்தான். அச்சமயமங்குள்ள ஜனங்கள் அபயருசி அபயமதியா மிவ்விரண்டு இளைஞர்களை நோக்கி, வாரீர் பாலகர்களே இந்தச் சண்டமாரி தேவதைக்குச் செய்கின்ற இப்பூஜையினாலே இம்மகா ராஜனும் சரீர சுகவாழ்வுடையனாகி நெடுங்காலம் அரசாளக் கடவனென்று ஆசீர்வசனங் கூறுவீராகவென்று சொன்னார்கள். இதன்

கருத்து யாதெனிலோ வாளுக்கிரையாகிப் பலியாகு மிருவரு மொரேமனதாய்த் தேவியை வேண்டிக்கொண்டால் அத்தேவி யரசன் சுகமுடன்வாழ வரமளிப்பாளென்பதே. நாகரிகர்கள் சொன்ன மொழியைக்கேட்ட இளஞரிருவரும் அழகிய தம்முரு வம் சற்றுமசையாது நின்றனர். மனமும் சற்றேனுஞ் சலிக்க வேயில்லை. இருவரும் புன்னகை செய்துகொண்டு "இவ் வரசனும் சகல ஜீவதயாபரனுகி ஜினதரும மார்க்கத்தில் வழு வாது நின்று கொலை முதலிய பாதகங்கள் புரியாது பவ நோயை யழிக்குந் திறம்பெற்றுப் பல்லாண்டு பல்லாண்டாக உலகங்காத்து வாழக்கடவன்." என்று கூறினர்.

இதைக் கேட்ட மாரிதத்தன் இவர்களது வடிவழகையும் சாமுத்திரிக நூல் கூறும் நல்லிலக்கணங்களையும் வசன ஸாமர்த் தியத்தையும் மரணத்தருவாயில் எள்ளளவும் பயமின்றி நிற்குநிலை யையும் பார்த்து ஐயுற்றுப் "பேதைமையொன்றுப் பேயுமிரங்கும்" எனும் வாக்கின்படியே கொலை செய்ய மனந்துணியாது பின் வருமாறு நினைப்பதானன் "இவ்விளைஞ ரிருவரும் நம்மைச் சோதித்தறியவந்த தேவரோ அல்லது விஞ்சையரோ இவ்வில க்கணமும் எழிலும் தைரியமும் வசனசாதுரியமும் க்ஷத்திரிய குலத்திலுதித்தவர்க்கேயல்லாது பிறரிடமுண்டாகா. இவர்கள் நிற்கும் நிலையும் மிகவும் ஆச்சரியமுள்ளதேயாம்" என்றான். நீவிரிருவரும்சிரித்த காரணம்யாது. நீவிர்யாவர்? இந்நகரின்கண் வந்தகாரணம்யாது? கூறுமினென்றும் அரசன் அவர்களை வினு வினன். பக்கம்நின்ற நாகரிகர்கள் சிறுவனுண்மையினும் இச் சிறுமியின்திடமேதிடம்அதுநம்மாற்பேசவுமரியதேஎன்றார்கள்.

அபயருசி பின்வருமாறு அரசன் வினவிற்கு விடை கூறி னன். "வாராய் அரசனே முன்செய்த தீவினைப்பயனும் துன்பங்களுக்குப் பயந்தாவதென். அதற்குடன்படுதலே நலம். சுகத்தை யனுபவித்தல் போலவே துக்கத்தையும் அனுபவித்

தல் வேண்டுமென்பது கருதியே யாங்கள் மரணபயமின்றி நிற்கின்றோம். மாவினற் செய்த கோழியைச் சண்டமாரி தேவதைக்கு நாங்கள் முன் பலி கொடுத்ததினல் விளைந்த பாபவசத்தால் விலங்கு ஜாதியிற்பிறந்து பல துன்பத்துளாழ்ந்தோ மாகையா லந்த நினைவு எங்களிடத்திலுதிக்கவே இந்த அரசன் பல ஜீவவதைப்பலனும் இப்பாவகர்மத்தால் எந்நரகத்திற் சென்று எவ்வகைத் துன்பத்திற் காளாவனேவென்று நினைத்துச்சிரித்தோம். எங்களது வரலாறும் பரமதார்மி கருக்கல்லது கொலைத்தொழில் புரியும் விவேகமிலார் காதிற்புகாது. நீங்கள் செய்ய நினைக்குங் கருமத்தைச் செய்வீராக. ஆவது ஆகட்டும்'' என்றார்கள். இதைக்கேட்ட அரசன் கருணைகூர்ந்து தன் கைவாளை ஒருபுற மெறிந்துவிட்டான்.

குறள்.

*தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி*
*தின்னுயிர் நீக்கும் வினை.*

இதன்படியே அரசன் மனம் கொலைக்கஞ்சியது. இது கேள்வியாலும் ஒழுக்கத்தாலும் நேர்ந்ததன்று. முன்செய்த நல்வினையின் பலனேயாம். அரசன் கூறுகின்றான். "அபயருசியே நீதான் எனக்குரியபோதக'' னென்றுகூறி வேறோரிடஞ் சென்று நாகரிகரருகிருக்க அபயருசியை நோக்கி "உம்மிருவரது பவத்தையும் அதன் நீக்கத்தையும் பற்றிய கதையைக் கூறியருளுக'' வென்றனன். இவ்விரண்டிளைஞரையும் அங்குக் கண்டோர் யாவரும் கரைந்துருகினர். உலகுய்யும் பொருட்டுப் பொன்வரைக் கருகில் அறமழை பொழிவதுபோல் அபயமதிக் கருகில் நின்று அபயருசி மொழியலுற்றான்.

**வா**ராய் மாரிதத்தராஜனே உனது புத்தியின் நிலை வெகு சிறப்புடைய தேயாம். வெகு ஜீவவதைக் காயத்தமாயிருந்த நீங்கள் அதினின்றும் விலகிக் கருணைக்காளாயது ஆச்சாரியமே. யான் கூறுங் கதையைத் திரிகரணத்தோடும் கேட்பீராக. அவ்

வாறு கேட்பதால் இருவினையாமழுக்கு நீங்கி உண்மை யறிவு திக்கும். தீவினைபுரிய மனந்தி கிலடையும். மோக்ஷபதமும் கிட்டும். கேட்போர் பாவனராகி நல் நிலையிற் சலியாது நிற்பர். மலமூத்திர மலிந்த பண்டமா மிவ்வுடலில் ஆங்காங்குத்தோன்றும் மனோசஞ்சலமும் மாறும். ஐம்புலனுகர்ச்சி நாடிச்செல்லுமவாவும் அழியும். மனதிற் கொலை முதலிய தீய சங்கற்பங்களும் நாடா. மாதர்போகமும் போயொழியும். முயற்சியினாலேயே ஜனன மடைந்தோர் நற்பல னடைவார். பிறப்பதில்லை யென்றும் இருவினைப்பயனும் நம்மை யணுகா தென்றும் அறிவிலார் கூறும் மயக்கமொழிகள் நீங்கிச் சிறந்த தாகிய ஜின தருமமார்க்கத்தில் முயற்சி கொள்ளும்படி செய்யும். வீடடையும் பக்குவமுண்டாக்கி அதை யடைவிக்கும். இவைகளே யான் கூறும் கதையின் ஸாரம்.

மலமலி குரம்பை யின்கண் மனத்தெழு விகற்பை மாற்றும்
புலமலி போகத் தின்கண் ணுசையைப் பொன்று விக்கும்
கொலைமலி கொடுமை தன்னைக் குறைத்திடு மனத்திற் கோலச்
சிலைமலி நுதலி ணார்தங் காதலிற் றீமை செய்யும்.

பிறந்தவர் முயற்சி யாலே பெறுய னடைவ தல்லா
லிறந்தனர் பிறந்த தில்லை யிருவினை தானு மில்லென்
றறைந்தவ ரறிவில் லாமை யதுவிடுத் தறநெ டிக்கட் [ருன்.
சிறந்தன முயலப் பண்ணுஞ் செப்புமிப் பொருண்மை யென்

ஜினதருமத்தை நன்குணர்ந்து ஐந்து சீல முதலியவைகளை அனுட்டிக்கும் எமது ஆசாரியர்களிடம் சிலங்களை நாங்கள் கேட்டுணர்ந்தபடியே எங்கள் கடந்த ஜன்மங்களை நாங்கள் இப்பொழுது இக்கதையி லெடுத்துரைப்பதால் நீங்களிதில் திடநிச்சயங்கொள்ளல் வேண்டும்.

பிறகு அங்குள்ளோரெல்லாரும் களிப்புற்று விநயத்துடன் கதை கேட்கலுற்றார்.

## இரண்டாம் பாகம்.

பாரதகண்டத்திலுள்ள, நீர்வள மமைந்த கழனிகளும், நதிகளும், தேனிறால் பாயும் உயர்ந்த வரைகளும் வாவி, கூப தடாகங்களும் தாமரை நெய்தல் முதலிய மலிந்த ஓடைகளும் உய்யானங்களும் கரும்பு கமுகு தென்னை மா பலா நிறைந்த கழனிகளும் சோலைகளும் எங்கும் காட்சிதரும் ஆரியா வர்த்தமாம் புண்ணிய பூமியில் அவந்தி யெனுமொருதேசமுண்டு இதை மாளவ தேசமென்றும் வழங்குவதுண்டு. உஜ்ஜயினி எனும் மகாநகரந் தான் இத்தேசத்தின் ராஜதானி. கீர்த்தி பெற்ற விக்கிரமாதித்த னரசுபுரிந்த நகரமிதுவே. அவன் உக்கிரதவஞ் செய்து அங்குள்ள ஒரு காளியின் அனுக்கிரகம் பெற்று மனித ரியற்கைக்குப் பொருந்தாத பல அற்புதச் செய்கைகள் செய்து வந்தான். இவ்வாறாக உஜ்ஜயனி முன்காலத்துக் காளியின் வரப்பிர சாதம் பெறு தற்கு உரிய மகாசிறப் புற்றோங்கிய ஓர் நகரமா யிருந்தது.

நிலமகள், கலைமகள், மலர் மகள், ஜயமகள்களுக் கெல்லாம் உறைவிடமாய் அகழும் மதில்களும், தேவாலய, பிர்ம்மாலயங்களும், வணிகர் முதலியோர்களின் வீதிகளும் அந்நகருக்கணிகளாக விளங்கிக் கொண்டிருந்தன. ராஜவீதிகளும் உள் வீதிகளும் மேல் மாளிகைகளும் பார்ப்பவர் கண்களைக் கவரும் சிறப்பு வாய்ந்து, கொடி மரங்களும் நிசான்களும் மலிந்து இரவும் பகலும் ஓய்வின்றி விழாவும் ஊர்கோலமும் வாத்திய ஓசைகளும் வேதகோஷமும் பரத நாட்டியத்தொனியும் மகளிர்கள் சிறார்கள் பாட லோசையும் ஓய்வின்றிக் கடலொலிபோல் மலிந்திருந்தன. ஆவணத்தின் ஒலிக்கோ ஓய்வில்லை.

மந்திரசாலை ஒரு புறம். ஆயுதசாலை வேறோர் புறம். வைத்தியசாலை மற்றோர் புறம். ஆனைப்பந்தி குதிரைப்பந்தி

தேர்ப்பந்திகள் நிறைந்துள்ள சாலைகளும் கலைபயில் சாலைகளும் பிறிதிடங்களிலும் அமர நகரத்தின் நடுவில் அரண்மனை இந்திரன் மாளிகைபோன்று விளங்கியது. இந்நகர்க்கரசன் தைரிய வீரிய பராக்கிரமங்களில் இணையில்லாதவன். மகாமேருப் போன்றவன். பிரஜைகளைப் பரிபாலிப்பதில் இந்திரன் போலன்றவன். தன் பிரஜைகளெல்லாரையும் களிப்புறும்படி செய்வதால் சந்திரன் போன்றவன். சகல கலாவல்லமையிலும் புஜபலத்திலும் இவனுக் கொப்பாரும் மிக்காரும் எங்குமில்லை. இவ்வரசன் பெயர் அசோகன் என்பது. இவ்வரசன் எழிலுக்கும் நன்மைக்கும் வெற்றிக்கும் ஏற்கச் சந்திரமதி யென்பாள் பட்ட மகிஷியாயினள். இவளழகும் நலமும் கூறவும் எழுதவும் அரிதாயினும் சில கூறுகின்றோம். முககாந்தியைக் கண்ட சந்திரனுங் காந்துவான். மந்த கமனத்தைக்கண்ட அன்னமும் நொந்து புறம் போகும். சாயலைக் கண்ட மயிலும் சாயும். அழகாற் கமலையுங் குலைவாள். கலையாற்கலைமகளும் பொறையால் நிலமகளும் தலைகுனிவார்கள். இத்தம்பதிகளிருவரும் சகல சம்பத்து முடையராய் ஆதிவியாதிகளின்றிக் களிப்போடு இஷ்ட காமபோகங்களை இந்திரனும் சசியும்போ லனுபவித்து வந்தார்கள். பிரஜைகளெல்லாரும் ராஜவிசுவாசிகளாய்ச் செல்வ மிகுதியாற் களிப்புற்று வாழ்ந்து கொண்டிருந்தார்கள். அரசனும் அரசியும் காமபோகத்தி லினைபிரியாது சுகித்ததின் பலனாகச் சந்திரமதி ஓராண் மகளைப் பெற்றாள். அப்புதல்வனைக் கண்டு அசோகனுகிக்கலைநிறைந்த சந்திரனைக் கண்ட கடல்போற் பொங்கி அசோகன் களிப்புற்றான். பேரி மிருதங்க முதலிய வாத்திய கோஷத்திடை அரசன் புத்திரப் பேற்றிற்குரிய திருவிழாக்கொண்டாடினன். தான தருமங்களளவின்றி நகரத்துளார்க்கும் பிறர்க்கும்செய்து ஜாதகருமத்தை நிறைவேற்றி யசோதர னெனத் தன்மகனுக்கு நாமகரணமும் செய்தான்.

## குறள்.

பெருமையவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற.

எனு மிம்முது மொழிக்கு யசோதர னிலக்கிய மாயினன். இக் குமாரனும் சிசு வெனும் பருவம் நீங்கிச் சிங்கம் போலவும் புலிக்குட்டிபோலவும் வளர்ந்து ஐந்து வயதாகி யானை யேற்றம் குதிரை யேற்றம் வில்வித்தை முதலிய அரசர்க் குரிய வித்தை களிலும் வேறு கலைகளிலுந் தேர்ந்து இணையில்லாத அரசிளங் குமரனாகி யௌவன மடைந்தனன். இவனிடம் ராஜ சின்னங் கள் நிறைந்திருந்தன. இவ்வரசிளங் குமரனைக்கண்டு மங்கை மார் இவன் மன்மதனோ கோடி சூரியனோவென்று மயங்கும் படி இவனுக்கழகு வாய்ந்திருந்தது. இவன் வயதில் முதிர்ந் தமை கண்டு பெற்றோர் இவனுக்கொத்த அழகமைந்த ஒரு கன்னிகை யெங்குளாள் என்று தூதர்களைக் கொண்டு உசாவி வந்தார்கள்.

ஓர் நாள் ஓர்தூத னரசனைக் கிட்டி வணங்கி நின்று பின் வருமாறு கூறலுற்றான். மகாப்பிரபுவே நல்லுருவு மழகு மமைந்த ஓரரச கன்னியுளாள். அவள் பாத மிரண்டுந் தாமரை போலும். கணைக்கால்களோ அம்பறாத்தூணியை நிகர்க்கும். இரண்டு தொடைகளு மிரண்டு வாழைகளை யொக்கும். இடை யோ கண்டோர் ஒடியும் ஒடியுமென்றஞ்சுந்தகைய மின்னற் கொடியைப் புரையும். நாபியோ வலஞ்சுழித் தோடும் கங்கை நீர்ச்சுழியை மானும். இச்சுழியாம் புற்றினருகிலிருந்து மேலே கருநாக மொத்தவயிற்று மயிரொழுங்கு மிருக்கும். இரு வரைகளுக்கு மேல் மூன்று வரைகளுள்ள கண்டம் கமு கினைக் கடுக்கும். தோள்களிரண்டும் பசிய மூங்கிலை யினை யும். அதரம் பவளத்தை நேரும். முறுவல் நித்திலகாந்தியை நிகர்க்கும். நாசி எட்பூவைப் பழிக்கும். கபோலம் கண்ணடியை யொக்கும். கொல்லும் வேலும் கூற்றமும் அஞ்சும் கண்கள் நீ

லோற் பல மன்னவை. காதுகள் வள்ளைக் கொடியி னிலைகளே யாம். புருவம் இந்திரன்வில்லே. முககமலந்திங்களே. அளகம் சைவலத்தையும் கருமணிலையும் வண்டினத்தையும் போன்று பார்த்தோர் கண்களிக்கும் நிறங்கொண்டுளது. சிரசிலுள்ள அளகத்தைப் பார்த்தால் கண் வேறொன்றை நாடா தாகலால் பாதம் முதற் சிறப்புச் சொல்லி அளகத்தில் மனம் சென்று நிற்கும்படி இங்குக்கூறப்பட்டது. அக்கன்னிக்குத் தேவரம்பை யுமிணையாகாள். அவளழகிற் கேர்ப்ப அவள்பெயர் அமிர்தமதி யென்று கூறினன்.

அரசன் சுப முகூர்த்ததினமொன்று நிச்சயித்து, மண வோலைகளை நாடெங்கு மனுப்பி நகரலங்கரித்துப், பல அரசர்களும் உறவினரும் சம்பந்திகளும் சூழ்ந்தவிவாகமண்டபத்தில்முரசமுதலிய வாத்தியங்கள் ஒலிக்க நடனசங்கீதங்கள்முழங்கயசோதரனுக்கும் அமிர்தமதிக்கும் விவாக உற்சவங்கொண்டாடினன். மணவொலியும் முரசொலியும் பேரியொலியும் தினந்தோறும் முழங்கின. மணமகனும் மணமகளும் காமனுமிரதியும், சந்திரனு முரோகணியும், நாகும் விடையும், களிறும் பிடியும் போலப் புண்ணிய வசத்தாற் சுகபோகிகளாகித் தடாகம் உய்யானம், கிரீடாசைலம் முதலிய விடங்களிற் சென்று களியாட்டயர்ந்தனர். காமப்பயிரை இருவரும் வளர்க்கவே அமிர்தமதியும் கருப் பமுற்று, மேனிபசந்து முதிர்ந்து என்று மிலா அழகுவிளங்கியது. வலம்புரிச்சங்கு அழகியமுத்தை யீன்றதுபோல் ஒரு புத்திரனை அவள் பயந்தாள். அரசன் ஜாதகருமத் திருவிழாக்கொண்டாடிக் கோதானம் சொன்னதானம் விரைதான முதலியவெல்லாம் வந்தோர்க்கெல்லா மளித்துப் பேரிசைகொண்டனன். குமாரனுதித்தபின் இவ்விசை அதிகம் பரவியதாதலின் குமாரனுக்கு யசோமதி யென்று நாமகரணஞ் செய்தனன்.

இப்புத்திரன் ராஜபோகத்தில் வளர் பிறைச் சந்திரன் போன்று வளர்ந்து வருநாளில் அசோக மகாராஜன் புத்திர

பௌத்திரர்களோடு குலாவிக் களிப்புற்றிருந்தனன். ஓர் நாள் அசோகன் றனது வடிவத்தின் சாயலைக் கண்ணுடியிற் பார்த்தான். அப்பொழுது தன் சிரசின் மயிரில் ஓர் நரை மயிரிருக்கக் கண்டனன். இந்நரைமயிர் யௌவன நிலைமாறி முற்ற மூத்தமையைக் காட்டுங் குறியாகின்றது. மாதர்களிதனைக் காணில் காமபோக நுகர்ச்சிக்கு முன்போலிட மில்லை யென்று கணவன் நரைத்த கிழவனென்று வெறுப்பர். மன்மதனும் தன் பாணங்களை அவன் மீதெய்யான். இளமையின் பயனிதுவாயின் அதனை வளமையுடைய தென்று எங்ஙனம் நாம் மனத்துள் ளெண்ணுவது. நமதுறவினர் தன்மை யுமிதுபோலவேயாம். ஆதலின் அரசுரிமையை நாம் இனி ஒழிப்பது நலமென்று அசோகனெண்ணினன்.

ஒருமுளை, முளைத்துப் பெருத்து மரமாகிச் சாகோபசாகைகளுடன் தளிர் இலை காய் பழங்களோடும் விளங்கும். பிறகு அம்மரம் உலர்ந்து போய் ஜீரணதசையை யடையும். மனிதனும் அவ்வாறே சிசுவாய்ப் பாலனாய் யுவாவாய்க் கிழவனாய் ஓர் நாளில் யமனோலை வரத் தனதுடலை நீப்பான். அம்மரம் காட்டுத்தீ முதலியவைகளா லழிவது போலவே மனிதருடலும் பல நோய்களுக் கிடமாகித் துன்புற்று அழியும். இவ்வுடல் அஞ்ஞான ரூபம். இதை வளர்த்துப் பாதுகாத்து இந்திரியங்களை வாட்டாது திருப்தி செய்வது, பாலைவனத்தில் கானலை நீரெனக்கருதி ஓடி யலைந்து உயிரிழக்கும் மானின் திருப்தியோ டொக்கும். முன்செய்த வினைப்பயனால் நற்பதமும் செல்வமும் நாம் பெற்றுள்ளோம். இதனினும் மும்மடங் கதிகமாக, நாம் சற்கரும வழியி லிறங்கி நற்பதம் பெறுவதே மனித ஜன்மமடைந்ததின் பலனும். மனிதசுகம் காற்ற திடைப்பட்ட தீபம் போலும் என்று அசோகன் சிந்தித்தான். காவியப்பொருளினிது விளங்க ஒருதாரணம் கூறுகின்றோம்.

ஒருவன் மதயானைக்குப் பயந்து ஓடி இருண்ட ஓர் பாழ்ங்கிணற்றில் விழுகின்றான். அக்கிணற்றின் மேற்புறமெல்லாம் முட்செடிகளும் கொடிகளும் நிறைந்திருந்தன. கிணற்றினடியோ சர்ப்பங்களுக் குறைவிடம். கிணற்றுள் விழுந்தவன் அச்சர்ப்பங்களைக் கண்டஞ்சிக் கைக்கெட்டும் படர்ந்த கொடிகளைப் பிடித்துக்கொண்டு தொங்குகின்றான். கைப்பற்றிய கொடிகளி னடிகளை எலிகள் கடித்துக் கொண்டிருந்தன. இவனைத் துரத்திய ஆனையோ கிணற்றுமட்டுஞ் சென்று அங்கிருந்த மரத்தை அசைக்க அம்மரத்தின் நுனியிலிருந்த தேன் கூடு கலைந்து அதிலிருந்த தேன் கீழே சொட்ட, அதைக் கிணற்றி னுட்டொங்குகின்றவன் நாக்கால் நக்கிச் சுவைத்தான். தேன் பூச்சிகளும் நாலாபக்கம் வந்துஅவன் உடலெங்கும் கடித்தன. அதை அவன் நினையாதிருந்தான்.

உட்கருத்து: மத்தகரியின் வருகையே எமன்வருகை. இருண்டகிணறே ஸம்ஸாரம். மூஷிகம் மனிதரின் வாழ்நாள். சர்ப்பங்களே நரகங்கள். மதுபிந்துவே ஜனனத்தின் அற்பசுகம். மக்ஷிகங்களே நான்குவித துக்கம்.

. . .

இவ்வாறு நினைந்து சரீரபோக போக்கியங்களிலாசையற்றுப் புத்திரனாகிய யசோதரனை அழைத்து அசோகன் கூறுகின்றான். வாராய் புத்திரனே இந்த ராச்சியத்தை ஏற்றுக்கொண்டு சகலரையும் ரக்ஷிப்பாயாக. பசுக்களுக்குப் புல் முதலியன அளித்து காப்பாற்றிப் பாலைநாம் கறந்துகொள்வதுபோல, ஆறிலொருபங்கு தீர்வை வாங்கிக்கொள்வது க்ஷத்திரியர் தருமமாம். பிரஜைகளை வருத்தித் துன்புறுத்துவது பசுக்களின் மடியையறுப்பதும்போலாம். தருமம், பொருள், காமம் எனுமிந்த மூன்று புருஷார்த்தங்களை நன்கு பகுத்தறிந்து நீதிவழுவாது நடப்பதே அரசர் தருமமாம். ஜீவகாருணிய முடையவனாய் பூஜை, விரதம் தவவொழுக்கங்களைக் கைக்கொண்டு இல்லறநெறிவழுவா

திருப்பதுதான் அறம். பொருளாவது, கொடுங்கோன்மையின்றி நீதிவகையாற் சேர்ப்பதாம். காமமாவது உட்சத்துருக்களாம். அறுவர் தலையெடாதிருக்கும்படி சற்புத்திரப்பேற்றின் பொருட்டு விதித்த காலங்களில் மட்டும் காமபோகத்தைத் தன் மனையாளிடம் புசிப்பதாம். வரம்புகடந்த பெண்போகத்தா லரசிழந்தோர் பலர். அரசாளுகை ஒருபெருஞ் சுமைசுமப்பதுபோலாம். அதைத்தாங்கிக்குடிகளைக் காத்தல் மிக அரியது. அரசன் ஒருபுறமாகவும் மந்திரி முதலினோர் மற்றொரு புறமாகவுமிருந்து அரசுபுரிந்தால் ஆளுகை சுலபமாகும். மந்திரி முதலிய துணையாளர்களை உன் கண்போல வைத்து விஷயங்களைக் கண்டறிதல்வேண்டும். உனதுபுத்தி விசேஷத்தால் ராச்சியம் மேன்மேலுமோங்கும்படி செய்வாயாகவென்று ராசதந்திரத்தின் ஸாரத்தை எடுத்துக் கூறிச் சுபமுகூர்த்தத்தில் யசோதரனும் தன் மகனுக்கு அசோகன் ராச்சிய பட்டாபிஷேகம் செய்வித்துத் திருமுடியும் கவித்தான். பிறகு பலவரசர் தன்னைச் சூழ்ந்துவர அசோகன் தவவேடம் பூண்டு வனத்திற்கேகி சுதத்தனென்னு முனிவரை வணங்கிபிறப்பு, அதன்காரணம், மோக்ஷம், என்பவைகளின் பேதங்களைக் கேட்டுணர்ந்து ஜினதீட்சைபெற்று வனத்தில் சாதனை செய்து வந்தான். யசோதரனும் உஜ்ஜயினி நகரத்தில் அரசுபுரிந்து யாரு மிணையில்லையென்னும்படி மனுநெறி பிறழாது தனது வெண்கொற்றக்குடை நீழலில் பிரஜைகளைக் காத்து வந்தான். செல்வச் செருக்கினால் திரிகரணங்களிலுஞ் சினக்குறி தோன்றப் பொங்கி மறுகலுற்றான். அரசரைக் கொன்றொழித்துப் பொருள் தேடுதலிலும் நாடு காத்தலிலுமே கவலைமிக்கு ஜினதரும வழியை முற்றுமறந்து விட்டனன். அவனோர்நாள் இந்திரன் சபைபோலும் தன் நாட்டிய சாலையை யடைந்தான். அங்குச் சிற்றரசரோடும் நாகரிகரோடும் தோற்கருவி துளைக்கருவி நரம்புக்கருவிகளாகிய வீணை வேணு முழவ முதலிய பல்லியங்களில் கைதேர்ந்தோர் தம் அற்புதச் செய்கையால் விளைந்த மனோகரமாகிய கீத வாத்திய பரத நாட்டியங்

களைக்கேட்டுள்ளம் பூரித்தான். ஹாவ, பாவ விலாச, விப்பிரமங்களால் அரம்பையர் முதலிய தெய்வப் பெண்கள் இம்மாநிலத்திழிந்தனரோ வென்று பார்த்தோர் மனங்கரைந் துருகும் படியான அழகும் அவயகாந்தியுமுள்ள நாடகப் பெண்கள் மேக ஜாலத்தைக்கண்ட மயூரங்கள்போல ஆனந்தத்துடன் நவரஸங்களும் பொங்கக் கண்களையும் மனதையும் கவரும்படி நடனஞ் செய்தனர். மற்றோர் நாள் யசோதரன் அரண்மனையினுப்பரிகையில் சந்திரனுதயமான பின்பு தன் பட்டத்தரசி அமிர்தமதியுடன் அழகிய சித்திர நிறைந்த திரைகளுக்கிடையில் தசாங்க தூபங் கமழப் புஷ்பமாலை செண்டுகள் சுகந்த முதலிய பரிமளங்கள் வீச முத்துமாலை அரதன மாலைகள் பக்கத்தில் அசைந்தாட ரத்நகம்பள விதானத்தோடு விளங்கும்யானைத்தந்தத்திலுற் செய்த கட்டில் இடப்பட்டிருந்த சயநகிரகத்தை யடைந்தான். கவரிகள், இருமருங்கும் வீசத் தீபமும் வாசனைப் பண்டங்களு மேந்திய மகளிரும் சூழ்ந்து போயினர். ஹம்ஸதூலங்களாலும் பஞ்சினாலும் நிறப்பிய மெத்தைகளின்மேல் காம்பரிந்த முல்லை ஜாஜி மல்லிகை முதலிய மலர்கள் பரப்பப்பெற்றிருந்தன. பால் நுரை போன்ற மெல்லிய வெண்பட்டாடை விரிக்கப்பெற்று மிருந்தது. வாரவிலாஸினிகள் தாம்பூலம் பன்னீர் புனுகு பால் இனிய சிற்றுண்டிக ளேந்தி நின்றார்கள். அரசன் கட்டிலின் மீதேறி உட்கார்ந்தனன். சுகந்த மலர் மாலைகளையும் சிறு மாலைகளையும் அணிந்துகொண்டும் முத்து, பவளம் அரதனம் முதலிய மணிமாலைகளையும் ஆபரணங்களையு மணிந்துகொண்டும் மேகலை பாதச்சிலம்பு கிண்கிணிகள் கலீர் கலீரென்னவும் கலவைச்சாந் தணிந்துகொண்டு உதய சூரியன் போன்றொளிருஞ் செம்பட்டாடை உடுத்து ஒரு பூங்கொடி அசைந்து மின்னி நடப்பதுபோலவும் அன்னப்புள் மெல்லென வசைந்து அழகாய் நடப்பதுபோலவும் அழகிய சாயலுடைய மயில் ஒயிலாய்ச் சிறகு விரித்து நடையாடல்போலும் ஒருபூமாலை விண்ணுலகிலிருந்து மண்மிசை வந்து துவண்டு நடை

யாடுதல் போன்றும் அமிர்தமதியாம் தேவி அரசனருகில் சென்றனள். சமய சஞ்சீவிபோல் இவர்களிருவரும் எப்போழ்து வருவார்களென்று கையும் கணையுமாய்க் காத்திருந்த அனங்கனும் தன் பூங்கணை மாரிகளை முன்னினு மதிவேகமாக எய்தனன். இருவரும் உடனே காமக்கடலிலிறங்கி யாடினர். உடனே ஆலிங்கன முதலிய உபசாரங்களோடும் ஊடல் கூடலாம் முகவாச தாம்பூலாதிகளோடும் அனங்கனுக்குப் பூஜைபுரிந்து, காமரஸமா மமுதினைமன்மதனுக்குநிவேதித்துத் தாமும் அளவின்றிப்புசித்து நித்திரைகொண்டனர்.

கவி.

இன்னரிச் சிலம்புந் தேனு
மெழில்வளை நிரையு மார்ப்பப்
பொன்னவிர் தாரோ டாரம்
புணர்முலை பொருது பொங்க
மன்னனு மடைந்தை தானு
மதனகோ பத்தின் மாறாய்த்
தொன்னலர் தொலைய வுண்டார்
துயில்கொண்ட விழிக ளன்றே.

அரசனு மரசியு மிவ்வாறு களைத்து விழுந்து நெடுநேரந் துயின்றனர். விடியற்காலமு நெருங்கியது. அரண்மனைக் கருகில் யானைச்சாலையி லிருந்த ஒருவன் அப்பொழுது நித்திரை தெளிந்து தன் கண்டத்தொனியால் மாளவபஞ்சமம் கொஞ்ச விசைப் பாட்டைப் பாடினன். அமிர்தமதி இப்பாடலைக் கேட்டு மதி மயங்கிக் கலக்க முற்றாள். அவள் மனம் வேறொன்றையும் நாடவேயில்லை. பெரும் பிரமைகொண்டனள். சங்கீத வலையி லகப்பட்டுக் கொண்டனள்.

இவ்வாறு மதிமயக்குற்று வேடன் கையிலகப்பட்ட பறவைபோலக் கீதவலையி லகப்பட்டுத் துயர்க்கடலு ளாழ்ந்தனள் சூரியோதய மாகியும் அவ்விசை பாடினவன்மேல் மோகமுற்று ஆடையணிகல னெல்லாங் குலையத் தனியே நின்று அவள் சோகித்தாள். குணவதி யெனுஞ் செவிலித்தாய் இவளைக்கிட்டிப் பின்வருமாறு கேட்கலுற்றாள். வாராய் புத்திரியே "ராஜஸ்திரீகளுள் நீ இந்திராணிபோல்வாய். தேவேந்திரனை யொத்தவுனது புருஷனும் அரசனுடன் கூடி ஸரஸஸல்லாப குதூகலத்தாற் களித்துவரு முனக்குத் திக்கற்றவள் போல் தனியெ நின்று நிலை குலைந்து நல்வார்த்தையும் பேசாது ஏகாந்தமான இவ்விடத்தில் கவலை நேர்ந்த தென் கூறுவாயாக."

இதைக்கேட்ட பிறகும் காமராகத்தால் இதமகித மறியாளாகி அமிர்த மதிமறுமொழி கூறியதாவது "வாராய் அம்மையே எனது மனமாகிய மதம் பட்ட யானையை ஒருவன் விடியற் காலத்து அவனது கீதமாம் அங்குசத்தை அவன் வாயாகிய கையினுற் பிடித்து யான் வருந்தும்படி பலவாருக எனது செவியுட் புகுத்தித் துன்பஞ் செய்தனன். அத்துன்ப மென்னுற் சகிக்க அரிதாயது. என் மனமும் நொந்து புண் பட்டுளது. அதற்கேற்ற பரம ஔஷதம் அப்பாடகனே. அவனை எனதிட மடைவிப்பாயாக."

இதைக்கேட்ட குணவதி காரணமிஃதென்றறிந்திருந்தும் ஒன்று மறியாள் போன்று பேசலுற்றாள் "வாராய் புத்திரியே இரவில் நீ கண்ட தீயகனவினுல் உன் மனமிவ்வாறு வருந்துகின்றது போலிருக்கின்றது. இனி இதனையொழித்து உஜ்ஜயினி நகர்க்கரசனும் யசோதர மகாராஜனுடன் சந்திரனும் உரோகணியும் போலக்கூடிச் சம்பாஷணைசெய்து ஏகாசனத்தில் வீற்றிருந்து களிப்புற்றுப் பதிவிரத நெறியிற் சலி

யாதுபோக போக்கியங்களை யனுபவித்துக்கொண்டு பிரஜை களைக் காத்தருளுவாயாக.''

என்ற இப்போதனை அமிர்தசெவியி லேறவேயில்லை. நாய் பன்றி இவைகட்கு இயற்கையாம் தீக்குணங்களுக் கிலக்கானள். தீஞ்சுவைக்கனி எதிரிலிருக்க அதை நீத்து எட்டிக்கனியை ஒருவர் விரும்புதல் போலவும், நோயுற்றார்க்குப் பால் கசந்து காட்டுதல் போலவும், இவள் இதமுணராது பின்வருமாறு குண வதியைக் நோக்கி மறுபடியுங் கூறுகின்றாள்.

" அக்கிதம் பாடிய மனோகரனை புருஷனுடன் யான் கூடும்படி நீ செய்விப்பாயேல் அதனால் விளையுஞ் சுகம் தேவர் களுக்கும் கிடைத்தற்கரிய தொன்றாகும். எனக்கது கிட்டு மேல் எனது மதனநோய் தீர்ந்து நெடுநாள் வாழ்வேன். அப்படி நேர்வதின்றேல் இப்பொழுதே மரண மடைவேனுதலின் சீக் கிரமாகவெனது கோரிக்கையை நிறைவேற்றுவாயாக '' என்ற னள். குணவதி இதனைக்கேட்டு ஐயோ நானென்ன செய்வேன். பிரமன் இவளுக் கிணையில்லாத போகபோக்கியங்களையும் செல் வ மிகுதியையும் பதவியையு மளித்தும் இவளது புத்தியை மட் டுமீனமாக்கிய தந்தோ கொடிது கொடிது என்று பலவாறு நினைந்து ஒருவாறு தனக்குள்ளே நொந்துகொண்டு இரவிற் றனியே சென்று இவ்விதம் பாடி மயக்கிய கள்வனெங்குளனே அவனழகும் வடிவும் எத்தகைமையவோ வென்று தேடிக் கொண்டு செல்லுகையில் யானைச் சாலையில் பாகன் அஷ்டபங் கன் என்பானைக் கண்ணுற்றுத் தன் கண்ணையும் மூக்கையும் மூடிக்கொண்டாள். இவனே யானை மூத்திரத்திற் கிடக் குங் குட்டரோகி. இவன் விகாரங்களைக் கேட்டால் தலைவி வெறுப்படைவாளென்று தலைவியைக்கிட்டிக் கூறுகின்றாள்.

கவி.

நரம்புகள் விசித்த மெய்ய
    னடையினிற் கழுத னைந்தே
திரங்கிய விரலன் கையன்
    சிறுமுகன் சினவு சீரிற்
குரங்கினை யனைய கூனன்
    குழிந்துபுக் கழிந்த கண்ணன்
நெருங்கலு நிரலு மின்றி
    நிமிர்ந்துள சிலபல் லென்றாள்.

வாராய் தேவியே இனிய ஓசையைக் காட்டி அசுணப் புள்ளைக் கைப்பற்றும் வேடன்போலத் தனது பாடலால் உனது மனதைவாட்டியவன் நமது பட்டத்து யானையின்பாகன். அவன் பெய ரஷ்டபங்கன். அவன் குஷ்டிரோகி. உடலெங்கும் துர்க்கந்த முடையவன். விரல்கள் குறுகி உருவழிந்துள்ளன. நடையோ, முட்டிக் கால்களோடு கழுதை நடை போன்றுளது. உடலெங்கும் நரம் பெழுந்துளது. ஆழ்ந்து குழிந்த கண்ணன். விலகி நீண்டகோணலான பற்களுள்ளான். குரங்கைப்போற் கூனன். இவ்வித விகாரம் என்னாற் கூறற்கரிது. அவன் உனக்குத் தகாத ஈனன். உன்மனதை அவனிடஞ் செலுத்தாது திருப்பி உனது நிறையைக் காத்துக் கொள்ளென்று குணவதி கூறினாள். இதனைக் கேட்ட பின்னும் அமிர்தமதி மறுத்துங் கூறுகின்றாள். நீ கூறுவதா லென்ன பயன். எனதாசையோ முன்னமே அவனிடஞ் சென்று விட்டது. விசேஷித்துச் சொல்வதா லென்னபயன். காரிய முடிந்தபின் காரணத்தை ஆலோசித்தல் பயனற்றது. நல்லார் நெஞ்சம் எதை நாடுகிறதோ அதுவே எல்லாமாகும். அஃதில்லாதபோது குலம் கல்வி அழகு முதலியன பயனின்றாம். காமதேவன் யாரிடம் நம்மைச் சேரும்படி பாண மெய்கின்றானோ அவனே நமக்குரிய சுந்தரன்.

அவனை என்னிடஞ் சேரும்படி செய்விப்பது உனக்கு முக்கிய கருமமாம். தாமதியாது நிறை வேற்றுவாயாக வென்றனள். இவள் பழிப்புக்கிடமாய் நீசனது சேர்க்கையால் கெட்டழிவா ளென்று குணவதி தன் மனத்தி லெண்ணியும் நிர்ப்பந்தத்தினுல் வேறுவழி காணுது யானைப் பாகனை அழைத்து வந்து ஏகாந்த மான ஸங்கேதத்தலத்தி லிருக்கச் செய்து இவளையு மவனிடம் சேர்ப்பித்துச் சுகிக்கும்படி செய்தனள். பாகனை இருட்டில் அமிர்தமதி அநங்கன்தானென் றெண்ணி மோகச் சலதியிற் குதித்து அமுது புசித்தனள்.

இவ்வாறு கள்ளவழியாற் சுகானுபவ நடந்தேறி வருங்கால் தன்தேவி தனதிடம் முன்போற் களிப்பதின்மையை இங்கித மறியு மரசனுணர்ந்து கொண்டனன். இதன் காரணமறிவான் அரசனோர் நாளமளியில் பொய்யுறக்க முறங்கினன். அதைத் தேவி யறியாளாகி மெய்த்துயில் என்று நம்பிக்காம நுகர்ச்சி யின் பொருட்டு அரசனை நீத்துக் குறியிடஞ் சென்றனள். அர சனோ ஈதறிந்து துயிலொழித்து வாளுங்கை யனுமாகித் தன் தேவியின்பின் மறைந்து சென்று, உண்மை கண்டுக்கொள்ளக் காந்து நின்றுன். முன் சென்ற தேவியைப் பாகன் கண்டவுட னே மயிரைப் பிடித்திழுத்துத் தரையிலழுத்தி இருகையாலும் பலபடி புடைத்துத் தாமதித்ததேன் கூறென்று காலால் நிலத் திற் றள்ளித் துகைத்தான். இருள் மூடிய சந்திரன்போல் அமிர்தமதியுங் காலரற்றுகைப் புண்டதால் விம்மி விம்மிப் பே சாது சிறிதுநேரம் நிலைகுலைந்து நிற்கவே அட்டபங்கன் பிறகு தேவியினடி மேற் சென்னி சூட்டிப் போற்றவே அவளுந்தே றிஜாரனை நோக்கி ஐயனே கோபியாதொழிக யான் பெரிய பா வம் புரிந்தேன் அஃதியாதெனில் அரசனோடாசனத்தி லிருந் தேன். தாமதநேர்ந்தது. அதனையான்கூறுதொழிந்தேன் என்ற னள். கற்பகம் நேரப்பெற்றூர் அதைவிட்டுவிலகி நிற்பதுலகி லில்லை. இனி உம்மை யன்றி எனக்குக் காதற்றுணை யாவரொ ருவருண்டோ புகல்வீராக வென்று தேவி அப்பாகனுடன் கூறி

மகிழ்ந்தனள். இதனை மறைந்து நின்று கண்ட அரசனும் கோபமிகுதியால் தீயெழவிழித்து இவர்களைக் கைவாளினுற் கொன்றுவிடத் துணிந்தான். உடனே காத்து வாளை விலக்கி நின்று தெளிவுடையனுகித் தனக்குள்ளே கூறலானுன். மாதர்கள் யாராயினும் கொலைக்குரியரல்லர். அறிவிலானுகிய பாகனும் அவளோடொப்பான். இதன்றி நமது வாளுக்கிலக்காவார் பகையரசரேயன்றி ஈனஜாதியானும் நமது பணிசெய்வோனு மாகான். எனப் பலவாறு ஆலோசனை செய்து இழித்துக் கூறிவிட்டு மாதர் போகத்தை வெறுத்துப் போந்து தன்னமனி மீதேறித் தன்னையே முனிந்துகொண்டு காமனைக் கடிந்து கூறிப் பெண்போகம் நீங்கித் துறப்பதே சிறப்புடையதென்ருன்.

## காமத்தால் விளையுந்தீமைகள்.

எண்ணம தலாமை பண்ணு
மிற்பிறப் பிரிய நூறு
மண்ணிய புகழை மாய்க்கும்
வரும்பழி வளர்க்கு மானத்
திண்மையை யுடைக்கு மாண்மை
திருவொடு சிதைக்குஞ் சிந்தை
கண்ணெடு கலக்கு மற்றிக்
கடைப்படு காம மென்ருன்.

அரசவம்சத்திற் பிறந்தும் அரசபோகத்திலு மிராநின்ற இவளையும் அஞ்ஞான வசத்தால் சண்டாளனுக்கு அடிமையாக்கிய துர்ப்புத்தியையுடைய மன்மதன் செய்கையைவிட்டுத் துறப்பதே மிகச்சிறப்புடையதென்றனன். உலகத்திற் பெண்கள் தங்களை மணந்தோர்க்கே எப்பொழுது முரியவரெனும் நியாயங் காணப்படுவதேயில்லை. பூர்வபுண்ணிய முடையர் யாரெனினும் அவர்களைப் புணர்ந்து நிற்பர். ஆதலினிப் பெண்ணி

னத்தவரை விலக்கிக் கொள்வதே சற்கருமமா மென்றனன். முன்போல மற்றோர்நாளரசன் சபையில் மந்திரிகளும் சுற்றத்தவரும் பிறரும் சூழச் சிம்மாசனத்தில் வீற்றிருந்தனன். தான் அமிர்தமதியிடம் கண்ட விசேஷத்தை எவர்க்கும் வெளியிடாதிருந்தனன். பட்டத்தரசியும் வழக்கம்போல் அரசனினருகில்வந்து அர்த்தாசனத்தில் வீற்றிருந்தாள். அதைக்கண்டு அரசன் நகைவிளைக்குஞ் சில மொழிபகர்ந்து தன் கையிலிருந்த நீலோற்பல மலரைத் தேவியின்மேல் வீசலும் அவள் சகிக்க முடியாதவள் போலமாயத்தால் சபையோர் காணுமபடி மூர்ச்சை யடைந்தவள்போல் கீழே விழுந்து விட்டனள் பரிசனங்களிதைக் கண்டு சைத்தியோப சாரங்கள் செய்து பனிநீர் தெளிக்கவே மூர்ச்சை தெளிந்தெழுந்தவள்போல் எழுந்துட்கார்ந்தாள். இவளிடமுண்டாகிய விராகத்தினுல் அரசன் மனவெறுப்புடையனுனன். பின்பு இராச்சியம் முதலிய ஸம்பத்துகள் மிகுந்திருந்தும் இப்படிப்பட்ட துர்மதியுடைய பெண்ணின் சேர்க்கையால் ஆர்த்தத்தியானமும் இரவுத்திரத்தியானமும் வளருகின்றன. அதனுல் திக்கதிக்குக் காரணமாகிய தீவினை நம்மைச் சூழுமாகையால் ஸ்திரீ முதலிய பரிவாரங்களினின்று நீங்கி ஜினதீக்ஷையைக் கைக்கொள்வோ மென்றெண்ணித் தன் தாய் சந்திரமதிக் கறிவிக்கலாமென்று அவளிருந்த அரண்மனைக்குச் சென்று அவளைக் கண்டு, விலகி நின்று இனிக்கடல் சூழ்ந்த புவியை நீயே யாளுவாயாக வென்றனன். "உன் அழகிய உருவம்வாடி முகபங்கயமு மழகிழந்திருப்பதென்? பிணியுள தெனக்கொண்டு என்மனம் என்னை வருத்துகின்றது. உரைத்தருளுவாய்" என்று தாய் கூறினள். அரசன் விடை கூறுகின்றன். வாராய் தாயே, ஒருநாளிரவில் நான் நித்திரை புரிந்தபோது இரண்டு தீய கனவுகள் கண்டேன். சந்திரனுடைய காந்தியாம் ரோகிணி தேவி சந்திரனை விட்டு நீங்கி மண்ணிடை மழுங்கியதாகக் கண்டதொன்று. இருளுக்கேதுவாகிய மேகபடலம் அப்பொழுது சூரியனை மறைத்ததாகக் கண்டது

மற்றொன்று. இவ்வாறு கண்டது முதற்கொண்டு மனத்துயரால் என் சரீரம் முதலியன மாறிவிட்டன என்றனன். நகர தேவதையான சண்டமாரியெனுங் காளிதானிவ்வாறு உனதிடம் தீய கனவுகாட்டு வித்துள்ளாள். அதனுற்றீமை விளையுமென்று புத்திரனே நீ பயங்கொள்ளாதே. உனக்குரிய தேவதையாங் காளியை நீ பணிந்து பூஜித்தாலவள் உனது தீமைகளை நீக்கிப் பல நன்மைகளையு மாக்குவாள். ஐப்பசிமாதம் சுக்கிலபக்ஷம் அட்டமிதிதி சேரும் மங்களவாரத்தில் நீ அவளுக்குப் பலி கொடுத்துப் பூசித்தால் உன் பலியை யேற்றுக்கொண்டு அவள் களிப்படைவாள். இதை நினைந்து நீ ஒருதகரைக்கொடு போய் அத்தினத்தில் காளி மகிழும்படி நீ பலி கொடுத்தா லத்தேவி கனவின் கெடுதியை நீக்கி உன்னைக் காப்பாற்றுவாளென்றாள்.

கருணையின்றி இப்படித்தாய் கூறியதைக்கேட்டு யசோதரன் இரண்டு கைகளாலும் காதுகளைப் புதைத்துக்கொண்டு கூறுகின்றனன். வாராம் தாயே நீ கூறியது நீசகுலத்திற் பிறந்து அஞ்ஞானத்தால் விவேகமென்பதையே யறியாத துஷ்ட ஜனங்கள் செய்வதற்கு அடுத்தது. நாம் உத்தமமான க்ஷத்திரிய குலத்திற் பிறந்து ஜினதருமவுணர்ச்சியால் நல்வினை தீவினைகளையும் அவைகளா லுண்டாகுந் துக்க முதலியவைகளையும றிந்துள்ளோம். எனதுயிரை விட்டேனும் யான் பிறவுயிரைக் காவாதிருத்தல் சால்புடையதோ? என்னுயிர்க்கு க்ஷேமத்தை நாடி யான் பிறவுயிரை வதைக்கில் இவ்வுலகை யான் காப்பதின் பயனென்னவாகும். உலகிலுள்ள வுயிர்கெட்கெல்லாம் அரசனே காப்பவனு மல்லவோ. எனதுயிரின் வாழ்வை யெண்ணி எளியோரை யான் வதைபுரியின் வானிடத்தில் நமக்கு நேரும் நன்னெறியும் விலகிவிடும். தன் சரீரான்ம சுகத்தைமட்டும் நாடி வேறொன்றிலும் மனம் நாடாத மனிதரின் வாழ்வு இம்மண்ணிடத்திலேயே நிற்கும். இதல்லாமலும் அன்னையே நின்குலத்தில் முன்னரசாண்டோர் ஜீவவதை செய்தோ

ருமல்லர். நாம் இன்று புரியுங் கொலைப்பாவம் மேலாற் பல இடர்களை விளைவிக்குமன்றி நீ உரைத்ததெல்லாம் நன்மை விளைப்பனவல்ல என்று கூறினன். இதனை கேட்டு நீ எனது சொல்லை மறுத்தனை நீ கொடியவனென்று கூறித் தாய் சினங் கொண்டனள். நீ உயிர்க்கொலைக் கஞ்சுவாயேல் மாவினாற் கோழியொன்று செய்து அதைக் கொன்று பலிகொடுத்துக் காளியை மகிழ்வியென்று பிறகு கூறினள்.

தாய் கனவின் பயன் கருதிக் கூறிய கூற்றோ ஒன்று பிறகு கூறிய உறுதிமொழியோ வேறொன்று. இவ்வாறு வினையின் பயனோவெவ்வேறாய் இடரும் பலவாகி எனதிடத்து விளைந்துளதாகையால் யார்க்கும் வினைப்பயனை விலக்கலரிதேயாமென்று தனக்குள்ளே அரசன் கூறிக்கொண்டு உயிர்க்கொலையாவது இதுதானென்று பகுத்தறியுமுள்ள முடையவனாக விருந்தும் தாய் கோபித்துக் கூறிய செய்கைக்கு அஞ்சி அரசன் சம்மதித்தான். ஜினதருமத்தின் உண்மையை யறிந்து திடமாய் நிற்கு முறுதியிலானாதலின் அவ்வாறுடன் பட்டான். தாயும் கைவேலையில் வல்லானொருவனைக்கொண்டு கோழி யொன்று மாவினாற்செய்வித்துப் பஞ்சவர்ணங்களையும்அதிலூட்டிஉயிர்க்கோழிதானெனும்படி செய்வித்தனள். அரசனு மதைக்கைக்கொண்டு தாயுடன் சண்டமாரியாங் காளி கோயிலுட்சென்று வலஞ்செய்து மனத்துயர்மாற்றிய யருள்வாயாக வென்று கூறித் துதித்துப் பூஜித்து எதிர்முகமாய் பலி பீடத்தருகில் நின்று தன் கைவாளினா லக்கோழியின் கழுத்தை வெட்டினன். அக் கோழி கூவிக்கொண்டே நடுங்கி வீழ்ந்திறந்தது. அரசனிதைக் கேட்டு வாளை யொருபுற மெறிந்துவிட்டுக் கலங்கலுற்றான். கொலைப்பாவம் நம்மைப் பல பிறவிக்கழைப்பதுபோலு மிக் கூவிய தொனி யென்றான். அஞ்ஞானியாகிய தாயின் சொல்லைக்கேட்டு நான் செய்யத்தகாத காரியத்தைச் செய்ததால் இத்தகைய சம்பவம்நேர்ந்தது. அமிர்தமதியின் களவொழுக்கமு மென்

னைக் கொல்லும் போலும். தீவினைகளென்னைக்கொன்றொழிக்கும் போலுமென்று இவ்வாறு நினைந்தழுங்கினன். இவ்வகைக் கவலையுடன் யசோதரன் தன்னகர்க்கேகி மந்திரி முதலினோர் முன்னிலையில் நன்னாளில் தன் மகனுக்குப் பட்டாபிஷேகம் செய்து மகுடஞ் சூட்டினான். தவம் புரிய வனம் புகுதற்காயத்தமானான். இதனை அறிந்த அமிர்தமதி தன்னை அவமதித்தனரசனென்று பின்வருமாறு அத்தீயவள் யோசனையொன்று செய்தாள். அவள் அரசனை நோக்கி வாரீர் சுவாமியே நீங்கள் மாத்திரம் தீக்ஷைக்குப் போகின்றீர்களே. அத்தீக்ஷையே எனக்கு மாகக்கடவது. இன்றையதினம் எனது கிருகத்தில் தாங்களும் தங்கள் தாயாரும் மைந்தனுங் கூடிப் போஜனம் செய்தால் உமது குமாரனை அரசனுக்குவோ மென்றாள். இவள் மனநிலையை யரசனறிந்தவனாயினும் அவளைப் பார்த்து நீ கோரியபடியே ஆகுகவென்று கூறிவிட்டுத் தன் தாய் மனையிலிருந்தான். ஒருவர்க்குத் தீங்கு நேருங்கால் வஞ்சனையாற் செய்யும் நயமும் நன்னய மென்றே தோன்றும். விடங்கலந்த தேனைச்சேர்த்து லட்டுவர்க்கங்கள் செய்து தாயையும் அவள் மைந்தனும் தனது நாயகனையும் தன் மனைக்கழைத்து மைந்தனோடு பலருங்காணஉணவளித்தாள். சந்திரமதியும் யசோதரனும் உணவிற் கலந்திருந்த நஞ்சினால் மாண்டொழிந்து விலங்குவர்க்கத்தில் ஜனன முற்றார். பார்த்தற்கு மிசையாத அட்டூழியங்கன்றனைத் தன் மனத்தெண்ணி நாட்டிற் கரசனாகிய யசோதரனுக்கு மரணமுண்டு பண்ணிய அமிர்தமதி பெண்களுட் கொடியவள் கொடிய பாவி என்றனர் ஊரார். இந்த அரசனும், இவன் தாய் சந்திரமதியும், சண்டமாரிக்குச் சகல ஜனங்களும் ஜீவனைக் காவு கொடுத்துப் பூஜித்துத் தங்கள் தங்கள் பல விருத்திகளையும் பெற்றுள்ளதைப் பார்த்திருந்தும் ஜீவனில்லாத மாக்கோழியைக் கொடுத்ததினா லிந்த மரண நேர்ந்ததென்றார் சிலர். யசோதரனறப் பொருளை யறியாதிருந்தான். தவத்தினரிடஞ் சென்று பணிந்துமிலன். அதர்மவழியில் மயங்கி உலகில்

அரசாட்சி யொன்றினிடமே மகிழ்ச்சிகொண்டான். அளவின்றி இளமாதர் போகத்து ளாழ்ந்திருந்தான். முடிவிலோ துன்மரணம் சம்பவித்தது. இவனுக்குச் செல்லுதற்குரிய நற்கதியில்லை என்றார் வேறு சிலர். நகரத்தவரும் பிறரு மிவ்வாறு நினைந்து வாடினர். அரசன் தேவியாம் அமிர்தமதியோ தான் கருதியதை முடித்துக்கொண்டாள். மனதில் உண்மையில் வாட்டமுள்ளவள்போலத் தன் மகனைப் பார்த்து மைந்தனே என்னருகேவா வென்றழைத்துக் கூறுகின்றாள். நீ தனியனாகும்படி உன் பிதாவாம்என துநாயகனை நான்விட்டுநீங்கிய துஎனது வினைப்பயனே. அது பற்றி உன் மனத்திலுள்ள நோயை விட்டொழிப்பாயாக. முடிகவித்துக்கொண்டு உலகுக்கொரு நாயகனாகி அரசாளுவாயாக வென்று தன் மகன் யசோமதிக்கு நன்மொழி கூறிக்களிப்புற்றிருந்தாள்.

அமிர்தமதி சுப முகூர்த்ததினத்தில் தன் புத்திரனுக்கு இராச்சிய பட்டாபிஷேகம் செய்வித்து மணிமகுடம் சூட்டி ராச்சிய சம்பத்தில் ஸ்தாபித்தனள். யசோமதி ராஜனும் ஸகல ராச்சியங்களையும் ஏற்றுக் கொண்டு அமைச்சர் தானைத் தலைவர்களோடு கூடி அரசபோகத்தில் மிக்க ஊற்ற முள்ளவனாய் ஜினதரும முணரானாகி அரசாண்டு கொண்டிருந்தான். தன திஷ்டம் நிறைவேறியதால் அமிர்தமதியும் அதிகம் களிப்புற்று அஷ்டபங்கனோடு கூடிக் கொண்டு மிக்க காமராக ஸல்லாப வார்த்தைகளால் காமபோக மனுபவித்துக் கொண்டிருந்தனள்.

வாராய் மாரிதத்த ராஜனே பாப கருமோதயத்தினாலாகிய பலனித்தன்மைத்து. பெண்ணினத்தாரின் வஞ்சனை யால் வந்த மாய மாகிய செய்கைகளின் தன்மையும் இத்தன்மையாயிராநின்றது ஸம்ஸார துக்கத்தின் விசேஷமு மிவ்வகையாயிருக்கின்றது. அரசர்கள் புத்தியின் மையால் அரசாளும் விதாயகமும் இவ்வித மிருக்கின்றது. நீ இவைகளின் தன்

மைகளை யனதில் தெளிந்தாலோ சிக்கக் கடவாய் என்று அபய ருசி போதித்தான்.

இனிமேல் யசோதரராஜனும் அவன் தாயாகிய சந்திர மதியும் பாப கருமோதயத்தால் விலங்குகதியில் பிறந்தனர். அதெப்படி யென்றுலோ, கூறுகின்றேன் கேட்பாயாக."

---

## மூன்றாம் பாகம்.

அரசனும் யசோதரன் விந்த மெனும் வரையிலுள்ள ஓர் மயிலின் வயிற்றில் முட்டை வடிவங் கொண்டுவளர்ந்து கொண் டிருந்தான். வனவேடன் ஓர் நாள் அம்மயிலைத் தன்கை அம் பினால் எய்தான். ஆங்கு மயிலின் முட்டை வெளிப்பட்டது. அதனை அவ்வேடன் அருகிருந்த வேடுவச்சியிடம் கொடுத்துக் கோழி முட்டைகளோடு அதனையும் வைத்து வளர்த்து வரும் படி திட்டம் செய்தனன்.

இஃது திவ்வாறாக அரசனின் தாய் சந்திரமதி என்பாளும் உஜ்ஜயினி நகரத்தின் பறைச்சேரியில் நாயாகப்பிறந்துவளர்ந்து கொண்டிருந்தாள். இந்நாயையும் மயிலையும் வளர்த்தவர்கள் அவைகளின் வடிவழகையும் சிறப்பையுங் கண்டு அவை களை யசோமதி யரசனிடம் கொண்டுபோய்க் காட்சிக் குரிய பொருளாகக் கொடுத்தார்கள். அவைகளைக் கொண்டுவந்தவர்க ளுக்கு அரசன் சன்மான மளித்தான். இம்மயிலையும் நாயையுந் தன்னரண் மனையிலேயே வைத்துச் சீராக வளர்த்துவரும்படி அரசன் கட்டளை யிட்டனன்.

முன் மன்னனு யிருந்த பொழுது கண்டெழுந்து வாய்பு தைத்து நிற்றற்குறியாரிடத்து மயிலாயினபின் அம்மயில் எழு

ந்து நிற்கும்படி யாயது. முன் தன்னைக் கண்டஞ்சு பவர்க்கு இப்பொழுது, தான் கண்டஞ்சும் நிலையும் அதற்கு நேர்ந்து விட்டது. அழகிய இளமாதர்கள் கால்வருடப் பஞ்சணைமேல் முன்றுயின்ற மன்னன், மயிலாகித் தன் தோகையொடு பிறர்க் கஞ்சி யொதுங்கு நிலையும் சம்பவித்தது. ஆபரணமணிந்த அழகிய மகளிர்பொற்கலத்தில் அளித்தபாலடிசிலுண்ட அரசப தம்நீங்கி இப்பொழுது மயிலாகி அரண்மனைக்கு வெளியிடத்தில் இரைநாடிச்சென்று வருந்துங கதியாயிற்று. இவ்வாறாகவே சந்திரமதியும் முன்னரசியாயிருந்த போதுள்ள நற்போக்கியங் களினின்றும்நீங்கி நாயாகி வீதி தோறும் சென்று நகரத்துள்ளா ருண்டபின் எடுத்தெறியும் எச்சிலையும் வேறு ஈனமான உணவு களையும் தின்று கொண்டும் கண்டோர் வெருட்டி யடிக்கப் பயந் தோடிக் கொண்டும் அகழியின் நீரினருகாகவும் சாக்கடை நீரி னருகாகவும் சஞ்சரித்துச் வருந்துங்கதி வந்துவிட்டது.

உஜ்ஜயினிநகரத் தரண்மனைக் கருகிலுள்ள சித்திரகூட மண்டபத்தில் ஓர் நாள் அமிர்தமதி யென்பாள் அஷ்டபங் கனுந் தன் கள்ள நாயகனோடு காமகேளி ஸல்லாபத்தோடு கூடிக் குலாவிரமித்துக் கொண்டிருந்தாள். இத்தருணத்தில் அரண்மனையில் வளர்ந்து கொண்டிருந்த மயில் அம்மண்ட பத்தில் தற்செயலாய்ப் போய்ப்புகுந்தது. அங்கு நடந்த செய் கையைப் பார்த்து அது சகியாது சடுதியிலந்த அஷ்டபங்கனி டஞ்சென்று அவன் கண்களை மூக்கினாற் கொத்திக் களைந்து விட்டது. இதைக்கண்ட அமிர்தமதி கடுங்கோபங்கொண்டு அம்மயிலின்பேரிற் கற்களையும் கட்டைகளையும் எடுத்தெறிந் தாள். அதனால்மயிலின் தலை நொறுங்கவே அதுகண்டகதப்பி ராணனாகிக் கீழே விழுந்துவிட்டது. இதனை அரண்மனையில் வளர்ந்து கொண்டிருக்கும், முன் சந்திரமதியாயிருந்தநாய் அங்குச்சென்று வாயாற் கௌவிக் கொண்டுபோய் யசோமதி யரசன்முன் போட்டது. அரசனும் மயிலின்மீதிருந்த அதிகப்

பிரியத்தினால் நாய்தான் மயிலை இவ்வாறு கடித்துக் கொன்று விட்டதென்றெண்ணி வெகு கோபங்கொண்டு அந்நாயைப் பலகையா லடித்துக் கொன்றுவிட்டனன். மனிதப் பிறவியி லிருந்த பகைமை பிறகு விலங்கு கதியில் வந்தபோதும் நீங்காது இவ்வாறு இடர்ப்படுத்துமென்பது இதனால் இனிது விளங்குகின்றது. இதன் காரணம் மனித ரறிவிற்கு எட்டாத தேயாம். முன் அரசனாயிருந்து பிறகு வினைவசத்தால் மயிலாய்ப் பிறந்து மாணமடைந்த மயில் மறுபடியும் விந்தமெனு மலையின் காட்டில் ஓர் முள்ளம் பன்றியாய்வந்து பிறந்து விட்டது. அரசனாற் புடைப்புண்டு மாண்ட நாயும் முன் அரசியா யிருக்கையில் புரிந்த தீமையின் பலனாக நாயாய்ப் பிறந்து மாண்டதுமன்றி மறுபடியும் அவ்விந்தவரைக். காட்டில் ஒரு கரும்பாம்பாய் ஜனித்தது. இப்பன்றியும் பாம்பும் ஒரே காட்டில் சஞ்சரித்துக் கொண்டிருந்தபோது பன்றி யோர்நாள் நாலாபக்கமும் ஓடியலைந்தும் இரை கிட்டாது வாடி வதங்கிக் கவலைக்கொண்டு நின்றது. அப்பொழுது இக்கரும்பாம்பு விதிவசத்தால்ப் பன்றிக்கு எதிர்ப்படவே பன்றி யதைப்பிடித்துத் தன்பசிக் கிரையாக்கிக் கொண்டது. இது நிகழ்ந்த சின்னாட் கப்புறம் இப்பன்றியை ஓர் கரடிகொன்று தின்றுவிட்டது. கரடியின் செய்கையினால் சிறுமிருகங்கள் பெரியமிருகங்களுக் கிரையாகும் நியாயம் விளங்குகின்றது. மரணமடைந்த இப்பன்றி உஜ்ஜயினிநகர்க் கருகிலோடும் கிருப்பிரா எனும் நதியில் லோகிதம் எனும் ஓரழகிய மீனாய்ப் பிறந்துவிட்டது. முன்பன்றிக் கிரையாய கரும்பாம்பும் முன்கூறிய நதியிலேயே முதலையாய்வந்து ஜனித்தது. ஓர் நாள் ஓர் தாதி அரசனரண்மனையி லிருந்து அந்நதியில் வந்து நீராடினாள். முன்சொன்ன முதலை அவளைக் காலைப்பிடித்து இழுத்துக் கொன்றுவிட்டது. இதனை யசோமதி யரசன் கேள்விப்பட்டு அம்முதலையையும் பிடித்துக் கொன்றுவிடும்படி கட்டளையிட்டனன். அதன்படியே வலைஞர்கள் வலையில் அம்முதலை

யைப் பிடித்துத் துன்புறுத்திக் கொன்றுவிட்டார்கள். இம் முதலே அந்நகரின் பறைச்சேரியில் ஓராடாகப் பிறந்துவிட்டது. முதலையைப்பிடிக்க வலைஞர்வீசிய அவ்வலையில் லோகிதமெனும் மீனு மகப்பட்டதால் அதை வலைஞர்கள் அரசனிடம் கொண்டு வந்து காட்டினர். அம்மீன் விசித்திர வடிவமும் அழகு முள்ளதாயிருந்தது. அதனைக்கண்ட அந்தணரிற் சிலர் இம்மீன் அரசன்புரியும் சிராத்தத்திற் குரித்தானதென்று கூறினர். அரசனும் அதற்கிணங்கி அப்படியே சிராத்தம் செய்தனன். வழக்கப்படி அந்தணர்கள் யசோமதி ராஜன் இம்மண்ணுலகில் பன்னாட் சுகமாக வாழ்கவென்றும் விண்ணுலகில் யசோதானும் சுகமாயிருக்கக்கடவன் என்றும் ஆசீர்வசனங் கூறினர். இப்படிப் பிராணிவதஞ்செய்து சிராத்தம்செய்வதும் கொடுஞ்செய்கையென்பதை மாரிதத்தனுடன் அபயருசி கூறினன். இவ்வாறு சிராத்தத்திற்கென்று கொன்று தின்றலோகிதமெனும் மீன் முன்சொன்ன ஆட்டின் வயிற்றில் ஒரு ஆட்டுக்கிடாவாய் வந்து ஜனித்தது. இந்த ஆட்டுக்கிடா ஒரு நாள் தன் தாயின் மேலேறி மோகமுற்றுப் புணர்ச்சி செய்துவிட்டது. இப்புணர்ச்சியைக் கண்டு சகியாத மற்றொரு ஆணாடு அக்கடாவின் மேற்றாக்கி அதனைக் கொன்றுவிட்டது. தாயாம்ஆட்டின் வயிற்றில் பாய்ந்திருந்த இந்திரியம் பரிணமமுற்று ஒரு ஆட்டுக்கிடாவாய்ப் பிறந்து வளர்ந்தது. வனத்தில் வேட்டையாடித் திரும்பிவந்த யசோமதி யரசன் ஓர் நாள் முன்கூறிய தாயாகும் ஆட்டைக்கண்டு சண்டமாரிக்குப் பலியாக்கிவிட்டனன். இத்தாயினருகில் நின்ற ஆட்டுக்கிடாவை அரசன் பார்த்து அதையொரு நீசனிடம் ஒப்புவித்து வளர்த்துவரும்படி கட்டளையிட்டனன். இவ்வரசன் மற்றோர் நாளினும் முன்போல் வேட்டையாடிக்களித்து நகர்க்குத்திரும்பி வருகையில் ஒரு மகிஷத்தையும் அச்சண்ட மாரிக்குப் பலிகொடுத்தனன். பலிகொடுத்த மகிஷத்தின் மாமிசம் சிராத்தத்திற்கு யோக்கியமானதென்று அந்தணர் அரசனுக் கறிவித்தனர். வெயிலிற் காய்ந்து

காகங்கள் கவ்விய அந்த மாமிசம் சிராத்தத்திற்கு அருகமல்ல வென்று சில அந்தணர் கூறி அதற்கு ஓர் பரிகாரமும் கூறினர். அதாவது, ஒரு ஆட்டுக்கிடாவை அப்புலாலை முகரும்படி செய்வதுதாமென்றனர். அரசன் தான் முன்வளர்க்கும்படி சொல்லியிருந்த ஆட்டைவரவழைத்து முகருவித்துப் பிறகு சிராத்தம் செய்து அந்தணரால் அரசன் கடைசியில் ஆசீர்வாதம் பெற்றனன். இவ்வரசன் முன் தனக்கு மகனாக விருந்தானெனும் நினைவு இவ்வாட்டினிட முதித்தது. அரசனுக்கும் அவ்வாட்டினிடம் அதிசப் பிரியமுண்டாகி அதற்கு அணிமுதலிய அணிவித்து வெகுபிரியமாய் அரண்மனையில் எவ்விடத்திலும் துள்ளி விளையாடக் கண்டு களித்திருந்தான். இக்கிடாவின்ரு லைச் சண்டமாரிக்குப் பலியாகக் கொன்றொழித்தபின் கலிங்க தேசத்தில் ஒரு மகிஷியாய்ச் சனித்தது. அம்மகிடத்தைச் செட்டிகள் வர்த்தகசாமான்களேற்றிக் கொண்டுபோகக் கிரயத்திற்கு வாங்கிக் கொண்டார்கள். அவ்வணிகர் வர்த்தகத் தொழிலாக நாட்டில் வெவ்வேறிடங்களுக்குச் சென்று திரும்பி வந்தபோது ஓர் நாள் உஜ்ஜயினிக் கருகிலுள்ள ஆற்றருகிற்றங்கி எருமையின் மீதுள்ள பாரத்தை இறக்கிவிட்டு அதை நீரில் துளைந்து இளைப்பாறும்படி விட்டிருந்தனர். அரசன் குதிரை அங்குவந்ததை அம்மகிஷம் முட்டிப்பாய்ந்து கொன்றுவிட்டது, அதுபட்டத்துக் குதிரையாதலின் அரசன் இதனைக் கேள்விப்பட்டு அவ்வணிகரது பொருள்களைக் கைப்பற்றிக்கொண்டு அவ்வெருமையின் கால்களைக் கட்டிக் கொன்றுவிடும்படி கட்டளையிட்டான். அப்படியே கிங்கரர்கள் எருமையைப் பலவாறு துன்புறுத்திக் கொன்றுவிட்டார்கள். இவ்வெருமையின் மாமிசம் புசிக்கவேண்டுமெனுமவா அமிர்தமதிக் குண்டாயது. அப்படியே அதனையுண்டு நாவின் சுவையிற்றிருத்தியாயினள். இதுமட்டிலாது அரண்மனையில் வளர்ந்து கொண்டிருந்த ஆட்டுக்கிடாவின்பேரில் அவள் மனஞ்சென்றது. அதன் தொடை மாமிசத்தை யுண்டாலன்றித் தன் ஆசை

யொழியாதென்று அதைக்கொணர்ந்து அடித்துத் தனக்குண
வாக்கும்படி கிங்கரர்களை ஏவினாள். இதைக்கேட்டறிந்த நகர
ஜனங்களிற் சிலர் இவளது துர்நடத்தையைக் கண்டு "இப்பாவி
மிகக்கொடியவள். இவளுடலெங்குங் குட்டநோய். புலால்
தின்னு மாசையோ இவளைவிட்டு இன்னும் நீங்கவில்லை. இவள்
எந்த துர்க்கதிக் குரியளோ தெரியவில்லை. ஆட்டின் தொடை
மாமிசத்திற்கும் ஆசைகொண்டாள்". என்று கூறினர். கிங்
கரர்கள் அவ்வாட்டை அறுக்கக்கொண்டு வந்தார்கள். அமிர்த
மதியை அவ்வாடு கண்டவுடனே தற்செயலாய்ப் பின் வரு
மாறு தனக்குள்ளே சிந்தித்தது, "அடிபாவியே நீ முன்
அரசனாயிருந்த என்னைப் என் சாயையாய் உணவில் விஷம்
வைத்து கொன்றுவிட்டாய். இன்னும் உன்பகை தீரவில்
லையோ. ஆனைப்பாகன் அஷ்டபங்கனும் சோரநாயகன் சேர்க்
கையினாலே உனதுடலோ குட்டநோயால் அழிந்துபோய்விட்
டது. உன்னிமித்தமாக நான் வெற்றிகொண்டு பலநாடுகளை
யும் ஜயித்துக் கட்டிக்கொண்டேன். உன்னதமாகிய பல மாளி
கைகள் உப்பரிகைகளைக் கட்டுவித்தேன். அவைகளையிதோ
பார், அன்றியும் ஏராளமான வேறு பலசொத்துக்களையும்
படைகளையும் நவமணிகளையும் சேகரித்துள்ளேன். இப்படிப்
பல நன்மைகள்செய்த என்பேரில் சற்றும் உனக்குப் பிரிய
மில்லாமல் உனது ஆசையை அஷ்டபங்கன் மேல் வைத்தாய்.
இப்பொழுதும் என்னைக் கொன்றுதின்ன ஆசைகொண்டு
ளாய்" என்று இப்படிக்கெல்லாம் முன்சம்பவ வுணர்வு
ஆட்டினிடம் எவ்விதமாகவோ தோன்றினாலும் முன்வினைப்
பயன் யாரையும் விடாதாகையால் வேலைக்காரர்கள் இவ்வாட்
டைக்கொன்று கறியாக்கி அமிர்தமதிக் கிட்டு அவளாசை
யைத் திருப்தியாக்கினார்கள். இவ்வாடும் முன்சொன்ன மகி
ஷமும் உஜ்ஜயினி நகரப் புலையர் சேரியில் இரண்டு அழகிய
கோழிகளாகச் சனித்தன. எப்படியோ ஒருநாள் யசோமதி
யரசன் இவ்விரண்டழகிய கோழிகளையுங் கண்ணுற்று வெகு

பிரிய முடையனுகிச் சண்டகருமனை யழைத்து இக்கோழிகளை உன் கண்போலினிது வளர்த்து வருவாயாக வென்று கட்டளை யிட்டனன். அக்கருமனும் அவ்வாறே அவைகளை வளர்த்துவந் தான். வளர்த்ததன்றி அவைகளை விசித்திரமாயும் தீரமாயும் சண்டை செய்யும்படி பழக்குவித்தான். இவ்விரண்டு கோழி கள்ன் சண்டையைப் பார்த்துக் களிக்காதார் உஜ்ஜயினியில் யாருமில்லை. இவ்விரண்டு கோழிகளின் கண் முத்தைப் போற் பிரகாசித்தன. சிறகுகளும் வெகு சித்திரமாயும் அழ குடையனவாகவு மிருந்தன உடலெங்கும் நீலரேகைகளோ பல. உச்சிகளோ செம்மணி முடி போன்றிருந்தன. கால்கள் பொன்னிறங் கொண்டவை. கால்களில் வயிரம்போன்ற முட் களிருந்தன. கோழிகளின் வளர்ப்பும் காட்சியும் இவ்வாறு பல ரும் கண்டு களிப்பதற் கேதுவாயிருந்தன.

வாராய் மாரிதத்தாராஜனே யசோமதியின் வரலாறு கூறு கின்றேன் கேட்பாயாக வென்று அபயருசி கூறத்தொடங் கினுன்.

---

## நான்காம் பாகம்.

உஜ்ஜயினி நகரத்தருகில் அழகிய உய்யான மொன் றுளது. அதில் நாகம், புன்னுகம், ஜம்பீரம், பநஸம், நாரத்தை, மாதளை, கமுகு, தேமா, தெங்கு, குங்குமம், இலவங்கம், அசோ கம், ஏழிலைப்பாலை, சண்பகம், வாழை முதலிய பலதருக்கள் நிறைந்திருந்தன. இவ்வுய்யானத் தருகே, நதியும், மணற் குன்றுகளும், தடாகங்களும், மலைகளும், விளையாட்டு மலைகளு மிருந்தன. உய்யானத்தின் நடுவிலும் சுற்றிடங்களிலும் அரசன் வந்திறங்கிக் களியாட்டுக்கொள்ளப் பலமண்டபங்களும், விளை யாட்டிடங்களும், பூஞ்செடிகளும் கொடிகளும் படர்ந்து நாலா

பக்கங்களிலும், குவிந்துள்ள, லதாக்கிரகங்களும் அன்னம், மயில், கிளி, குயில் முதலிய பறவைகளுமிருந்தன. கோட்டுப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ, கொடிப்பூக்களும் எங்கு முய்யானத்தில் மலிந்து இந்திரனது உய்யானமிதுவோ வென்று யாரும் மயங் கும்படி விளங்கியது. இவ்வுய்யானம் வஸந்தகாலத்தில் குளிர்ந்த தென்றல் வீசப்பெற்று, பூஞ்செடிகளும், கொடிகளும் துளிர்த்து, அரும்புகளும், மலர்களும், நிறைந்து விதம்விதமான நிறங்களோடு விளங்கின. பலவிருக்ஷங்களில் பழங்கள் நிறைந் திருந்தன. வண்டுகளும் ஞிமிறும்பாடின.' குயில்கள் கூவின. கிளிகளும் தளிர்களைக்கோதி இனிய ஓசையோடு பாடின. மாங்கனிகள் உதிர்ந்தன. புன்னை, மகிழ், தாழை, சண்பகம் இவைகள் மலர்ந்து நல்மண மெங்கும் வீசின. இவ்வகைய சிறப்பு வாய்ந்த உய்யானத்தில் யசோமதிராஜன் தன்தேவி புட்பாவலீ யோடு சென்று வல்லிகள் நாற்புறமும் சூழ்ந்து குளிர்ச்சியா யிராநின்ற அசோகமரத் தடியிலுள்ள லதாமண்டபத்துள் வீற்றி ருந்தனன். பார்ப்பவர் இவை கனகலதையோ மின்னற்கொடி யோவென்று ஐயுறும்படியான அழகும் அவயவமுமுள்ள நாட்டி யப்பெண்கள் நயனானந்த முண்டாகும்படி நடித்த நாட்டியங் களைப் பார்த்துக்கொண்டும் அம்மாதர்களது இனிய கண்டத் தொனியையும் வீணை முதலிய கானங்களையும் கேட்டுக்கொண் டும் மன்மத கேளிவிலாஸத்தில் அரசன் களித்திருந்தனன். சண்ட கருமனெனுந்தளவரன் வநசரர்களான துஷ்டர்களையும் துட்ட மிருகங்களையும் அரசனருகு வரவொட்டாது ஸேவகர்க ளோடு காவல்செய்து கொண்டிருந்தான். இவ்வனத்துள் ஓர் மரத்தடியில் சிலாதலத்தில் பரியங்காசனத்தில் ஒரு முனிவர் வீற்றிருந்தார். அவர் அவதி ஞானமுள்ளவர். அகப்பற்றும் புறப்பற்றும் நீங்கியவர். திரிகால வுணர்வுள்ளவர். பாபகரு மோதயத்தை யணுகவொட்டாது நீக்கிக் காக்குந் திறமுள்ளவர். கருணையே வடிவானவர். ரத்தினத்திரயம் எனு மாபரணம் பூண் டவர். திகம்பரதபோதனமுள்ளவர். இவர் பெயர் அகம்பனர்

என்பது. முன்சொன்ன சண்டகருமன் இவரிடஞ் சென்று, கைதொழுது வணங்கி நின்றான். அவர் ஸமாதிதெளிந்து கண்ணெடுத்துப் பார்க்குமளவும் அங்கிருந்தான். அவர் கண்ணெடுத்துப் பார்த்த மேல் அவரைப் பார்த்துச் சண்டகருமன் விண்ணப்பஞ் செய்யலானான். வாரீர் ஸ்வாமிகளே நீங்கள் இந்த ஏகாந்தமான இடத்திலிருந்து கொண்டு வேறொரு வியாபாரத்தில் மனநாட்டமின்றியும்சரீர மசைவின்றியும் மனதில் எதை நினைந்து கொண்டிருந்தீர்கள். அந்நினைவினாலுங் களுக்கென்ன காரியம் ஸித்தியாகும். அதனை அடியேனுக் கறிவித்தல் வேண்டுமென்று பிரார்த்தித்தான். அம்முனிவர் சொல்லுகின்றார். வாராய் சண்டகருமனே வனத்திலும் மலைகளிலும் வஸிக்கும் முனிவர்கள் தங்கள் சரீரத்தினும் வேறாகி வாளும் உறையும்போலப் பிரத்தியேகமாகி, அளவிறந்த ஞானம் முதலிய அட்டகுணங்களால் நிறைந்துள்ள பரமான்மாவை திரிகரணத்தோடு தியானிக்கின்றார்கள். அந்த ஜீவன்தான் நமக்குண்மையான பொருள். அது சரீரமுழுவதிலும் வியாபித்துளது.

அஞ்ஞாநாவரணம் முதலிய எட்டுக் கருமங்கள் சூரியனொளியை மறைக்கும் மேக படலங்கள்போல ஞான குணங்களாம் ஒளிகளை வெளிப்படுத்தாமல் மறைத்தபடியால் அஞ்ஞானத்தை யடைந்து ஸம்ஸார காரணமாகிய ஜனனமரணங்களைப் பெற்று நரகம் முதலிய நான்கு கதிகளில் தேரினதுருள் போலவும் நீர்ச்சுழிபோலவும் சீவன்கள் சுழலுகின்றன. மானிடஜன்மம் மிக அரியது. அது ஸம்ஸாரமெனுங் கடலைக்கடந்து கரை சேருதற்குரிய விசேஷமுள்ளது. நாம் ரத்தினத்திரயங்களில் பூர்த்தியாகி முன் கூறிய பரமான்மசொரூபத்தையடைவதுதான், புருஷார்த்த லக்ஷணமாகும். அதைத்தான் நான் நாள்தோறும் தியானிக்கின்றேன். அந்தத் தியானத்திற்குப் பலம் பொன்னானது, தீயிற்காய்ச்சுதலால் காளகிட்டம் நீங்கி

ஒளிமிகுந்து, நிறை குறையாம லிருப்பதுபோல் ஆன்மா வினையெனுங் காளத்தை விட்டுநீங்கி ஜனன மரணமென்னுங் குறைவையடையாமல் திரிலோக சூடாமணியாகி அனந்தகாலம் அந்நிலையை விட்டு நீங்காமல் அளவு கடந்த ஞானமாகியாம் எண் குணங்களோடு கூடி லோகா லோகங்க ளனைத்தையும் அடிக்கடி யறிந்தும் பார்த்தும் அளவிறந்த இன்பமெனுங் கடலவிராநின்றது யென்று அருட்பண ரெனு முனிவரருளிச் செய்தார். இதைக்கேட்டும் சண்டகருமன் பின்னும் வினவ லாயினன். வாரீர் ஸ்வாமிகளே அஞ்ஞான வசத்தால் நான் இதற்கு முன் இச்சரீரத்தில் ஜீவனென்றிருப்பதாகப் பலரும் சொல்வதைக் கேட்டு அதை நம்பி அந்த ஜீவனைப்பார்க்க வேண்டுமென்று வெகு நாளாய் ஆசைகொண்டிருந்தேன். அரசனது ஆணையால் ஒருக்கால் ஒரு சோரனைக் கொடுபோய் அவனவயங்களை யெல்லாம் பின்னம் செய்தேன். அப்போது அச்சரீரத்தில் வேறாயிருக்கின்ற ஒரு ஜீவன் என்கண்ணிற் புலப்படவில்லை. இதுவு மன்றி மற்றொருநாள் ஒரு கொடிய கள்வனை வதம் செய்யுமுன்னும் வதம் செய்தபின்னும் நிறுத் துப்பார்த்தேன். ஜீவனோடிருந்த காலத்தின் பளுவும் ஜீவன் போனபின்பு குறைவும் அப்படி நிறுத்த சரீரத்தில் என்றாற் காணப்படவில்லை. மற்றொருசோரனை வதை செய்யாமல் பூமி யில் குழிவெட்டி அக்குழியிலவனை வைத்துக் கொஞ்சமும் காற் றும் ஒளியும் நுழைய இடமில்லாமல் நன்றாய் மூடிவைத்திருந் தேன். அப்பொழுதும் ஜீவன்போன வழியை நான்பார்க்கவில் லை. ஆகையால் சரீரசம்பந்தமான ஜீவனை நான் எப்படிப்பார்ப் பது, அதனை யருளிச்செய்யவேண்டுமென்று வினவினன். அம் முனிவரரும் மறுபடியும் அருளிச்செய்கின்றார். வாராய் சண்ட கருமனே சரீரத்தில் வியாபித்துள்ள ஆன்மா வடிவற்றவன். சுக துக்கங்களைப் பகுத்துணரும் சேதனன். இந்திரியங்களோ நிறம், வாசனை, பரிசமாகிய குணங்களையுடைய புத்கலரூப மாம். இவ்விந்திரிய சம்பந்தமாகிய பார்வைக்கு வடிவற்ற

ஜீவன் கோசரமாகமாட்டான். அச்சீவன் ஞானத்திற்கு மட்டும் கோசரமாவான். கண்ணுற் காணக்கூடாது, அறிவால் மட்டு மறியலாம். எப்படியெனில் கல்லிற்கலந்துள்ள பொன்னை லித்த ரஸப் பிரயோகத்தால் கைப்பற்றித் தீயிற்காய்ச்சிக்காள கிட்டத்தைப் போக்கடித்துவிட்டபின் பொன் பரிசுத்தமாய்க் காணப்படுவதுபோலச் சீவனும் பாஷாணம்போன்ற புத்கலத் திரவியத்தில் வியாபித்திருக்கின்றது. லித்தரஸம்போன்ற ரத்தி நத்திரயங்களால் கிரகித்து, ஞான தியான தபமாகிற தீயில் காய்ச்சிக் கிட்டகாளம்போன்ற ராகத் துவேஷ மோகமாம் கரும மலமெனுங் களங்கமுழுவதையும் போக்கடித்தால் பரிசுத்த மாகிய பொன்னைப்பார்ப்பதுபோல பரமான் மசுவ ரூபத்தை ஞானக்கண்ணுற் காணலாம். தீயுடன் கூடிய விறகு ஜலத் தால் நிறைந்து பசுமையாக விருக்கின்றது. அவ்விறகைக் கத் தியாற்பிளந்து பார்த்தால் அதினுள்ள தீ தெரிகிற தில்லை. அந்த விறகை வெய்யிலிலுலர்த்தி வேறொன்றுடன் சேர்த்தால் அவ்விறகிலிருந்த தீ வெளிப்படுகின்றது. இதுபோலவே சரீ ரத்திலுள்ள ஜீவன் ஒரு நனைந்த விறகேயாம். உடலைத்தவமெ னும் வெய்யிலிலுலர்த்தி அதனோடு ஞானத்தையும் தியானத்தை யும் சேர்த்தாற் காணலாகும். உடலைச் சீவனோடிருக்கையில் நிறுத்துப் பார்க்குமிடத்தும் ஜீவன் போனபின் நிறுத்துப் பார்க்குமிடத்தும் சனமும்லேசும் காணப்படாமல் ஒரேவிதமா யிருக்கும். இஃதெப்படி எனில்காற்று நிறைந்த துருத்தியை முதலில் நிறுத்துவிட்டுப் பிறகுகாற்று நீங்கியபின் நிறுத்துப் பார்த்தாலும் ஒரே விதமாகவே யிருக்கும். இப்படியேவாத் தியங்களையும் ஒரு நிலமாளிகையில் வைத்து, அம்மாளிகைக் குள் ஒளியேனுங் காற்றேனும்நுழையா வண்ணம் சிறு துவா ரமுமின்றிச் செம்மையாய் மூடிவைத்துவிட்டு அவ்வாத்தி யங்களை யடிப்பித்தால் அவ்வோசை வெளியிற் கேட்கப்படு கின்றது. இவ்வாறு ஆன்மாவும் துவாரமில்லா திருப்பினும் உடலினைவிட்டு வெளியே செல்லும். வாராய் சண்டகருமனே

சரீரத் தொடர்புடைய ஆன்மாவைக் காணவேண்டுமாயின் 1-புத்கலம், 2-தருமம், 3-அதருமம், 4-ஆகாசம், 5-காலம், 6-ஜீவன் இவைகளை யறிதல்வேண்டும். இவைகளுட் புத்கல மொன்றுமட்டும் இந்திரியங்களுக்குக் கோசரமாகும் வடிவப் பொருளாம். மற்றைய ஐந்தும் அருவப்பொருளாம். ஜீவனே முக்கியமாகிய எதுவற்ற திரவியமாம். எழுபங்கி (ஸபதபங்கி) நயங்களால் தெளிந்து, ஆறுதிரவியங்களை வேறு வேறாகப்பிரித்து இடையயி விராநின்ற நட்பமாகிய பரமான்ம சொரூபத்தைப் பரமரிஷிகள்தான் பார்த்தற்குறியர். நீயு மன்னிலை பெறுவாயாயின் காணலாமென்றனர். இதைக்கேட்ட சண்டகருமன் ஸ்வாமிகளே தேவரீர் கூறியது என்போன்ற சொற்பபுத்தி யுடையார்க்கு நினைக்கவுமரிதா யிருக்கின்றது. உறவினரோடு இல்லறத்திலுள்ள சாதாரண ஜனங்களாலறிதற்காகும் விரதமுதலிய அனுஷ்டானவழிகளை அடியேன்மீது கிருபைசெய்து எளிதாய் அறிந்துகொள்ளும்படி அருளிச்செய்ய வேண்டுமென்று வேண்டிக்கொண்டான். அம்முனிவரர் அருளிச்செய்கின்றார். வாராய் சண்டகுருமனே நல்லறிவு, நற்காட்சி நல்லொழுக்கமா மிம்மூன்றையும் பெரியோர்களிடம் நன்கு கேட்டுணர்ந்து, அதன்படியே நல்லொழுக்க நெறியில் நிற்பவருக்குப் பேரின்பநிலையும் உயர்பதவியும் வேறுபேறும் கைகூடும். பதார்த்தங்களின் நிலைகளை ஆன்றோ ராகமத்தின்படி பகுத்தறிதல் முக்கியமானதாகும். விரதா நுஷ்டானங்களைக் கேட்டறிந்து நல்லொழுக்கநெறியில் நடப்பதற்கு இன்றியமையாதது அவ்வறிவைச்சார்ந்து அறியுமறிவாகும். விரதங்கள் பன்னிரண்டுள. அணுவிரதம் ஐந்து. குணவிரத மூன்று. சிக்ஷாவிரதம் நான்கு. இவைகளின் பேதங்களை ஆப்தர்களது ஆகமப்பொருளில் சிரத்தைகொண்டு அறிதல்வேண்டும். இதை நற்காட்சியென்பர். நல்லறிவாலும் நற்காட்சியாலு மனுஷ்டிக்கப்படுவதே நல்லொழுக்கமாகும்.

ஐந்து அணுவிரதமாவது. கொலை, பொய், களவு, பிறன்மனை நயத்தல், பொருளின்மேலாசை இவைகளை உள்ளத்தாலும், சொல்லாலும் செய்கையாலும் விலக்குதலாகும். இவ்வைந்துடனே புலால், கள், தேன் இவைகளை உட்கொள்ளாதிருப்பதும் ஒழுக்கமாகும். ஒழுக்கத்தின் ஸாரமாம் கவி வருவாறு:—

கவி.

பொருகிய கொலையும் பொய்யுங் களவொடு பிறன்மனைக்கட்
டெரிவிலாச் செலவு சிந்தை பொருள்வயிற் றிருகு பற்றி
மருவிய மனத்து மீட்சி வதமிவை யைந்தோ டொன்றி
யொருவின புலைசு தேன் கள் ளொருவுத லொழுக்க மென்றான்.

ஒருவனிடம் கொலையென்பதொன்றில்லையாயின் அவன் இவ்வுலகில் மேலான நிலையை யடைவான். அதும்வ பொய்யணுகாச் சத்திய நிலையையளிக்கும். அந்தச் சத்தியவான் வாய் மொழியோ எல்லோராலும் மதிக்கப்படும். ஜீவகாருணியத்தின் மாட்சியோ பிறர் பொருள்களைக் களவு செய்தலை நீக்கும் இஃதன்றிப் பெருமையையும் மனத்திடத்தையும் சரீரதிடத்தையுமற்ற வைகளையுமளிக்கும். மனத்தின் தெளிவாலுணர்தலெனுஞ் செல்வம் வாய்த்தால் பொருளைத் தாராளமாய்ச் செலவிடச்செய்யும். இவ்வறிவின் முதிர்ச்சி புலால் தேன்கள் இவைகளைத் தள்ளுவிக்கும். தேககாந்தி, அழகு, வெற்றி, செல்வம், மிக்க குலம், இன்பநுகர்ச்சி இவைகளும் உண்டாம். திண்ணிய தோளுடையசண்டகருமனே கூறிய இவைகளுள் நீமகிழ்வுடன் அனுஷ்டிப்பவைகளைக் கைக்கொள்வாயாக வென்று அகம்பனரெனு முனிவர் சொல்ல அதைக்கேட்ட சண்டகருமன் சொல்லுகின்றான். வாரீர் முனிவர்களே ஜீவவதையோ எனது ஜீவனோபாயமாயிருக்கின்றது. ஆதலினால் இவ்விரத மென்றொழிய

மற்றைய விரதங்களை யெல்லாம் அனுஷ்டிக்கின்றேனென்று கூறவே அம்முனிவரர் பின்னுங்கூறலுற்றார். மாராய்சண்ட கருமனே "நோன்பென்பது கொன்று தின்னாமை" என்பது முன்னோர்வாக்கிய மாதலாலும் இக்கட்டுரை ஆசமுணர்ந்த ஆப்தர் மொழியாகையாலும் அம்மொழிக்கிலக்காகும் விரதம் எல்லா விரதங்களினும் முதன்மைபெற்றதாகவு மிருக்கின்றது. பாபகருமோதயத்தால் நீயு மிதுகாறும் கொலைத்தொழிலே செய்துவந்து விவேகமின்றி உன் வாழ்நாளை வீணிலே கழித்தொழித்தாய். பிறவிகள் தோறும் நீ செய்துள்ள தோஷங்களனைத்தும் தருமவழியொழுகுதலாலன்றி வேறுவகை யாற்றீராவாம். உன்போற்கொலையையே தொழிலாகக் கொண்டவர்களும் இவ்வுலகிற் சின்னாள்வாழ்க்கையராய்ப் பிறகு மாண்டொழிந்தார்களன்றி நீடித்து இங்கு வாழ்ந்தாரில்லை. உஜ்ஜயினி நகரத்திலரசாண்ட யசோதர ராஜனும் அவன்றாய் சந்திரமதியென்பாளும்மாவினாற் கோழிசெய்து அதைச் சண்டமாரிதேவிக்குக் காவுகொடுத்த தோஷத்தால் இம்மானிட சரீரத்தைவிட்டு நீங்கிப் பன்முறைவிலங்கு கதியிற் சனித்து பாபகன்மமிகுதியாற் இரண்டு கோழிகளாய்ப்பிறந்து இங்கே உனதருகிலுள்ள கூடுகளிலிருக்கின்றன பார், என்று கூறினர். சண்டகருமன் மனம்நொந்துவாடிக் கோபமும் மறமு, நீங்கி ஜினதருமத்தில் ஊற்றங்கொண்டான். ஸ்வாமிகளே முன்பு பல கொலைபுரிந்த வனாயினும் தேவரீராற் பெரும்பயன் நான் பெற்றேனென்று கூறி அம்முனிவரரைப் பணிந்து விடைபெற்றுச் சென்றனன்.

இங்ஙனம் முனிவரர் மொழிந்த வறப்பொருளை மனத்துட்கொண்ட கோழிகளிரண்டும் தங்கள் முன்பிறப்புகளை நினைந்து யாம் அறவமிர்தமிங்குண்டுளே மாதலால் இனிப் பிறவிநோயை ஒழிக்க வகைதேடிக்கொண்டோ மென்று களித்துச் சிறகுகளை அடித்துக்கொண்டு அதிக சத்தமிட்டன. அவ்வொலி வனத்திலருகிலிருந்த யசோமதி ராஜனது தூக்கத்தை எழுப்பிய தாலவன்

கோபமுண்டு தனது வில்லில் சப்தவேதியெனும் பாணத்தைத் தொடுத்து விட்டான். அக்கோழிகளிரண்டும் சுபகன்ம பரிணமத்தால் மரணபயமின்றித் தம் முடலை நீத்து யசோமதி யரசனது தேவியாம் குசுமாவலி கருப்பத்திற் சென்றன. யசோமதி யரசனும் உய்யானத்திலிருந்து நகர்க்கேகித் தன தரண்மனையிற் றனது மனைவிமாருடன் கூடிக்களித்துச் சுகானுபவஞ் செய்துகொண்டு அரசுரிமை புரிந்து வந்தனன். அவன்றேவி புட்பாவலி கருப்பமாகி ஒன்பது திங்களும் நிறைந்து சுகமாக நல்வேளையில் இரண்டு சிசுக்களை ஈன்றனள்.

அரசனும் இச்சுபோதயச் செய்தியை யறிந்து அச்சிசுக்களுக்குச் சாதகன்மம்செய்து, நகரத்துள்ளார்க்கும், யாசகர்களுக்கும் விரைதானம், சுவர்ணதானம் முதலிய தானங்கள் செய்து நகரெங்குந் திருவிழாக்கொண்டாடிக் களித்தனன். பிறகு சோதிடர்களையழைத்து அச்சிசுக்களின் ஜாதகங்களை எழுதுவித்து ஆராய்ச்சி செய்ததில் இச்சிசுக்கள் பாலர்களாகி வளருநாளில் மரணகண்ட முண்டாகி மனோதிடத்தாலதினின்று விலகுவார்களென்று வெளியானதால் அவர்களுக்கு அபயருசி அபயமதியென்று நாமகரணஞ் செய்தனன். இவ்விரு சிசுக்களும் ராஜபோகத்தி லினிதாய் வளர்ந்துவருநாளில், புட்பாவலி மற்றோர் குமரனையு மீன்றனள். அவனுக்கு முன்கூறிய வண்ணம் ஜாதகன்ம முதலிய களிப்புடன்செய்து யசோதரனென்று அரசன் நாமகரணமுஞ் செய்தனன். மூவரும் சிங்கக்குட்டிகளென வளர்ந்து வந்தார்கள். யசோதரனும் மன்னர்க்குரிய தொழில்களாம் குதிரையேற்றம், தேரேற்றம், யானையேற்றம், வில்வித்தை, வாள்வித்தைகளிற் பயின்று தேர்ச்சி பெற்றதன்றி தருமநூல், நீதிநூல்களிலும் வேறுவித்தைகளிலும் கலைகளிலும் பயின்று வருநாளில் நடந்த விசேஷங்கள் இனிக் கூறப்படும்.

# ஐந்தாவது பாகம்.

உஜ்ஜயினி நகர்க்கதிபனும் யசோமதியரசன் அரசபோகத்திலும், செல்வத்திலும் செருக்குற்று மாதர்போகத்திலாழ்ந்து ஜினதரும விரோதியாகி நாடாண்டு கொண்டிருந்தனன். ஓர் நாள் வேட்டைமேல் நாட்டமுற்று சிறுவலை பெருவலை வில் கணை வாள் வேல் முதலிய ஆயுதங்களுடனும் சேனைகளுடனும் வேட்டை நாய்களுடனும் கானகம் புக்கனன். இவன் சென்றது எவ்வாறெனில் தென்றிசைக் கோனும் யமன் சடுதி மரணம் முதலிய காலத்துஆயுதங்கள் தரித்து வாதம், பித்தம், கபம், உதராக்கினி யெனும் நால்வகைச் சேனைகளுடன் உலகிலுள்ள மாந்தர்களை வதைசெய்யப்போவதை யொத்திருந்தது. சுதத்த முனிவர் அவ்வனத்திேேனார் புடை தவம்புரிந்துகொண்டிருந்தார். அங்குள்ள பட்சிமிருகங்களெல்லாம் அவர் தவமகிமையால் பகைமை நீங்கி அன்பு கொண்டிருந்தன. அம்முனிவரரை வேட்டைமேற்சென்ற யசோமதியரசன் கண்டு இத்தகையரைக்காணுதல் அமங்கலமுள்ளதென்று நிந்தித்துக்கொண்டே அவ்வனத்துட் சென்றான். வனமெங்குந் திரிந்தலைந்தும் வேட்டைக்கு ஒரு மிருகமும் அகப்படாது வெய்யிலின்றுற் களைத்துவாடிப் பசிதாகங்களோடு வருந்திக் கடுங்கோப மூண்டனன்.

அவ்வாறு கடுங்கோபத்துடன் திரும்பிவந்தவன் அச்சுதத்தாசாரியரைக்கண்டு பொறாது அவரைக் கொலைசெய்ய வெண்ணிக் கூட்டமாகிய ஐந்நூறு வேட்டைநாய்களை அவரது சரீரத்தை வாயினற்கவ்விக் கொலைசெய்யும்படி ஏவினான். அவரது தவவல்லமையினால் அந்த ஞமலிக் கூட்டங்கள் கோபமில்லாமல் கிட்டநெருங்கச் சத்தியின்றி ஒரு வில்லளவுக்கிப்பால் சந்திரனைப் பரிவேடஞ் சூழ்ந்திருப்பதுபோல நான்குபுறமும் சூழ்ந்துநின்றன. நடுவில் விளங்கிய தவமுனிவர் பொன்வரைபோற் சற்றுஞ் சலனமின்றிப் பிரதிமா யோகத்தில் நின்றனர்.

யசோமதி கோபாவேசங்கொண்டு செய்யத்துணியுங் காரியமுணரானாகி அம்முனிவரரைக் கொலைசெய்யவென்று தன்வாளை உறையினின்று கழற்றிக் கைக்கொண்டு அவரிடம் சென்றான். அவன் கைவாளின் பிரகாசம் அரசனைக்கண்டு நகைப்பது போன்றிருந்தது. இந்நிலையில் அம்முனிவரரின் மித்திரனும் ஜினதரும பரிபாலகனுமாகிய கலியாண மித்திரன் எனப்பெயர் கொண்ட வணிகச்சிரேட்டி யசோமதி யரசனுக்கு முன்னின்று சொல்கின்றான். வாராய் யசோமதி ராஜனே, நீ வாளையுருவிக்கொண்டு ஜின முனிவரைக் கொலைபுரியச் செல்லுமிது மகாபாதகமுள்ளது. நரககதிக்குன்னை அது ஆளாக்குவது. அம்முனிவரரோ உலக இன்பங்களை வெறுத்தது மன்றி அரசபதவியையும் வெறுத்து அறமே வடிவமான ஒருமலைபோன்றவர். பொறுமை முதலிய குணங்கட் குறைவிடமானவர். அவர் திருவடிக்கண் சிறப்புள்ளதோர் நற்கருமம் புரியாது நீ கோபக் கனலிற்பொங்குங் கொடிய மனமுடையனாயினை. இம்முனிவரம்பரா சாபம் அநுக்கிரகங்களின் விசேஷங்களி லிணையற்றவர். அவர்கட்டளையி டினிங்கு மழைபொழிய மேகங்களணுகும். அவர் பிராணிகட்கெல்லா மின்பம் புரிதலிலே ஓர்மனமுடையமுனிவர். அவர்பெருமை இத்தன்மையது. இம்முனிவரரின் சரணங்களிலடைபவர் அன்புநெறியிற் சலியாதரசர் போல் விளங்குவர். அவ்வாறன்றி இவரை இகழ்வோர் கொடிய நரகில் வீழ்ந்தழிவர். இவரடிக்கண் இந்திரர்கள் வந்து பணிந்துவேண்டினும் தீய சிந்தனையுடன், யாரேனும் இவ்வாறு தீமை செயவரினும் கோபமிலராகிச் சிலர் மாறுகொண்டுவருதலவரவர் வினைப்பயனென்றே கொள்வதன்றித் தம்மடைந்தோரைச் சுற்றத்தாரென்றும் அந்நியரென்றும் பிரித்துணராத அளவிறந்த அருட்கடலாக விளங்குந் தவமுடையர். இவ்வுலகினுள்ள எவ்வுயிர்களையுந் தம்முயிரென்றெண்ணி எப்பிராணிகளிடத்தும் பொறுமையின்றிப் பல்லுயிர்களையும் காத்தளிக்கும் கருணாநிதி. அம்மகானின் திருவடிக்கண் நீ வணங்கி உனது தீவினைகட்கு

விடைகொடுத்துவிட்டு உத்தம ஜீவியாகுகவென்ருன். இவ்வாறு வணிகர் தலைவனும் சிரேட்டி கூறிய முனிவரது குணகணமாம் மேகதாரைகளால் யசோமதி யரசனது, கோபவெந்தீ ஒருவாறு அவிந்தது. அவன் தன் கையிலிருந்த வாளையும் ஒருபுறம் எறிந்துவிட்டான். அச்சிரேட்டியை நோக்கி யசோமதி கூறுகின்ருன். வாராய் சிரேட்டியே இம்முனிவர் ஆடையணிகலன்களில்லாமல் ஸ்நாநமின்றி யிருப்பதால் அழுக்கும் மலமும் உடலெங்கும் நிரம்பிப்பார்ப்பதற்கு முரியதின்றாக் கருமேனியனுகின்ருர். இவரையான் வணங்குதல் எப்படிக் கூறுகவென்றதைக் கேட்ட சிரேட்டி சொல்கின்ருன்.

வாராய் ராஜனே, இம்முனிவரர் நீர்வளமும் நிலவளமும் மிகுந்து விண்ணுலகிழிந்தது போன்று விளங்குதலால் பார்ப்பவர் கண்களையும் மனதையும் கவருமெழில் வாய்ந்த சோலைகளும் தடாகங்களும் மாளிகைகளும் கோபுரங்களும் எங்குமாம் கலிங்கதேயத்தரசன். கங்கா குலத்திற் பிறந்த க்ஷத்திரியர் தலைவன். தனது புயவலியால் வேற்றரசர்களை எல்லாம் வென்று, உலகமுழுதையும் நீதிவழுவாதரசாண்ட சிங்கப்போன்றவன். மேகத்தினிடம் மின்னலும் வானவில்லும் தோன்றி மறைதல் போலவே இளமையும் பொருளும் போகமும் இவ்வுலகிலழிந் தொழியு மாதலால் அவைகளைத்துறந்து, ஜீவகாருண்யங் குடிகொள்ளு நல்லொழுக்கநெறியில் நின்று பிறகு யோகங்களில் மிகுந்து என்றுமழிவில்லாத போன்ஹுலகடைதலையே அம்முனிவன் கருத்திற் கொண்டுள்ளான். நாடு, நகரம், போக மாதர், சதுரங்கசேனை, கொடி, முடி, மாலை, குண்டலம், தோள்வளை ஆடை, ஆபரணங்களையும் அகலவிட்டவன். விண்ணவரும், மண்ணவரும், அரசர்களும் தானவர்களுந் தினம் வந்து தன்னை வணங்குதற்கேற்ற தவவடிவமாயினுன். சகல ஜீவதயாபரனுகிக் காட்டிலும் நாட்டிலும் மலைகளிலும், ஓரிடத்தில் நிலைகொள்ளாது, திரிகின்றவன். இம்முனிவரன் வினை

மாசையே மாசெனக்கொள்பவ ஞதலின் தன்னுடலின் மாசை யெண்ணுது ஞான வொளியையும் யாரிடத்தும் புன்சிரிப்புடைய ஞதலேயுமே தனக்கணியெனக் கொண்டுளன். இவன் யோகத் தின் மகிமை இவை. காட்டிற்புரியும் கொலேத் தொழிலும் மற்றைய கொடிய வினைகளும் உன்னைவிட்டு நீங்கிவிட்டதோ என்ன யோஜிக்கின்ருய் ஞமலியாம் ஜீவவர்க்கங்களும் முனிவரன் றனருகில் அடையாது சாந்தகுண முடையனவாய் நிற்கின்றன பார் என்றும் கூறினன். என்றிவ்வாறு வணி கர்க்கரசன் சொன்னபோதனைகள் அரசன் மனதில் பசுமரத் தாணிபோலூன்றவே அரசன் முனிவரிடஞ் சென்று அவர் பாதகமலங்களிற் பணிந்து மனதில் யானுமிம் முனிவரது மகிமையுணராது மயங்கினேன், அஞ்ஞானத்தால் விளைந்த தோஷம் நீங்கவேண்டுமாயின் யான் எனது சிரசைக் களைந்து இவரது பாதங்களிற் சமர்ப்பித்தல்வேண்டும் என்று நினைத் தான். முனிவரிதையறிந்துகொண்டு போதிக்கலுற்ருர்.

வோராய் அரசனே நீ உன் மனதிலெண்ணும் சிரச்சேதம் நீ முன்செய்த தீயகருமத்தின் பலனும். இதற்குமுன் நீ புரிந்த கொலேபாதக நிற்க நீ உன்னையே கொலேத்துன்பத்திற்குட ன் படுத்த நினைக்கின்ருய். பிரஜைகளேக்காக்கு மரசன் தன் னைத்தானே கொலேசெய்து கொள்வது தருமமன்று. யான் முன் னம் உரை செய்தது இன்னும் முடிந்ததில்லே, இனியானுனக் குரைக்கு மதுவுமுளது என்ருர். உடனே அரசனவர்தாள்களிற் பணிந்து என் முன்ஞேர்களது பிறப்பு முதலியவைகளே அரு ளிச்செய்ய வேண்டுமென்று யசோமதி அரசன் கோரிக்கொண் டனன். அம்முனிவருமப்படியே அருளிச்செய்கின்ருர். தமது அவதிஞானத்தால் தாமுணர்ந்தவைகளே யசோமதியின் மனதிலூன்றும்படி அருளிச்செய்கின்ருர். முன்பு இம்மண் ணுலகில் அரசாண்ட அசோகன் செய்த தவப்பயனுல் விண் ணுலகில் பெரும்புகழோடு விளங்குகின்ருன். அவன் அமரனு

கிப் பிரமனுலகத்தில் அளவிறந்தகாலம் உருவமைந்த அழகிய தெய்வ மகளிரோடு மகிழ்ந்து கொண்டிருக்கின்றான்.

உனது தாயாம் அமிர்தமதியும் வஞ்சனையால் அரசனும் யசோதரமகாராஜனையும் அவன் தாயாகிய சந்திரமதியையும் ஆகாரத்தில் விஷங்கலந்து உண்பித்து மரணமடையும்படி செய்தனள். அவ்விடபங்கனது சேர்க்கையால் குஷ்டநோயடைந்து உடலழுகி மரணமுற்றுத் தூமப்பிரபையெனும் ஐந்தாம் நரகத்தை யடைந்தனள். இவ்வாறு பாபகருமஞ் செய்தோர் நரகபாதைக் குரியர். அந்நரகங்கள் ஏழாம்;—

## இவை குணப்பெயர்கள்.

1. இருளிலிருள்............தமத்தமப்பிரபை
2. இருள் ..................தமப்பிரபை
3. புகை ..................தூமப்பிரபை
4. சேறு .................பங்கப்பிரபை
5. மணல் .................வாலுகாப்பிரபை
6. பரல் ..................சக்கரப்பிரபை
7. ஒளி ..................ரத்தினப்பிரபை

இந்நரகங்களெல்லாங் குழிகளேயாம். அமிர்தமதி புகை நரகில் உருகிவீழ்ந்தாள். அந்நரகில் ஐந்து நிலப்புரைகளுள. அங்கே அதிவெப்பமும் குளிர்ச்சியுமுண்டு. உடலை நீர்போல உருகச்செய்யும் கொடிய வெப்பமுமங்குண்டு. ஈதன்றி ஒன்றின்கீழொன்றாயமைந்துள்ள இந்த நரகங்களிலெல்லாங் கோரமாயும் பயங்கரமாயுள்ள வடிவமேற்ற கிங்கரர்கள் தண்டனை புரிபவர்களுமுளர். ஒருவர்செய்த வினைகளே நரகத்துள்ளாரை முனியும். நரகக்குழியில் வீழ்ந்த உடனே வீழ்ந்தவரை அங்குள்ள யமகிங்கரர்கள், காலால்த்துகைத்து அனலினிட் டெரிப்பர், பிளப்பர். வலியதடிகளாற் புண்ணுண

டாம்படி புடைப்பர். நீங்கள் முன்பு செம்புலாலுண்டீர் என்று கூறி அனலில் வெதுப்பவே உடல் நீராய்க் கரைந்துருகும். முகங்களிற் காய்ந்த செப்புச்சலாகைகளைத் திணிப்பர். முகமும் வெந்தழலால் நைந்து உருகி ஒழுகும். இவைகள் புலாலுண்டவ ரடையும் கடுந்தண்டனைகள். அமிர்தமதியு மிவ்வேதனைப்பட்டாள். அவளுடலமெல்லாங் கன்னங் கறேலென்று கருகின. எரிஎழுகின்ற உருகும்பாவை யொன்றைக்கொணர்ந்து இதுவுந் தழுவுதற் கினிதேயென்று கூறி அதைத்தழுவும்படி செய்யவே உடல்முழுதும் பொரிந்து பொடியாய்விடும். இது பிறமாதரைக் கள்ளவழியாற் புணர்ந்தார்க்குச் செயுந்தண்டனை. பெண்டிரு மவ்வாறு புணர்ந்திருப்பின் அவர்களுக்கு மதுவே கதியாம். உணவில் நஞ்சுபெய்து கொல்வித்தவள் முழுதுமழுகி விழும் நாவாலலறவே, அந்நாவுமுருகி வருந்தினும் அவளிங்குச் செத்தொழிவதில்லை. துயருளழுந்துபவளேயாம். இத்தன்மைத் தென்று எடுத்தோதற்கரிய வினைகளால் விளையுந் துன்பங்கட்கெல்லா நாற்றங்கால்போன்ற இந்நரகங்களிற் றுன்பமேயன்றி இன்ப மெள்ளளவு மில்லையேயாம். நீ முன்பு இது நம்முறவின ரது தசையென்று விலக்காது அவர்களது மாமிசத்தை யுட்கொண்டா யாதலின் உனக்கு உன்னவயவங்களும் தின்னுதற் கினிதாமென்று கூறிக் கிங்கரர்கள் அவள் தன்பல அவயங்களை வெட்டி அவள் முன்வைத்துத் தின்னென்று கூறவே யவள் மிகவருந்தி அவ்வவயவங்களைத் தின்பாள். இதுமட்டோ எள்ளாட்டுஞ் செக்கிலிட்டுத் திரிப்பார்கள். நெருப்புலையில் காலையும் தலையையும் வைத்தெரிப்பார்கள். உருக்குவார்கள், அச்சுறுத்திக் கொலைக்கழுவி லிடுவார்கள். இவ்வாறு உலையிலிட்டுருக்கும் வருத்தமளவில்லை. உரைக்கவு மரிதாம். இவைகளெல்லாம் பழைய தீவினைகாரணமாய் நின்று விளைகின்ற நரகத்துன்பங்கள். இத்துன்பங்களையும் வேறு துன்பங்களையும் அமிர்மதி அனுபவிக்கின்றாள். இவைகளின் வகைகளோ அனந்தம். அவரவர் தீவினைகளின் தன்மைக்கேற்றவைகளாய்ப் பற்பலவிதமா

யும் இருக்கும். இந்நரகத்துன்பங்களை வரையறுத்துக் கூற ஒருநாவுடைய மனிதர்களால் முடியாது. ஆயிரநாவுடையார்க் கொருக்கால் முடியுமோ வதையும் யாம் அறியோம். நினது பிதாவாகிய யசோதர மகாராஜனும் அவனது தாயாகிய சந்திரமதியும் பாப கருமோதயத்தால் திரியக்கு கதிகளில் ஆறு ஜன்மமடைந்து, ஒவ்வொரு ஜனனத்திலும் அளவிறந்த துக்கங்களை யனுபவித்துக் கடைசியாகக் கோழியாயிருந்த ஜன்மத்தில் அகம்பனர் என்கிற முனிவரர் அருளிச்செய்த ஜினதருமங்களை யுணர்ந்து அதன்பலமான புண்ணிய நடைபெற்று உன் கையால் மரணமடைந்து உனது புத்திரன் அபயருசியாகவும் உனது புத்திரி அபயமதியாகவும் பிறந்து, சுகமாக ராஜஸம்பத்தி லிரா நின்றார்கள். முன்பு யசோதரன் மயிலாய், முட்பன்றியாய், மீனாகிப்பின்பு இருமுறை ஆடாகி அப்புறம் ஆறுவது பவத்தில் கோழியானான். அவன் தாய் சந்திரமதியோ நாயாய்ப் பாம்பாய் முதலையாகிப் பிறகு ஆடாய் எருமையாகிப் பிறகு ஆறுவது பவத்தில் கோழியானாள். இதுதான் உனது சுற்றத்தார்களது பவவினைகளும் அவ்வினைகளின் பலனுமாமென்று அம்முனிவரன் கூறியதைக்கேட்ட அரசன் விதிர் விதிர்த்து உள்ளுடைந்து பயமுற்றனன். அபயருசியும் அபயமதியும் அம்முனிவரனடிக்கட் பணிந்து தத்தம் முன்பவங்களைக்கேட்டுணர்ந்து இருவரும் பெருங்கவலையெனுங் கடலுளாழ்ந்தார்கள். மன்னனிவ்வாறு தன் தகப்பன் அவன்றாய் முதலியோர் பல பவங்களுட்சென்று சுழன்று வருந்திய வருத்தங்களையுணர்ந்து கொண்டே மேல் தீயில்விழுந்த புழுப்போல் தவிப்பதானான். கருணையிலானாய்ப் போக போக்கியங்களில் மூழ்கி விவேக மற்றுத் தீமைபுரிந்த யான் என்னசெய்வதென்று நடுங்கினன்' பல்லுயிர்களைக் கொன்றதினால் தினமும் சுட்டெரிக்குங் கொடிய நரகில் அழுத்தும்படியான தீவினைகள் புரிந்தயான் இனி என்செய்வதென்று யசோமதி ராஜன் துடிதுடித்தான். மாவினாற்செய்த கோழியைப் பலிகொடுத்ததினா லிவ்வகைத் தீமை

விளையுமாயின் அடியேனுக்குத் தேவரீரே கதியன்றி வேறு போக்கிடமில்லை. இனி எனது பயம் நீங்கியது. எளியேனைக் காத்தருள் வீராக உமதிடம் அடைக்கலம் புகுந்தேனென்று கூறிச்சுதத்த முனிவரடியில் யசோமதியரசன் பணிந்தான். அம் முனிவர் பயப்படாதேயென்று யசோமதிக்கு அபயமளித்துக் கூறலானார். வாராய் யசோமதி ராஜனே ஞானோதய மில்லாத போது ஒருவன் அறியாதுசெய்த பாவங்களெல்லாம் அவனுக் கறிவுதயமாய் விட்டால் நீங்கிப்போம். உன்பந்துக்களு மப்ப டியே அறியாதுசெய்த தீவினையால் அவர்கள் விலங்குகதியிற் சென்று பட்டபாடுகளை யெல்லாமறிந்து கொண்டாயல்லவோ. மாந்தர்கள் ஜீவஜந்துக்களிடங் கருணையுடையாராய் அவைக ளுக் கபயமளித்துக் காத்தல்நலமாம். ஒழுக்கங்கெடாதிருக்க மாந்தர் கொலை, காமம், களவு, பொய், புலால் இவைகளை விலக்கி இருவினைகளும் சாராதபடி நன்னெறியிற் சென்றால் அவர்களுக் குத் தேவபோகமேயன்றி வினையால்விளையுந் தீமைசாருமோ. ஒருநாளும் சாராது. இது நிச்சயம்.

குறள்.

இருள்சே ரிருவினையுஞ் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

இந்த உபதேச மொழிகளைக் கேட்டவுடனே யசோமதி யரசன் மனம் தெளிந்தது. வினையை வென்றவர்களைச் சரண மடைந்தவருக்கு சேருவது இம்மனோ ஜயமேயாம். யசோமதி யரசன் பிறகு தன்மகன் அபயருசி அவன்றங்கை அபயமதி இவர் களை வரவழைத்து அவர்களது கடந்தபிறவிகளில் அறியாது தான்செய்த தீமைகளை அவர்களுக்கறிவித்துத் தன்னை க்ஷமி த்துக் கொள்ளும்படி வேண்டிக்கொண்டனன். வணிகர் தலை வனுங்கலியாணமித்திரனைப் பார்த்து எனக்குச் சரணளித்த சுதத்த முனிவரோடென்னை எனக்கிறைவனாக எண்ணுகின்றே

னென்று கூறி இராச்சியபாரமெனுஞ் சுமையையினித் தாங்க முடியாதென்று மனதி லுறுதிகொண்டு அபயருசிக்கு இராச்சிய பட்டாபிஷேகஞ் செய்து முடிசூட்டுவித்தான். அபயருசியும் அபயமதியும் சுதத்தமுனிவ ரருகணைந்து பணிந்து அவரைக் கண்டவுடனே கடந்த பவங்களிலுண்டாகிய அளவிறந்த துன்பங்களை நினைந்து பிறவித்துயர்க் கஞ்சினார்கள். அரச பதத்தை வெறுத்தார்கள். அபயருசி தனது அரசுரிமையைத் தன் தம்பியிடம் ஒப்புவித்தான். பிறகு அபயருசி அபயமதியிருவரும் சுதத்த முனிவரிடம்வந்து சரணமடைந்தார்கள். வினைகளையும் அதனான்விளையும் பயன்களையும் வெறுத்துத் தவம்புரிய யாங்கள் சங்கற்பங் கொண்டோமென்று அம்முனிவரனிடம் அறிவித்தார்கள். ஜின தீக்ஷையருள்வீராக வென்று வேண்டிக் கொண்டனர். அம்முனிவர் கூறுகின்றார். நீங்கள் பாலர்கள். தவநெறியில் நின்று பசிதாகங்களைப் பொறுத்துக்கொள்ளுதலுங்களுக்கரியது. உங்கள் சத்திக்குத் தக்கபடி அணுவிரத முதலியவைகளை யனுஷ்டித்துச் சாத்திரங்களைக் கேட்டறிமினென்றதைக்கேட்டு அவ்விருவரும் சாத்திரங்களை அத்தியயனஞ் செய்து சிராவக விருதங்களை அனுஷ்டித்துக்கொண்டு ஆசாரியரிடத்தில் சிஷியர்களாக இருந்து கொண்டிருந்தார்கள். இத்தருணத்தில் தான் சுதத்தமுனிவர் தவக்குழாங்களோடு இந்நகர்ப்புறத்துச் சோலையில்வந்து தங்கியிருந்தார். அன்று எல்லோரும் உபவாச விருதத்திலிருந்தார்கள். அம்முனிவரின் கட்டளைப்படி யசோமதியின் பாலர்களிரண்டுபேரும் நகரத்தில் உணவு கொள்ளப்போயினர். நகரவீதியில் இல்லறத்தோ ரளித்தவுணவைக் கைக்கொண்டு சென்றனர். மாரிதத்த ராஜனே அப்படிச்சென்ற இருவர்களும் அபயருசி அபயமதியெனும் நாங்களிருவருமேயென்று அறிந்துகொள்ளுங்கள். எங்கள் சுற்றத்தார்களும் நாங்களும் அடைந்த பவங்களிவை. முன்செய்த தீவினைகள் பின்னுளிற்றுன்புறுத்தும் வகையுமிதுதான். காமத்தினால் விளைந்த தன்மையுமிதுவே. இறைவனது ஒழுக்க நெறி

யிற்சென்றோர் உயர்ந்து விளங்குதலு முண்டென்பதையும் இங்கறிந்தோமன்றோ. மாரிதத்த அரசனே அற்பப்பிராணி யாகிய ஒரு மாவாற்செய்த கோழியின் வதத்தால் நேர்ந்த கொலைப்பாவம் பலபவந்தோறுஞ்சென்று வருத்துமானால் உயிர்ப் பிராணிகளைப் பன்முறை வதம் செய்ததினாலுண்டாகும் பாவத் தால் நேரும் துன்பங்கள் எத்தன்மையவாய் முடியுமோவென்று நாங்கள் மனம் நெக்குருகி வருந்துகின்றோமென்று அபயருசி கூறினன்.

இதனைக்கேட்ட மாரித்தனுமரசன் அபயருசியைப் பார்த் துக் கூறுகின்றான். அபயருசியே நீ அருளிச்செய்த நற்போ தனையால் கொலைப்பாவத்தால் நரகில்நேரும் பலகோடி, துன் பங்களினின்று விலகியவனானேன். யசோமதியரசனது குமா ரனே நான் கூறுமிது நிச்சயம். உனது மொழியெனும் புணை யைக் கைக்கொண்டு மாதவமெனு மொருகடலிலாட நிச்சயித் துளேனென்றனன். அதாவது நீயே எனக்கு ஜின தீட்சைபுரி ந்து உபதேசித்தல் வேண்டுமென்றனன். அபயருசி அதற் குரிய முனிவர் சுதத்தமுனிவரே யாதலால் அவரடிக்கட் சரண் புக்குத் தீட்சைபெற்றுத் தவம்புரிவாயாக வென்றனன். பிறகு மாரிதத்தன் தனது சுற்றத்தாரும் இன்சொல்மனைவியும் மற் றோரும் எரியின்றிரளுக் கொப்பாமெனத் துணிந்து தனது அரசுரிமையை வெறுத்துப் புட்பதந்தன் எனும் தனது மூத்த குமாரனுக் கதையுரித்தாக்கித் தன்னைப்போலரசு துறந்தாருடன் முன்கூறிய பொழிலில் வீற்றிருந்த சுதத்தமுனிவரது பாத கமலங்களிற் பணிந்து தீட்சைபெற்று முனிவனானான்.

கவி.

இன்சொல் மாதரு மிருங்கிளைச் சுற்றமு
மெரித்தி ரளென வஞ்சிப்
பொன்செய் மாமுடிப் புதல்வருட் புட்ப
தந்தற் கிதுபொறை யென்றே

*மின்செய் தாரவன் வெறுத்தன னரசியல்*
*விடுத்த வருடன் போகி*
*முன்சொல் மாமலர்ப் பொழிலினுள் முனிவாற்*
*றெழுது நன்முனி யானான்.*

தவநெறியில் இவன் பன்னாள் வழுவாது நின்று எண்குணனைத் துதிசெய்து பூதவுடலை இம்மண்ணிடை நீத்து விண்ணுலகிற்றேவர் குழாங்களிற் றலைமைபெற்று தெய்வமடந்தையர்களது குழுவிற்களிகொண்டு விளங்கினான்.

அபயமதியு மபயருசியு சுதத்த முனிவரின் அருள்பெற்று ஜினதருமமுற்று முணர்ந்து, எண்குணனது தன்மைகளையுங் கேட்டறிந்து அணுவிரதம் புரிந்து ஆயுள்முழுமையும் நன்னெறியில் வழுவாது நடந்து இவ்வுலகைத் துறந்து வானுலகத்தில் ஈசானகற்பத்தில் இமையவராய்ச்சென்று விளங்கினர். மணிமகுடம் குண்டலம் ஆரம் செம்பொன்மணி தோள்வளை கடகங்கள் கழல்முதலிய அணிகளின் ஒளிவீச வானவில்லின் வடிவம்போன்ற திவ்விய சரீரத்துடன் விளங்கினார்கள். வானவர்கள் திசைதோறும் நின்றுவணங்கி வாழ்த்தினார்கள். எங்கும் மலர்மாரியும் மந்தமாருதமு மிருந்தன. துந்துபியும் கானமும் விளங்கின. அரம்மைமுதலிய மாதர்கள் பக்கங்களிற் சூழ்ந்து ஆடினார்கள், பாடினார்கள். தேவிமார் மன்மதபாணத்திற்கிலக்காகி மகிழ்ந்து புடைசூழ்ந்தார், இவர்களது திவ்விய தேகத்தின்மணம் ஒருயோசனைதூரம் வீசியது. சரீரகாந்தியும் ஒருயோசனைதூரம் மெட்டியது. உதித்தெழுங்க திரவன்போன்று விளங்கும் பதம்பெற்ற முனிவர்கள் பலரோடு இணையில்லாத பேரின்ப நிலயத்திவர்கள் விளங்கிக்கொண் டிருக்கின்றார்கள்.

இந்நூலுட் கூறிய நல்லொழுக்கத்தின் சிறப்பு யாதெனின் மேல் அது வினையின்வலியை விலக்குவிக்கும். தேவர்களது கதியை யடைவிக்கும். அதனினும் மேலாகிய உவமையற்ற சிவகதியையும் அடைவிக்கும்.

### நாற்பயன்.

வெருவுறு வினைவலி விலக்கு கிற்பது
தருவது சுரகதி தந்து பின்னரும்
பொருவரு சிவகதி புணர நிற்பது,
திருவற நெறியது செவ்வி காண்மினே.

### சர்த்திரஸாரம்.

ஔதேய தேசத்திலுள்ள ராசமாபுரியினரசன் மாரிதத்தன் அந்நகர்க்கு வெளியிலுள்ள சண்டமாரியெனுங் காளிக்குத் திருவிழாக்கொண்டாடி நகரத்தவரைக்கொண்டு விலங்கு பறவைகளின் பலிகளை நிறைவேற்றித் தான் நரபலிகொடுக்க எண்ணித் தளவரன் சண்டகருமனைக் கூவி நகர்க்கேகி அழகிய பாலர்களாயுள்ள மக்களிரட்டையைக் கொணரும்படி கட்டளையிட்டனன். தளவரன் அந்நகர்க்கேகி அங்குவீதியிற் பிக்ஷையேற்றுச்சென்று கொண்டிருந்த பாலன் அபயருசியையும் அவன் றங்கை அபயமதி யையும்கண்டு அவர்களை யழைத்துப்போய் முன்கூறிய காளிகோயிலின் பலிபீடத்தருகில் நரபலியாக நிறுத்தினன். அரசன் வாளுருவிக்கொண்டு அருகில்வந்தான். இரு பாலர்களின் முககாந்தியையும், வாட்டமின்றிநிற்கு நிலையையும் மாரிதத்தன்கண்டு ஐயுற்று நிற்கையில் நகரத்தார் இவ்வரசனும் நகரத்தாரும் நீடுவாழ்கவென்று கூறும்படி இவ்விரண்டுபாலர்களையுங் கேட்டுக்கொண்டனர். அவர்கள் நகையுடன் அரசன் உயிர்க் கொலைமுதலிய பாவத்தில் நீங்கி அறநெறிவழுவாது நின்று நீடுவாழ்கவென்று கூறினர். அரசன் சிரித்தகாரணம்யாது நீவிர்கொலையை நீக்கக்கூறியதேன் என்று அபயருசியை வினவினன். அவ்வினுக்களுக்கு அவர்கள்கூறிய விடைதான் இச்சரித்திரம். இவ்விருபாலரும் ராசமாபுரிக்கு வெளியிற் சோலையில் தீர்த்தயாத்திரையாக வந்திறங்கிய முனிக்கூட்டத்துடன் வந்தவர். அம்முனிக்கூட்டத்தின் தலைவர் சுதத்தாசாரியர். சோலையிற்றங்கினோர் உபவாச விரதத்திலிருந்தனர். இவ்விருபாலர்

களையும் சுதத்தமுனிவர் நகர்க்கேகி உணவு செய்துவரும்படி கட்டளையிட்டபடியே அவர்கள் நகர வீதியிற் பிக்ஷைக்கேகினர். இவர்கள் முன் அம்முனிவரரிடம் தங்கள் முன் ஜன்மங்களைக் கேட்டுணர்ந்த தன்றி ஜினதருமத்தின் மார்க்கத்தையுங்கேட் டுணர்ந்து சிராவக நெறியிலிருந்தார்கள். இதனாற் றுணிப்பாலர் கள் தங்களுக்கு நேரும் கொலை உடற்கேயன்றி உயிருக்கில்லை யென்று திடங்கொண்டு நடுக்கமின்றிச் சிரிப்போடு முகவொளி மழுங்காதிருந்தனர். ஒருயிர்க்கொலையால் மனிதகதி நீங்கி விலங்குகதியில் ஆறுமுறை யசோதரனும் அவன் தாய் சந்திர மதியும் பிறந்தமை கேட்டிருப்பதால் பல்லுயிர்க்கொலையால் மாரி தத்தன் எவ்வகைக் கதியிற் சரித்து அவர்களைப்போல எவ்வகை நரக கதித்துயரி லழுந்திவருந்துவனோ வென்று ஆலோசித்துக் கொலைத்தொழில் நீங்கி வாழ்கவென்று கூறியதாமென்று அபயருசி கூறினன்.

அவந்தி நாட்டில் உஜ்ஜயினி நகரில் அசோகன் எனு மரசன் அரசுபுரிந்தான். இவன் மனைவி சந்திரமதி யிடத்தில் இவனுக்கு யசோதரன் எனுங்குமாரன் ஜனித்து இளவரசனா யிருந்தான். அவன் மனைவி அமிர்தமதி என்பாளிடம் யசோமதி எனுங்குமார னுதித்தான். அசோகன் நரை திரையுற்று யசோ தரனை யரசுரிமையில் வைத்துவிட்டு வனத்திற்கேகிச் சுதத்தார் எனும் ஜினமுனிவரிடம் தீட்சைபெற்றுத் தவம்புரிந்தான். யசோதரன் மண்ணுலக போகத்திலாழ்ந்து ஜினதரும முண ரானாய்ப் பெண்போகத்திலும் புஜபலத்தா லரசர்களை வென்று பொருள் குவிப்பதிலுமே தன்னாள்களைக் கழித்தனன். ஓர்நாளுப் பரிகையில் மனைவி யமிர்தமதியோடு காமபோகத்திலாழ்ந்து இருவரு மெய்சோர்ந்து நித்திரைபோயினர். விடியற்காலத்தில் ஆனைப்பாகன் அட்டபங்கன் அருகிலிருந்த ஆனைச்சாலையிலிரு ந்து மாளவபஞ்சமம் மேலோங்க ஓர் பாடல் பாடினன். அமிர்த மதி அதைக்கேட்டு விழித்தெழுந்து அவன்மேலாசை கொண்

டாள். குணவதியெனுஞ் செவிலித்தாய் அப்பாகனைச் சங்கே தத்தலத்திலழைத்து வந்து அமிர்தமதியுடன் சேரும்படி செய் தாள். அரசன் றன்றேவியின் மன நிலைமாறியதைக்கண்டு ஒரு நாள் பொய்யுறக்கங் கொண்டான். அதை மெய்யென நம்பி அவன்தேவி அட்டபங்கனிடம் சென்று கலவிபுரிந்தாள். அரசன் மறைந்து பின்சென்று இதனையறிந்து கோபந்தணிந்து யாரி டத்து மிதனை வெளியிடாது தன் தாயிடஞ்சென்று தீயகனவு கண்டதாயறிவித்தான். தாய் காளிக்குப்பலிகொடென்று மகனை ஏவினுள். அதற்கு மகனுடன்படாமைகண்டு மாவாற் கோழி செய்து பலிகொடுக்கும்படி செய்தாள். அப்படிப் பலிகொடுத்த போது அக்கோழி சத்தமிட்டுக்கொண்டே மடிந்தது. அரசன் பயந்துமனைவியின் தீத்தொழில் பொருஅகி அவளையும் அரசுரி மையையும் துறந்து வனம்போய்த் தவஞ்செய்தல் நலமென்று தனக்குள் நிச்சயித்துக்கொண்டு தாயினிடம்போய் மர்மமுணர்த் தாது ஜின தீட்சை பெற்றுத் தான் தவம்புரிவேனென்றான். அரசன் மனைவி இதையுணர்ந்து தானும் தவத்திற்கு வருவதாய்ப் பாசாங்கு செய்து, அரசனையும் அவன் றாயையும் தன்னரண்மனை யில் மகளோடு விருந்துண்ணச்செய்து, தன் கணவனையும் அவன் றாயையும் உணவில் விஷம்வைத்துக் கொன்று விட்டாள். அட்டபங்களோடு போக நுகர்ச்சிகருதியே இப்படிச் செய்தாள். பிறகு இவள், மகன் யசோமதியை யரசனாக்கினுள்.

இச்சம்பவங்கட்கு முன்வினை காரணமென்று அபயருசி மாரிதத்தனுக் கறிவித்து, யசோதரனும் அவன்றாய் சந்திரமதி யும் ஆறுமுறை தீவினைப்பயனால் விலங்குகதியிற் சனித்து பிறகு நரககதியிற் றுன்பக்கடலில் மூழ்கினார்களென்றும் கூறி ஞன்.

ஓர் நாள் யசோமதி தன் மனைவி புட்பாவலியுடன் உய் யானத்திற்றங்கி ஆடல் பாடல்களிற் களித்திருந்தனன். அப்

பொழுது சண்டகருமன் அங்கு அணித்தாய கானகத்துள் தவம் புரிந்துகொண்டிருந்த அகம்பனர் எனு முனிவரரைக்கண்டு வணங்கி மனிதர் உடலிற் சீவனிருப்பதைத் தான் பகுத்தறிய வகையில்லையென்று கூறி அம்முனிவரால் ஜீவன திருப்பை யும் கொலைப்பாவத்தின் தீமையையும் தான் கூட்டில்வைத்து வளர்க்கும் கோழிகளிரண்டும் யசோதரன் அவன்றாய் சந்திரமதி யிவர்கள் ஆறுவது பவத்திலேற்ற வடிவங்களென்பதையும் அவர் களின் தீச்செயல்களையும் கேட்டு மனத்தெளிவடைந்தான். கோழிகளகம்பன முனிவர் மொழிந்த முன் பவத்தினையும் ஒழுக்க நெறியையும் கேட்டுத்தங்கட்கினிச் சுபகர்மோதய முண் டாக வழி ஏற்பட்டதென்று மிகக் களிப்புற்றுச் சிறகுகளை யடித்துக்கொண்டு கூவின. அருகில் நித்திரை யிலிருந்த அரசன் றூக்கத்தை இக்கோழிகளின் சத்தம் கலைக்கவே அவன் சப்தவேதியெனும் பாணத்தைத்தொடுத்து அக்கோழி களிரண்டையுங் கொன்றுவிட்டான். பிறகு புட்பாவலியிடத் தில் யசோமதிக்கு இரட்டைப்பிள்ளை பிறந்தது. மூத்தது ஆண் அபயருசி. இளையது அபயமதி, பெண். இவ்விரட்டைப்பிள் ளைக் கப்புறம் யசோமதிக்கு ஒரு குமாரன் பிறந்தான். அக்குமார னின் பாட்டன் யசோதரனாகலின் அப்பெயரே அக்குமாரன் பெயராகவைக்கப்பட்டது. யசோமதியரச னிவ்வாறு அரசுநடா த்தி வருகையில் ஒருநாள் வனத்தில் வேட்டையாடப்போய் அங்குச் சுதத்தமுனிவரைக் கண்டு வேட்டைக்கு வந்ததனக்கு யாதொருவிலங்கு மகப்படாமையால் அம்முனிவரைக் கொல்வே னென்று வாளுங்கையுமாக அவரிடஞ்சென்றபோது கல்யாண மித்திரன் எனும் வணிகர் தலைவன் அம்முனிவரின் தவச்சிறப் பையும் கருணைமுதலிய நற்குணங்களையு மெடுத்தோதக்கேட்டு விவேகோதயமாகி அம்முனிவரைப் பணிந்து தான்செய்ததைப் பொறுத்தருளித் தனது சுற்றத்தாரின் முன்பவங்களை அருளிச் செய்யும்படி பணிந்து வேண்டிக்கொண்டனன். அவதி ஞானத் தாலம் முனிவர் அசோகன் விண்ணுலகில் நற்பதத்தில் வீற்றி

ருப்பதையும் தன் புருஷனையும் அவன்றாயையும் வஞ்சனையாக உணவில் விஷம்வைத்துக் கொன்றொழித்த அமிர்தமதி நரக கதியில் பல்கோடி நரகயாதனையி லழுந்திவாடுவதையும் நல் லொழுக்கத்தின் சீரையும் எடுத்துக் கூறியமேல் யசோமதியரசன் வணிசர் தலைவனையும் அம்முனிவரையும் நல்லொழுக்க நெறியளித்த முதல்வரெனக்கொண்டு ஜினதருமசூக்கும முணர்ந்து அரசுரிமையைத் தன் குமாரனிடம் ஒப்புவித்து வனத்திலம் முனிவரரால் தீட்சைபெற்றுத் தவம்புரியலுற்றான். மாரிதத்தன் அபயருசியைப் பணிந்து தீட்சையருளும்படி வேண்டினன். அவன் சுதத்த முனிவரிட முனக்குவேண்டுவதைப பெற்றுக் கொள்வாயாக வென்றனன். மாரிதத்த னரசுரிமையைத் தன் மூத்தமகன் புஷ்பதந்தனுக் குரித்தாக்கிவிட்டு தீட்சைபெற்றுத் தவம்புரிந்து இவ்வுலகை நீத்து விண்ணுலகிற் றேவகதியிற்சென்று விளங்கினன். அமிர்தருசி அமிர்தமதி யிருவரும் சுதத்தமுனிவரிடம் ஒழுக்கநெறிதேர்ந்து அணுவிரதநெறியில் வழுவாதிருந்து நெடுநாளிம் மண்ணுலகில் வாழ்ந்து பிறகு விண் ணுலகில் தேவகதியில் விளங்கினர்.

## வம்ச விருட்சம்.

அசோகன் = சந்திரமதி

யசோதரன் = அமிர்தமதி

யசோமதி = புட்பாவலி

அபயருசி. அபயமதி. யசோதரன்.

## முடிவுரை.

யசோதர காவியத்தின் கதாநாயகன் யசோதரராஜன். இவ்வரசன் மனைவி அமிர்தமதி. கதைகேட்டுப் பயனடைந்தவன் மாரிதத்தனும் அரசன்.

## இச்சரித்திலடங்கிய நல்லொழுக்க நெறிகள்.

உயிர்க்கொலை புரிந்த மாந்தர் யாவராயினும் அவர்கள் பாப கருமோதயத்தால் விலங்கு கதிகளிற் சனித்துத் துன்புறுவதோடு நரககதியிலும் பலநாள் துன்பத்திலாழ்ந்து வருந்துவரென்பதும், கிராமதேவதைக் கென்று மிருக பக்ஷிகளையும் நரரையும் பலிகொடுப்பதும் கொலையேயாமென்பதும். (2) கொலையின் சார்புடைத்தாய் நேரும் புலாலுண்ணலும் அவ்வாறு ஈனஜன்மத்தையும் நரகத்துயரத்தையு மளிக்குமென்பதும் (3) பிறர் மனையாளை யபகரித்தல் இம்மையில் இவ்வுலகில் பழிலாக்கும் நிந்தைக்கும் இடமாவதன்றி நரகத்துயரத்திற்கும் நாற்றங்காமென்பதும் (4) மகளிரின் மனோகதி

### வெண்பா.

ஏந்தெழின் மிக்கா னிளையா னிசைவல்லான்
காந்தையர் கண்கவர் நோக்கத்தான்—வாய்ந்த
நயனுடை யின்சொலான் வேளெனினு மாதர்க்
கயலார்மே லாகும் மனம்.

என்கிறபடி ரூயகாது முதலிய புலன்களின் வழியோடி கான ரஸமெனும் வலையிற் சிக்கிச் சபலமுற்று ஈனஜாதியானுடன் கூட்டுவித்துத் தொழு நோயையு முலக நிந்தையையுமுண்டாக்கி விலங்குகதி நரககதிகளில் ஒய்வில்லாத பெருந்துயரிலழுத்துவிக்குமென்பதும் (5) முன்காலத்திலரசர்கள் இல்லாளோடறம் புரிந்து சற்புத்திரப்பேறுபெற்று அப்புத்திரனை நாடாளுவித்துத் தபோவனம் புக்குத் தவம்புரிந்து நற்பேறுபெறுவாரென்ப

தும் (6) முனிவர் தபோவனத்தில, மிருகபக்ஷிகளருகிருந்து கேட்கும்படி, பிறர்க்குத் தருமபோதனை செய்ததைக்கொண்டே அவைகள் மானிட ஜன்மமடைந்து நற்கதி பெருவதுண்டென் பதும் (7) கன்மபரிபாகம் வேறு ஜன்மத்தையும் தேவகதி யையுமடைவிக்கும். நல்லொழுக்கம் தீவினையையும் நன்வினை யையும் முதலறமாய்த்து நித்தியர்நந்த நிலயமாம் மோக்ஷபதவி யை அடைவிக்கும் என்பதுமேயாம்.

கவி.

மருவு வெவ்வினை வாயின் மறத்துடன்
பொருவில் புண்ணிய போகம் புணர்ப்பதும்
வெருவு செய்யும் வினைப்பய னிற்றெனத்
தெரிவு றுப்பதும் செப்புத லுற்றதே.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| xvi | 19 | விஷமாய் | விஷயமாய் |
| iii | 6 | அகலமூம் | அகலமும் |
| ,, | 8 | போஜன் காளி | போஜன் காளி |
| v | 3 | காலத்தை | காலத்தி |
| ,, | 13 | வழங்குங்கும் | வழங்கும் |
| vi | 10 | பட்டாத . | படாத |
| ix | 5 | லோசா | லோகா |
| i | 12 | யென் | என் |
| iii | 22 | நகற்பு | நகர்ப்பு |
| vi | 1 | சென்றா | சென்றார் |
| vii | 5 | ஒர் | ஓர் |
| viii | 14 | திக்கேலா | திக்கெலா |
| xii | 18 | பெறுய | பெறுபய |
| ,, | 20 | நெடிக்கட் | நெறிக்கட் |
| ,, | 21 | ப்ண்ணுஞ் | பண்ணுஞ் |
| xiii | 23 | வெத | வேத |
| xviii | 8 | கிணத்து | கிணற்று |
| ,, | 22 | அளித்து | அளித்துக் |
| xix | 7 | த்காத்தல் | க்காத்தல் |
| ,, | 25 | மறுந்து | மறந்து |
| xx | 4 | அவயகா | அவயவகா |
| xxi | 15 | மடைந்தை | மடந்தை |
| xxiii | 3 | அமிர்தி | அமிர்தமதி |
| ,, | 8 | வதியைக் | வதியை |
| xxiv | 5 | சீரிற் | சீறிற் |
| ,, | 8 | மின்றி | மன்றி |
| ,, | 13 | குஷ்டி | குஷ்ட |
| xxv | 1 | உனச்கு | உனக்கு |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| xxviii | 15 | வாராம் | வாராய் |
| ” | 23 | உயிர்கெட் | உயிர்கட் |
| xxix | 3 | இதனைகே | இதனைக்கே |
| ” | 21 | மாற்றிய | மாற்றி |
| xxx | 1 | கொன்றோ | கொன்றொ |
| xxxiv | 16 | கவலைக் | கவலை |
| ” | 17 | வசத்தால்ப் | வசத்தால் |
| ” | 23 | கிருப்பிரை | சிருப்பிரை |
| xli | 7 | கடல | கடலி |
| xliii | 17 | சண்டகுரும | சண்டகரும |
| xliv | 22 | தோஞு | தோளு |
| ” | 27 | மென்றோ | மொன்றொ |
| xlv | 18 | யாற் | யால் |
| xlix | 8 | திண்றக் | திண்றிக் |
| li | 16 | சச்கர | சர்க்கரா |
| ” | 23 | மாயுள்ள | யாயுமுள்ள |
| ” | 26 | காலால்த் | காலால் |
| lii | 28 | அமிர்மதி | அமிர்தமதி |
| lvi | 9 | மாரித்த | மாரிதத்த |
| ” | 12 | துன்புங் | துன்பங் |
| ” | 26 | மிருங் | மிளங் |
| lvii | 12 | துறுந்து | துறந்து |
| ” | 19 | அரம்மை | அரம்பை |
| lxi | 2 | எணு | எனு |
| lxiii | 13 | பழிலாச்கும் | பழிக்கும் |
| ” | 14 | நாற்றங்கா | நாற்றங்காலா |
| ” | 20 | ரூய | யே |



உ

ஆதிபகவன்றுணை.

# யசோதர காவியம்.



## காப்பு.

உலக மூன்று மொருங்குணர் கேவலத்
தலகி லாத வனந்த குணக்கடல்
விலகி வெவ்வினை வீடு விளைப்பதற்
கிலகு மாமலர்ச் சேவடி யேத்துவாம்.

## பாயிரம்.

நாத னம்முனி சுவ்வத னல்கிய
தீது தீர்திகழ் தீர்த்தன்செல் கின்றநா
ளோத மல்கி யசோதர னெய்திய
தோத வுள்ள மொருப்படு கின்றதே. 1

## அவையடக்கம்.

உள்வி ரிந்த புகைக்கொடி யுண்டென
வெள்ளு கின்றன ரில்லை விளக்கினை
உள்ளு கின்ற பொருட்டிற மோர்பவர்
கொள்வ ரெம்முரை கூறுதற் பாலதே. 2

## நூலின் விஷயம்.

மருவு வெவ்வினை வாயின் மறுத்துடன்
பொருவில் புண்ணிய போகம் புணர்ப்பதும்
வெருவு செய்யும் வினைப்பய னிற்றெனத்
தெரிவு றுப்பதும் செப்புத லுற்றதே. 3

பாயிரம் முற்றிற்று.

## நூல்.

## முதலாவது சருக்கம்.

பைம்பொன் ளுவற் பொழிற்பா தத்திடை
நம்பு நீரணி நாடுள தூடுபோய்
வம்பு வார்பொழில் மாமுகில் சூடுவ
விம்ப ரீடில தௌதய மென்பதே. 1

திசையு லாமிசை யுந்திரு வுன்னிலாய்
வசையி லாநகர் வானவர் போகமும்
தசையி லாவள காபுரி தானலா
விசையி லாத விராச புரமதே. 2

இஞ்சு மஞ்சினை யெய்தி நிமிர்ந்தது
மஞ்சு லாமதி சூடின மாளிகை
யஞ்சொ லாரவர் பாடலொ டாடலால்
விஞ்சை யருல கத்தினை வெல்லுமே. 3

பாரி தத்தினைப் பண்டையின் மும்மடி
பூரி தத்தொளிர் மாலைவெண் பொற்குடை
வாரி தத்தின் மலர்ந்த கொடைக்கரன்
மாரி தத்தனென் பானுளன் மன்னவன். 4

அரசன் மற்றவன் றன்னொடு மன்னகர்
மருவு மானுயர் வானவர் போகமும்
பொருவில் வீடு புணர்திற மும்மிவை
தெரிவ தொன்றிலர் செல்வ மயக்கினல். 5

செறிந்த நுண்குழல் சேரிழை யாருழை
சரிந்த காத றடையில தாகவே
விரிந்த வெஞ்சிலை மன்னவன் வைகுநாள்
விரிந்த தின்னிள வேனிற் பருவமே. 6

கோங்கு பொற்குடை கொண்டு கவித்தன
வாங்கு வாகை வளைத்தன சாய்மரை
கூங்கு யிற்குல மின்னியங் கொண்டொலி
பாங்கு வண்டொடு பாடின தேனினம். 7

மலர்ந்த பூஞ்சிகை வார்கொடி மங்கையர்
தலந்த லந்தொறு மாடினர் தாழ்ந்தனர்
கலந்த காதன்மை காட்டுநர் போலவே
யலர்ந்த வண்டளிர் மாவின மேயெலாம். 8

உயர்ந்த சோலைக ளூடெதிர் கொண்டிட
வயந்த மன்னவன் வந்தன னென்றலு
நயந்த மன்னரு மன்னகர் மாந்தரும்
வயந்த மாடு வகையின ராயினார். 9

கானும் வாவியுங் காவு மடுத்துடன்
வேனி லாடல் விரும்பிய போழ்தினில்
மான யானைய மன்னவன் றன்னுழை
யேனை மாந்த ரிறைஞ்சுபு கூறினார். 10

என்று மிப்பரு வத்தினொ டைப்பசி
சென்று தேவி சிறப்பது செய்துமஃ
தொன்று மோரல மாயின வொன்றலா
நன்ற லாதன நங்களை வந்துறும். 11

நோவு செய்திடு நோய்பல வாக்கிடு
மாவி கொள்ளு மலாதன வுஞ்செயுந்
தேவி சிந்தை சிதைந்தனள் சீறுமேல்
காவன் மன்ன கடிதெழு கென்றனர். 12

என்று கூறலு மேதமி தென்றலன்
சென்று நல்லறத் திற்றெளி வின்மையா
னன்றி தென்று நன்னக ரப்புறத்
தென்றி சைக்கட் சிறப்பொடு சென்றனன். 13

சண்ட கோபி தகவில தத்துவங்
கொண்ட கேள்வியுங் கூரறிவும் மிலாத்
தொண்டர் கொண்டு தொழுந்துருத் தேவதை
சண்ட மாரி தனதிட மெய்தினான். 14

பாவ மூர்த்தி படிவ மிருந்தவத்
தேவி மாட மடைந்து செறிகழன்
மாவ லோன்வலங் கொண்டு வணங்கினன்
தேவி யெய்மிடர் சிந்துக வென்றரோ. 15

மன்ன னேவயின் மாமயில் வாரணந்
துன்னு சூகர மாடெரு மைத்தொகை
யின்ன சாதி விலங்கி விரட்டைகள்
பின்னி வந்து பிறங்கின கண்டனன். 16

யானிவ் வாளினின் மக்க ளிரட்டையை
யீன மில்பலி யாக வியற்றினால்
ஏனை மானுயர் தாமிவ் விலங்கினி
லான பூசனை யாற்றுத லாற்றென. 17

வாட லொன்றிலன் மக்க ளிரட்டையை
யீடி லாத வியல்பினி லிவ்வழி
யேட சண்ட கருமதந் தீகென
நாட வோடின னன்னகர் தன்னுளே. 18

வேறு.

ஆயிடைச் சுதத்த னைஞ்ஞூற் றவாருந் தவர்க ளோடுந்
தூயமா தவத்தின் மிக்க வுபாசகர் தொகையு ஞ்சூழச்
சேயிடைச் சென்றோர் தீர்த்த வந்தனை செய்யச் செல்வோன்
மாயமில் குணக்குன் றன்ன மாதவர்க் கிறைவன் வந்தான். 19

வந்துமா நகர்ப்பு றத்தோர் வளமலர்ப் பொழிலுள் விட்டுச்
சிந்தையா னெறிக்கட் டமை தீர்த்திடு நியம முற்றி
யந்திலா சனங்கொண் டண்ண லனசனத் தவம மர்ந்தான்
முந்துநா முரைத்த சுற்ற முழுவதி னோடு மாதோ. 20

உளங்கொள மலிந்த கொள்கை யுபாசகர் குழுவி னுள்ளார்
அளந்தறி வரிய கேள்வி யபயமுன் னுருசி தங்கை
யிளம்பிறை யனைய நீரா ளபயமா மதியென் பாளுந்
துளங்கிய மெய்ய ருள்ளந் துளங்கலர் தொழுது நின்றார். 21

அம்முனி யவர்க டம்மை யருளிய மனத்த னாகி
வம்மினீர் பசியின் வாடி வருந்திய மெய்ய ரானீர்
எம்முட னுண்டி மாற்றா தின்றுநீர் சரிதை போகி
நம்மிடை வருக வென்ன நற்றவர்த் தொழுது சென்றார். 22

வள்ளிய மலருஞ் சாந்து மணிபுனை கலனு மின்றாய்
வெள்ளிய துடையொன் றாகி வென்றவ ருருவ மேலார்
கொள்ளிய வமைந்த கோலக் குல்லக வேடங் கொண்ட
வள்ளலு மடந்தை தானும் வளநகர் மருளப் புக்கார். 23

வில்லின தெல்லை கண்ணு னோக்கிமெல் லடிகள் பாவி
நல்லருள் புரிந்துயிர்க்கண் ணைக்முத லாய நாணி
யில்லவ ரெதிர்கொண் டயி னெதிர்கொளுண் டியரு மாகி
நல்லற வமுத முண்டார் நடந்தனர் வீதி யூடே. 24

அண்டல ரெனினுங் கண்டா லன்புவைத் தஞ்சு நீரார்
கண்டனன் கண்டு சண்ட கருமனு மனங்க லங்காப்
புண்டரீ கத்தின் கொம்பு பொருவில்மன் மதனும் போன்று
கொண்டிளம் பருவ மென்கொல் குழைந்திவண் வந்த தென்றான்.

எனமனத் தெண்ணி நெஞ்சத் திரங்கிய மன்ன னேவல்
தனைநினைந் தவர்க டம்மைத் தன்னுழை யவரின் வவ்விச்
சினமலி தேவி கோயிற் றிசைமுக மடுத்துச் சென்றான்
இனையது பட்ட தின்றென் றிளையரு மெண்ணி னாரே. 26

வன்சொல்வாய் மறவர் சூழ மதியமோர் மின்னோ டொன்றித்
தன்பரி வேடந் தன்னுட் டானனி வருவ தேபோ
லன்பினா லையன் றங்கை யஞ்சுத லஞ்சி நெஞ்சிற்
றன்கையான் முன்கை பற்றித் தானவட் கொண்டு சொல்வான்.

நங்கைநீ யஞ்ச னெஞ்சி னமக்கிவ ணழிவொன் றில்லை
யிங்குநம் முடம்பிற் கேத மெய்துவ திவரி னெய்தி
னங்கதற் கழுங்க லென்னை யதுநம தன்றென் றன்றோ
மங்கையா மதனை முன்னே மனத்தினில் விடுத்த தென்றான்.

அஞ்சின மெனினு மெய்யே யடைபவந் தடையு மானா
லஞ்சுத லதனி னென்னை பயநமக் கதுவு மன்றி
யஞ்சுத றுன்பந் தானே யல்லது மதனிற் சூழ்ந்த
நஞ்சென வினைக ணம்மை நாடொறு நலியு மென்றான். 29

அல்லது மன்னை நின்னோ டியானுமுன் னனேக வாரந்
தொல்வினை துரப்ப வோடி விலங்கிடைச் சுழன்ற போழ்து
நல்லுயிர் நமர்க டாமே நலிந்திட விறந்த தெல்லா
மல்லன்மா தவனின் யாமே மறிந்துணர்ந் தனமு மன்றோ. 30

கறங்கென வினையி னோடிக் கதியொரு நான்கி னுள்ளும்
பிறந்தநாம் பெற்ற பெற்ற பிறவிகள் பேச லாகா
விறந்தன விறந்து போக வெய்துவ தெய்திப் பின்னும்
பிறந்திட விறந்த தெல்லா மிதுவுமவ் வியல்பிற் றேயாம். 31

பிறந்தநம் பிறவி தோறும் பெறுமுடம் பவைகள் பேணத்
துறந்தறம் புணரி னம்மைத் தொடர்ந்தன வல்ல தோகாய்
சிறந்ததை யிதுவென் றெண்ணிச் செம்மையே செய்யத் தாமே
யிறந்தன மிறந்த காலத் தெண்ணிறந் தனர்க ளெல்லாம். 32

முழமொரு மூன்றிற் றெட்டு மூரிவெஞ் சிலைக ளைஞ்ஞூற்
றெழுமுறை பெருகி மேன்மே லெய்திய வுருவ மெல்லா
மழலினுண் மூழ்கி யன்ன வருநவை நரகந் தன்னு
ளுழைவிழி நம்மோ டொன்றி யொருவினை வுணர லாமோ. 33

அங்குலி யங்கம் பாக மணுமுறை பெருகி மென்மேல்
பொங்கிய வீரைஞ் ஞூறு புகைபெறு முடையு டம்பு
வெங்கனல் வினையின் மேனாள் விலங்கிடைப் புக்கு வீழ்ந்து
நங்களை வந்து கூடி நடந்தன வனந்த மன்றே. 34

ஓரினோர் முழங்கை தன்மே லோரோருப தேச மேறி
மூரிவெஞ் சிலைகள் மூவீ ராயிர முற்ற வுற்ற
பாரின்மேல் மனிதர் யாக்கை பண்டுநாம் கொண்டு விட்ட
வாரிவாய் மணலு மாற்றா வகையின வல்ல வோதான். 35

இருமுழ மாதி யாக வெய்திய வகையி னோங்கி
வருசிலை யிருபத் தைந்தின் வந்துறு மங்க மெல்லாந்
திருமலி தவத்திற் சென்று தேவர்த முலகிற் பெற்ற
தொருவரா லுரைக்க லாமோ வுலந்தன வனந்த மன்றே. 36

துன்பகா ரணமி தென்றே துடக்கறு மெனவுந் துஞ்சா
வன்புறு நரகர் யாக்கை யவைகளு மமரர் கற்பத்
தின்பகா ரணமி தென்றே யெம்முட னியல்க வென்றே
யன்புசெய் தனக டாமு மழியுநா ளழியு மன்றே. 37

வந்துடன் வணங்கு வானோர் மணிபுனை மகுட கோடி
தந்திரு வடிக ளேந்துந் தமனிய பீட மாக
விந்திர விபவம் பெற்ற விமையவ ரிறைவ ரேனுந்
தந்திரு வுருவம் பொன்றத் தளர்ந்தன ரனந்த மன்றோ. 38

மக்களிற் பிறவி யுள்ளு மன்னர்தம் மன்ன ராகித்
திக்கெலா மடிப்ப டுத்துந் திகிரியஞ் செல்வ ரேனு
மக்குலத் துடம்பு தோன்றி யன்றுதொட் டின்று காறு
மொக்கநின் றார்கள் வையத் தொருவரு மில்லை யன்றே. 39

ஆடைமுன் னடிய திட்டோ ரந்துகி லசைத்த லொன்றோ
மாடமுன் னதுவி டுத்தோர் வளமனை புதிதின் வாழ்க
நாடினெவ் வகையு மஃதே நமதிறப் பொடு பிறப்பும்
பாடுவ தினியென் னங்கை பரிவொழிந் திடுக வென்றான். 40

அண்ணநீ யருளிற் றெல்லா மறுவருப் புடைய மெய்யி
னண்ணிய நமதெ னுள்ளத் தவர்களுந் துறுதி நாடி
விண்ணின்மே லின்ப மல்லால் விழைபயன் வெறுத்து நின்ற
கண்ணனாய் நங்கட் கின்னங் கட்டுரை யென்னை யென்றாள். 41

அருவினை வினையு ளாய வருந்துயர்ப் பிறவி தோறும்
வெருவிய மனத்து நம்மை வீடில விளைந்த வாறுந்
திருவிடை யடிக டந்த திருவறப் பயனுந் தேறி
வெருவிநாம் விடுத்த வாழ்க்கை விடுவதற் கஞ்ச லுண்டோ. 42

பெண்ணுயி ரெளிய தாமே பெருந்திற லறிவும் போரத்
திண்மையு முடைய வல்ல சிந்தையி னென்ப தெண்ணி
யண்ணநீ யருளிச் செய்தா யன்றிநல் லறத்திற் காட்சி
கண்ணிய மனத்த ரிம்மைக் காதலு முடைய ரோதாம். 43

இன்றிவ ணைய வென்க ணருளிய பொருளி தெல்லாம்
நன்றென நயந்து கொண்டே னடுக்கமு மடுத்த தில்லை
யென்றனுக் கிறைவ னீயே யெனவிரு கையுங் கூப்பி
யின்றியா னியாது செய்வ தருளுக தெருள வென்றாள். 44

ஒன்றிய வுடம்பின் வேறு முயிரின துருவ முள்ளி
நன்றென நயந்து நங்கள் நல்லறப் பெருமை நாடி
வென்றவர் சரண மூழ்கி விடுதுநம் முடல மென்றான்
நன்றிது செய்கை யென்றே நங்கையு நயந்து கொண்டாள். 45

அறிவொ டாலோக முள்ளிட் டனந்தமா மியல்பிற் றாகி
யறிதலுக் கரிய தாகி யருவமா யமல மாகிக்
குறுகிய தடத்தொள் வாள்போற் கொண்டிய லுடம்பின் வேறு
யிறுகிய வினையு மல்ல தெமதியல் பென்று நின்றார். 46

உறுதியைப் பெரிது மாக்கி யுலகினுக் கிறைமை நல்கிப்
பிறவிசெற் றரிய வீட்டின் பெருமையைத் தருத லானு
மறிவினிற் றெரிந்த மாட்சி யாதனத் திரய மென்னும்
பெறுதலுக் கரிய செல்வம் பெற்றனம் பெரிது மென்றார். 47

ஈங்குநம் மிடர்க டீர்க்கு மியல்பினர் நினைந்து மேலிவ்
வோங்கிய வுலகத் தும்ப ரொளிசிகா மணியி னின்றார்
வீங்கிய கருமக் கேட்டின் விரிந்தவெண் குணத்த ராகித்
தீங்கெலா மகற்றி நின்ற சித்தரே செல்ல றீர்ப்பார். 48

பெருமலை யனைய காதிப் பெரும்பகை பெயர்த்துப் பெற்ற
திருமலி கடையி ளுண்மைத் திருவொடு திளைப்ப ரேனு
முரிமையி னுயிர்கட் கெல்லா மொருதனி விளக்க மாகித்
திருமொழி யருளுந் தீர்த்த கரர்களே துயர்க டீர்ப்பார். 49

ஐவகை யொழுக்க மென்னு மருங்கல மொருங்க ணிந்தார்
மெய்வகை விளக்கஞ் சொல்லி நல்லற மிகவ ளிப்பார்
பவ்வியர் தம்மைத் தம்போற் பஞ்சநல் லொழுக்கம் பாரித்
தவ்விய மகற்றுந் தொல்லா சிரியரெம் மல்ல றீர்ப்பார். 50

அங்கநூ லாதி யாவு மரிப்பறத் தெரிந்து தீமைப்
பங்கமேழ் பங்க மாடிப் பரமனன் னெறிப யின்றிட்
டங்கபூ வாதி மெய்நூ லயிழ்தகப் படுத்த டைந்த
நங்களுக் களிக்கு நீரார் நம்வினை கழுவு நீரார். 51

போதுறு பிறவி போக்கும் பெருந்திரு வுருவுக் கேற்ற
கோதறு குணங்கள் பெய்த கொள்கல மனைய ராகிச்
சேதியி னெறியின் வேறு சிறந்தது சிந்தை செய்யாச்
சாதுவ ரன்றி யாரோ சரணமக் குலகி னுவார். 52

இனையன நினைவை யோரு மிளைஞரை விரைவிற் கொண்டு
தனையர சருளும் பெற்றிச் சண்டனச் சண்ட மாரி
முனைமுக வாயிற் பீட முன்னருய்த் திட்டு நிற்பக்
கனைகழ லரச னையோ கையில்வா ளுருவி னுனே. 53

கொலைக்களங் குறுகி நின்றுங் குலுங்கலர்குணங்க டம்மா
லிலக்கண மமைந்த மெய்ய ரிருவரு மியைந்து நிற்ப
நிலத்திறை மன்னன் வாழ்க நெடிதென வுரைமி னென்றூர்
மலக்கிலா மனத்தர் தம்வாய் வறியதோர் முறுவல் செய்தார். 54

மறவியின் மயங்கி வையத் துயிர்களை வருத்தஞ் செய்யா
தறவியன் மனத்தை யாகி யாருயிர்க் கருள்ப ரப்பிச்
சிறையன பிறவி போக்குந் திருவற மருவிச் சென்று
நிறைபுக ழுலகங் காத்து நீடுவாழ் கென்று நின்றார். 55

நின்றவர் தம்மை நோக்கி நிலந்தளர்ந் திட்டு மன்னன்
மின்றிகழ் மேனி யார்கொல் விஞ்சையர் விண்ணு ளார்கொ
லன்றியிவ் வுருவ மண்மே லவர்களுக் கரிய தென்றா
னின்றவர் நிலைமை தானு நினைவினுக் கரிய தென்றான். 56

இடுக்கண்வந் துறவு மெண்ணா தெரிசுடர் விளக்கி னென்கொ
னடுக்கமொன் றின்றி நம்பா னருபொருள் கூறு கென்ன
வடுக்குவ தடுக்கு மானா லஞ்சுதற் பயனின் றென்றே
நடுக்கம தின்றி நின்றாம் நல்லறத் தெளிவு சென்றாம். 57

முன்னுயி ருருவிற் கேத முயன்றுசெய் பாவந் தன்னா
லின்னபல் பிறவி தோறு மிடும்பைக டொடர்ந்து வந்தோ
மன்னுயிர்க் கொலையி னாலிம் மன்னன்வாழ் கென்னு மாற்ற
மென்னதாய் விளையு மென்றே நக்கன மெய்ம்மு ளென்றார். 58

கண்ணினுக் கினிய மேனிக் காளைதன் கமல வாயிற்
பண்ணினுக் கினிய சொல்லைப் படியவர் முடியக் கேட்டே
யண்ணலுக் கழகி தாண்மை யழகினுக் கமைந்த தேனும்
பெண்ணினுக் கரசி யாண்மை பேசுதற் கரிய தென்றார். 59

மன்னனு மதனைக் கேட்டே மனமகிழ்ந் தினிய னாகி
யென்னைநும் பிறவி முன்ன ரிறந்தன பிறந்து நின்ற
மன்னிய குலனு மென்னை வளரிளம் பருவந் தன்னி
லென்னைநீ ரினைய ராகி வந்தது மியம்பு கென்றான். 60

அருளுடை மனத்த ராகி யறம்புரிந் தவர்கட் கல்லால்
மருளுடை மறவ ருக்கெம் வாய்மொழி மனத்திற் சென்று
பொருளியல் பாகி நில்லாப் புரவல கருதிற் றுண்டே
லருளியல் செய்து செல்க வாகுவ தாக வென்றான். 61

அன்னண மண்ணல் கூற வருளுடை மனத்த னாகி
மன்னவன் றன்கை வாளு மனத்திடை மறனு மாற்றி
யென்னினி யிறைவ நீயே யெனக்கென விறைஞ்சி நின்று
பன்னுக குமர நுங்கள் பவத்தொடு பரிவு மென்றான். 62

மின்னொடு தொடர்ந்து மேக மேதினிக் கேத நீங்கப்
பொன்வரை முன்னர் நின்று புயல்பொழிந் திடுவ தேபோல்
அன்னமென் னடைய ராளு மருகலைந் துருகும் வண்ண
மன்னவர் குமரன் மன்னற் கறமழை பொழிய லுற்றான். 63

அரசனின் னகத்து மாட்சி யசோபெரி தழகி தாயிற்
றுரைசெய்தா லுறுதி யாய துணர்ந்துகொண் டுயர்தி போலும்
விரைசெய்தார் வரைசெய் மார்ப வினவிய பொருளி தெல்லா
நிரைசெய்தே புகல்வன் யானீ நினைவொடு கேளி தென்றான்.

எவ்வள விதனைக் கேட்பா ரிருவினை கழுவு நீரா
ரவ்வள வவருக் கூற்றுச் செறித்துட னுதிர்ப்பை யாக்கு
மெய்வகை தெரிந்து மாற்றை வெருவினர் வீட்டை யெய்துஞ்
செவ்விய ராகச் செய்து சிறப்பினை நிறுத்தும் வேந்தே. 65

மலமலி குரம்பை யின்கண் மனத்தெழு விகற்பை மாற்றும்
புலமலி போகத் தின்கண் ணசையைப் பொன்று விக்கும்
கொலைமலி கொடுமை தன்னைக் குறைத்திடு மனத்திற் கோலச்
சிலைமலி நுதலி னார்தங் காதலிற் றீமை செய்யும். 66

பிறந்தவர் முயற்சி யாலே பெறுபய னடைவ தல்லா
லிறந்தனர் பிறந்த தில்லை யிருவினை தானு மில்லென்
றறைந்தவ ரறிவில் லாமை யதுவிடுத் தறமொ ழிக்கட் [ருன்.
சிறந்தன முயலப் பண்ணுஞ் செப்புமிப் பொருண்மை யென்

அறப்பொருள் விளக்குங் காட்சி யருந்தவ ரருளிற் றன்றிப்
பிறப்புணர்ந் ததனின் யாமே பெயர்த்துணர்ந் திடவும் பட்ட
திறப்பவு மதன்கட் டேற்ற மினிதுவைத் திடுமி னென்று
றுறப்பணிந் தெவரு முள்ளத் துவந்தனர் கேட்க லுற்றார். 68

முதற்சருக்கம் முற்றிற்று.

பாயிரப்பாடல்கள் ... ... ... 4.

ஆகப்பாடல்கள் ... ... ... 72.





௨

# இரண்டாவது சருக்கம்.

வளவயல் வாரியின் மலிந்த பல்பதி
யளவறு சனபத மவந்தி யாமதின்
விளைபய னமரரும் விரும்பு நீர்மைய
துளதொரு நகரதுஞ் சயினி யென்பவே. 1

கந்தடு களிமத யானை மன்னவ
னிந்திர னெனுந்திற லசோக னென்றுளன்
சந்திர மதியெனு மடந்தை தன்னுட
னந்தமி லுவகையி னமர்ந்து வைகுநாள். 2

இந்துவோ ரிளம்பிறை பயந்த தென்னவே
சந்திர மதியொரு தனயற் றந்தன
ளெந்துயர் களைபவ னிசோ தரனென
நந்திய புகழவ னாம மோதினான். 3

இளங்களி றழுழைவயி னேத மின்றியே
வளங்கெழு குமாரனும் வளர்ந்து மன்னனாய்
விளங்கிழை யமிழ்தமுன் மதியை வேள்வியா
லுளங் கொளப் புணர்ந்துட னுவகை யெய்தினான். 4

இளையவ னெழினல மேந்து கொங்கையின்
விளைபய ளிசொதரன் விழைந்து செல்லுநாள்
கிளையவ ருவகையிற் கெழும வீன்றனள்
வளையவ ளிசோமதி மைந்தன் றன்னையே. 5

மற்றோர்நாள் மன்னவன் மகிழ்ந்து கண்ணடி
பற்றுவா னடிதொழப் படிவ நோக்குவா
னொற்றைவார் குழன்மயி ருச்சி வெண்மையை
யுற்றுரு வகையதை யுளைந்து கண்டனன். 6

ஒண்டளிர் புரைதிரு மேனி மாதரார்
கண்டக லுறவரு கழிய மூப்பிது
வுண்டெனி லுளைந்திக லுருவ வில்லிதன்
வண்டுளை கணைபயன் மனிதர்க் கென்றனன். 7

இளமையி னியல்பிது வாய வென்னினி
வளமையி லிளமையை மனத்து வைப்பதென்
கிளைமையு மனையதே கெழுமு நம்முளத்
தளைமையை விடுவதே தகுவ தாமினி. 8

முந்துசெய் நல்வினை முளைப்ப வித்தலை
சிந்தைசெய் பொருளொடு செல்வ மெய்தினு
முந்தையின் மும்மடி முயன்று புண்ணிய
மிந்திர வுலகமு மெய்தற் பாலதே. 9

இனையன நினைவுறீஇ யசோத மன்னெனுந்
தனையனை நிலமகட் டலைவ னாகேனக்
கனைமணி வனைமுடி கவித்துக் காவலன்
புனைவளை மதிமதி புலம்பப் போயினான். 10

உரைகழ லசோகன் மெய்க்குண தரற்பணிந்
தரசர்க ளைம்பதிற் றிருவர் தம்முட
னுரைசெய லருந்தவத் துருவு கொண்டுபோய்
வரையுடை வனமது மருவி னானரோ. 11

## வேறு.

எரிமணி யிமைக்கும் பூணா னிசோதர னிருநி லத்துக்
கொருமணித் திலதம் போலு முஞ்சயி னிக்கு நாத
னருமணி முடிகொள் சென்னி யரசடிப் படுத்து யர்ந்த
குருமணிக் குடையி னீழற் குவலயங் காவல் கொண்டான். 12

திருத்தகு குமரன் செல்வச் செருக்கினா னெருக்குப் பட்டு
மருத்தெறி கடலிற் பொங்கி மறுகிய மனத்த னாகி
யுருத்தெழு சினத்திற்சென்ற வுள்ளமெய் மொழியோ டொன்றி
யருத்திசெய் தருத்த காமத் தறத்திற மறத்து றந்தான். 13

அஞ்சுத லிலாத தெவ்வ ரவியமே லடர்த்துச் சென்று
வஞ்சனை பலவு நாடி வகுப்பன வகுத்து மன்னன்
புஞ்சிய பொருளு நாடும் புணர்திறம் புணர்ந்து நெஞ்சிற்
றஞ்சுத லிலாத கண்ணன் துணிவன துணிந்து நின்றான். 14

தோடலர் கோதை மாதர் துயரிய தொடுத் தெடுத்த
பாடலொ டியைந்து பண்ணி னிசைச்சுவை பருகிப் பல்கா
லூடலங் கினிய மின்னி னொல்கிய மகளி ராடு
நாடக நயந்து கண்டு நாள்சில செல்லச் சென்றான். 15

மற்றோர்நாள் மன்னர் தம்மை மனைபுக விடுத்து மாலைக்
கொற்றவே லவன்றன் கோயிற் குளிர்மணிக் கூட மொன்றிற்
சுற்றுவார் திரையிற் றூமங் கமழ்துயிற் சேக்கை துன்னிக்
கற்றைவார் கவரி வீசக் களிசிறந் தினிதி ருந்தான். 16

சிலம்பொடு சிலம்பித் தேனுந் திருமணி வண்டும் பாடக்
கலம்பல வணிந்த வல்குற் கலையொலி கலவி யார்ப்ப
நலங்கவன் றினிய காமர் நறுமலர்த் தொடைய லேபோ
லலங்கலங் குழல்பின், றாழ வமிழ்தமுன் மதிய ணைந்தாள். 17

ஆங்கவ ளிணைந்த போழ்தி னெங்கணைக் குருசி றந்த
பூங்கணைமாரி வெள்ளம் பொருதுவந் தலைப்பப் புல்லி
நீங்கல ரொருவ ருள்புக் கிருவரு மொருவ ராகித்
தேங்கமழ் மணி தேம்பச் செறிந்தனர் திளைத்து விள்ளார். 18

மடங்கனிந் தினிய நல்லாள் வனமுலைப் போக மெல்லா
மடங்கல னயர்ந்து தேன்வா யமிர்தமும் பருகி யம்பொற்
படங்கடந் தகன்ற வல்குற் பாவையே புணைய தாக
விடங்கழித் தொழிவி லின்பக் கடலினுள்மூழ்கி னானே. 19

இன்னரிச் சிலம்புந் தேனு
மெழில்வளை நிரையு மார்ப்பப்
பொன்னவிர் தாரோ டாரம்
புணர்முலை பொருது பொங்க
மன்னனு மடந்தை தானு
மதனகோ பத்தின் மாறாய்த்
தொன்னலந் தொலைய வுண்டார்
துயில்கொ ளட விழிக ளன்றே. 20

ஆயிடை யத்தி கூடத் தயலெழுந் தமிர்த மூறச்
சேயிடைச் சென்றோர் கீதஞ் செவிபுக விடுத்த லோடும்
வேயிடைத் தோளி மெல்ல விழித்தனள் வியந்து நோக்காத்
தீயிடை மெழுகி னைந்த சிந்தையி னுருகி னாளே. 21

பண்ணினுக் கொழுகு நெஞ்சிற்
பாவையிப் பண்கொள் செவ்வாய்
அண்ணலுக் கமிர்த மாய
வரிவையர்க் குரிய போகம்

விண்ணினுக் குளதென் றெண்ணி
வெய்துயிர்த் துய்தல் செல்லாள்
மண்ணினுக் கரசன் றேவி
மதிமயக் குற்றி ருந்தாள். 22

மின்னினு நிலையின் றுள்ளம் விழையுறின் விழைந்த யாவுந்
துன்னிடு மனத்தின் றூய்மை சூழ்ச்சியு மொழிய நிற்கும்
பின்னுறு பழியிற் கஞ்சாப் பெண்ணுயிர்ப் பெருமை பேணு
வென்னுமிம் மொழிகட் கந்தோ விலக்கிய மாயி னாளே. 23

துன்னிய விரவு நீங்கத் துணைமுலை தமிய ளாகி
யின்னிசை யவனை நெஞ்சத் திருத்தின ளிருந்த வெல்லை
துன்னின டோழி தன்னித் தலைவரிற் றமிய ரேபோன்
றென்னிது நினைந்த துள்ளத் திறைவிநீ யருளு கென்றாள். 24

தவழுமா மதிசெய் தண்டார் மன்னவன் தகைமை யென்னுங்
கவளமா ரகத்தென் னுள்ளக் கருங்கஃறி மதநல் யானை
பவளவாய் மணிக்கை கொண்ட பண்ணியல் தோட்டி பற்றித்
துவளுமா றுருவ னெல்லி துடங்கின னேவ வென்றாள். 25

அங்கவ ளகத்துச் செய்கை யறிந்தன ளல்ல வேபோல்
கொங்கவிழ் குழலி மற்றக் குணவதி பிறிந்து கூறு
நங்கைநின் பெருமை நன்றே நனவெனக் கனவிற் கண்ட
பங்கம துள்ளி யுள்ளம் பரிவுகொண் டனையென் னென்றாள்.26

என்மனத் திவரு மென்னோ யிவளறிந் திலகொ லென்றே
தன்மனத் தினைய வட்குத் தானுரைத் திடுத லோடு
நின்மனத் திலாத சொல்லை நீபுனைந் தருளிற் றென்கொல்
சின்மலர்க் குழலி யென்றே செவிபுதைத்தினிது சொன்னாள்.

மாளவப் பஞ்ச வப்பண் மகிழ்ந்தவ னமுத வாயிற்
கேளல மாயி னுமுங் கேளல மாது மாவி
நாளவ மாகி யின்றே நடந்திடு நடுவொன் றில்லை
வாளள வொண்கண் மாதே மறுத்துரை மொழியி னென்றாள்.

என்னுயிர்க் காரண நின்னோ டின்னிசை யுணர்த்த காளை
தன்னின் மற்றொருவ ரில்லை தக்கது துணிக வென்ன
வென்னுயிர்க் கேத மெய்தி னிதுபழி பெருகு மென்றே
துன்னும்வா யவளோ டெண்ணித் தோழியுமெண்ணி னாளே. 29

மழுகிரு ளிரவின் வைகி மாளவப்பஞ்ச வத்தே
னொழுகிய மிடற்றோர் காளை யுள்ளவன் யாவ னென்றே
கழுதுரு விவனை நாடிக் கண்டனள்கண்டு காமத்
தொழுகிய வுள்ளந் தையற் கொழியுமென் றுவந்து மீண்டாள்.

மன்னன்மா தேவி நின்னை வருத்துவான்வகுத்த கீதத்
தன்னவ னத்தி பாக னட்டமா பங்க னென்பான்
றன்னைமெய் தெரியக் கண்டே தளர்ந்துகண்புதைத்து மீண்டே
னென்னைநீ முனிதி யென்றிட் டிசைக்கல னவற்கீ தென்றாள்.

நரம்புகள் விசித்த மெய்ய னடையினிற் கழுத னைந்தே
திரங்கிய விரலன் கையன் சிறுமுகன் சினவு சீரிற்
குரங்கினை யனைய கூனன் குழிந்துபுக் கழிந்த கண்ண
னொருங்கலு நிரலு மன்றி நிமிர்ந்துள சிலபல் லென்றாள். 32

பூதிகந் தத்தின் மெய்யிற் புண்களுங் கண்கள் கொள்ளாச்
சாதியுந் தக்க தன்று லவன்வயிற் றளரு முள்ள
நீதவிர்ந் திட்டு நெஞ்சி னிறையினைச் சிறைசெய் கென்றாள்
கோதவிழ்ந் திட்ட வுள்ளக் குணவதி கொம்ப னாளே. 33

என்றலு மிவற்றி னாலென் னிறைவளை யவன்க ணார்வம்
சென்றது சிறந்து முன்னே திருவொடு திறலுந் தேசு
மொன்றிய வழகுங் கல்வி யொளியமை குலத்தோ டெல்லா
நின்றுசெய் பயனு நல்லார் நெஞ்சமும் பெறுத லன்றோ. 34

காரிய முடிந்த பின்னுங் காரண முடிவு காணல்
காரிய மன்றி தென்றே கருதிடு கடவுள் காமன்
யாருழை யருளைச் செய்யு மவனமக் கணைய னாக
நேரிழை நினைந்து போகி நீடலை முடியி தென்றாள். 35

தேவிநீ கமலை யாவாய் திருவுளத் தருளப் பட்டா
னாவிசெல் கின்ற வெந்நோ யருநவை ஞமலி யாகும்
பூவின்வார் கணைய னென்னை புணர்த்தவா றிதனை யென்னா
நாவினா லுனைந்து கூறி நடுங்குபு நடுங்கி நின்றாள். 36

ஆடவ ரன்றிமேலா ரருவருத் தனங்க னாரைக்
கூடலர் துறந்து நோன்மைக் குணம்புரிந் துயர்தற் காகப்
பீடுடை யயனாற் றந்த பெருமக ளிவளென் றுள்ளே
தோடலர் குழலி தோழி துணிந்தனள் பெயர்த்துச் சென்றாள்.

தனிவயி னிருளை யானை தரப்படு சார னோடு
கனிபுரை கிளவி காமங் கலந்தனள் கனிந்து சென்றாள்
முனிவினை மன்னன் றன்மேல் முறுகின ளொழுகு முன்போ
லினியவ ளல்லளென்கொ லெனமனத் தெண்ணி னானே. 38

அரசவை விடுத்து மெய்யா லறுசின னொப்ப மன்ன
னுரையல னமளி தன்மே லுறங்குதல் புரிந்த போழ்தின்
விரைகழ் குழலி மேவி மெய்த்துயி லென்று காமத்
துறையினள் பெயர்ந்து தோழி குறியிடந் துன்னி னாளே. 39

துயிலினை யொருவி மன்னன் சுடர்க்கதிர் வாள்கை யேந்தி
மயிலினை வழிசெல் கின்ற வாளரி யேறு போலக்
கயல்விழி யவடன் பின்னே கரந்தன னேதுங்கி யாங்கட்
செயலினை யறிது மென்று செறிந்தனன்மறைந்து நின்றான்.

கடையனக் கமலப் பாவை கருங்குழல்பற்றிக் கையா
லிடைநிலஞ் செல்ல வீர்த்திட் டிருகையி னாலு மோச்சிப்
புடைபல புடைத்துத் தாழ்த்த பொருளிதுபுகல்க வென்றே
துடியிடை துவள வீழ்த்துநிலத் திடைதுகைத்திட் டானே. 41

இருளினு லடர்க்கப் பட்ட வெழின்மதிக் கடவுள் போல
வெருளியான் மிதிப்புண் டையோ விம்மிய மிடற்ற னாகித்
தெருள்கலா னுரையு மாடாள் சிறிதுபோ தகையக் கண்டே
மருளிதான் மயங்கி மாதர் மலரடி சென்னி வைத்தான். 42

தையலாள் மெள்ளத் தேறிச் சாரனை மகிழ்ந்து நோக்கி
வெய்யநீ முனிவு செல்லன் மேதினிக் கிறைவன் றன்னோ
டையவா சனத்தி னும்ப ரரசவை யிருந்து கண்டாய்
வெய்யபா வங்கள் செய்தேன் விளம்பலன் விளைந்த தென்றாள்.

பொற்பகங் கமழி யாவும் புரந்தினி தாந்தை தீர்க்குங்
கற்பகங் கரந்து கண்டார் கையகன் றிடுத லுண்டோ
வெற்பகங் கொண்ட காத லெனக்கினி நின்னின் வேறோர்.
சொற்பகர்ந் தருளு காளை துணைவரு பவரு முண்டோ. 44

என்றலு மேனை மன்ன
னெரியெழ விழித்துச் சீறிக்
கொன்றிவர் தம்மை வாள்வாய்க்
கூற்றுண விடுவ லென்றே

யொன்றின னுணர்ந்த துள்ளத்
துணர்ந்தது கரத்து வாளும்
சென்றிடை விலக்கி நின்றோர்
தெளிந்துணர் வெழுந்த தன்றே. 45

மாதரா ரனைய ரேனும் வதையினுக் குரிய ரல்லர்
பேதைதா னிவனும் பெண்ணி னனையனே பிறிது மொன்றுண்
டேதிலார் மன்னர் சென்னி யிடுதலுக் குரிய வாளிற்
றீதுசெய் சிறுபுன் சாதி சிதைத்தலுந் திறமன் றென்றான். 46

இனையன பலவுஞ் சிந்தித் திழிப்பொடு பழித்து நெஞ்சிற்
புனைவளை யவர்கள் போகம் புறக்கணித் திட்டு மீண்டே
கனவரை யனைய மார்பன் கடிகம ழமளி யேறித்
தனிமுனி களிறு போலத் தானினை வெய்து கின்றான். 47

எண்ணம தலாமை பண்ணு
மிற்பிறப் பிடிய நாறு
மண்ணிய புகழை மாய்க்கும்
வரும்பழி வளர்க்கு மானத்
திண்மையை யுடைக்கு மாண்மை
திருவொடு சிதைக்குஞ் சிந்தை
கண்ணொடு கலக்கு மற்றிக்
கடைப்படு காம மென்றான். 48

உருவினோ டழகு தானு மொளியமை குலனும் பேசிற்
றிருமக ளனைய மாத ரிவளையுஞ் சிதையச் சீறிக்
கருமலி கிருமி யன்ன கடைமகற் கடிமை செய்தே
தருமதி மதனன் செய்கை தறப்படுதே சிறப்ப தென்றான். 49

மண்ணியல் மடந்தை தானு மருவினர்க் குரிய ளல்லள்
புண்ணிய முடைய நீரார் புணர்ந்திடப் புணர்ந்து நீங்கும்
பெண்ணிய லதுவ தன்றோ பெயர்கள்மற் றிவர்கள் யாரும்
கண்ணிய விவர்க டம்மைக் கடப்பதே கரும மென்றான். 50

மற்றைநாள் மன்னன் முன்போல்
மறைபுறப் படாமை யின்பச்
சுற்றமா யவர்கள் சூழத்
துணிவில னிருந்த வெல்லை
மற்றுமா மன்னன் றேவி
வருமுறை மரபின் வந்தே
கற்றைவார் குழலி மெல்லக்
காவலன் பாலி ருந்தாள். 51

நகைவிளை யாடன் மேவி நரபதி விரகி னின்றே
மிகைவிளை கின்ற நீல மலரினின் வீச லோடும்
புகைகமழ் குழலி சோர்ந்து பொய்யினால் மெய்யை வீழ்த்தாள்
மிகைகமழ் நீரிற் றேற்ற மெல்லிய றேறி னாளே. 52

புரைபுரை தோறு நீர்சேர் பொள்ளலிவ் வுருவிற் றாய
விருநிற மலரி னாலின் றிவளுயி ரேக லுற்ற
தரிதினில் வந்த தின்றென் றவளுட னசதி யாடி
விரகினில் விடுத்து மன்னன் வெய்துயிர்த் தனனி ருந்தான். 53

ஆயிடை யரச னுள்ளத் தரசினை விடுப்ப வெண்ணித்
தாயமர் கோயி லெய்திச் சந்திர மதிதன் முன்னர்ச்
சேயிடை யிறைஞ்சி மற்றித் திரைசெய் நீருலக மெல்லா
நீயுயர் குடையின் வைகி நெடிதுடன் வாழ்க வென்றான். 54

மணிமரு ளுருவம் வாடி
வதனபங் கயமு மாற
யணிமுடி யரச ரேறே
யழகழிந் துளதி தென்கொல்
பிணியென வெனது நெஞ்சிற்
பெருநவை யுறுக்கு மையா
துணியலெ னுணரச் சொல்லாய்
தோன்றனீ யென்று சொன்னாள். 55

விண்ணிடை விளங்குங் காந்தி மிகுகதிர் மதியந் தீர்ந்தே
மண்ணிடை மழுங்கச் சென்றோர் மறையிருட் பருதி சேரக்
கண்ணிடை யிறைவி கங்குற் கனவினிற் கண்ட துண்டம்
தெண்ணுடை யுள்ளந் தன்னு ளீர்ந்திடு கின்ற தென்றான். 56

கரவினிற் றேவி தீமை கட்டுரைத் திட்ட தென்று
விரவினிற் கனவு தீமைக் கேதுவென் றஞ்சல் மைந்த
பரவினிற் கிறைவி தேவி பணிந்தனை சிறப்புச் செய்தால்
விரவிமிக் கிடுத லன்றி விளியுமத் தீமை யெல்லாம். 57

ஐப்பசி மதிய முன்ன ரட்டமி பக்கந் தன்னின்
மைப்பட லின்றி நின்ற மங்கலக் கிழமை தன்னிற்
கைப்பலி கொடுத்துத் தேவி கழலடிபணியிற் காளை
மெய்ப்பலி கொண்டு நெஞ்சின் விரும்பின ஞவக்கு மெனறாள்.

மண்டமர் தொலைத்த வேலோய் மனத்திது மதித்து நீயே
கொண்டுநின் கொற்ற வாளிற் குறுமறி யொன்று கொன்றே
சண்டிகை மனந்த ளிர்ப்பத் தகுபலி சொடுப்பத் தையல்
கண்டநின் கனவின் றிட்பந் தடுத்தனள் காக்கு மென்றாள். 59

ஆங்கவ னருளொன் றின்றி யவண்மொழிந் திடுத லோடுந்
தேங்கல னரசன் செங்கை செவிமுதல் செறியச் சேர்த்தி
யீங்கருள் செய்த தென்கொ லிதுபுதி தென்று நெஞ்சிற்
றங்கல னுருகித் தாய்முன் றருவன சொல்லு கின்றான். 60

என்னுயிர் நீத்த வேனு மியானுயிர்க் குறுதி சூழா
தென்னுயிர்க் கரண நாடி யானுயிர்க்கிறுதி செய்யி
னென்னையிவ் வுலகு காவ லெனக்கினி யிறைவி கூறாய்
மன்னுயிர்க் கரண மண்மேல் மன்னவ ரல்ல வோதான். 61

யானுயிர் வாழ்த லெண்ணி யெளியவர் தம்மைக் கொல்லின்
வானுய ரின்ப மேலால் வருநெறி திரியு மன்றி
யூனுயி ரின்ப மெண்ணி யெண்ணமற் றொன்று மின்றி
மானுயர் வாழ்வு மண்ணின் மறித்திடு மியல்பிற் றன்றே. 62

அன்றியு மின்றி முன்ன ரன்னைநின் குலத்து ளோர்கள்
கொன்றுயிர் கன்று முள்ளக் கொடுமைசெய் தொழில ரல்ல
ரின்றுயிர் கொன்ற பாவத் திடர்பல விளையு மேலா
னன்றியொன் றன்று கண்டாய் நமக்குநீ யருளிற் றெல்லாம்.

என்றலு மெனது சொல்லை யிறந்தனை கொடியை யென்றே
சென்றனள் முனிவ சிந்தைத் திருவிலி பிறிது கூறுங்
கொன்றுயிர் களைத லஞ்சிற் கோழியை மாவிற் செய்து
சென்றனை பலிகொ டுத்துத் தேவியை மகிழ்வி யென்றாள். 64

பனம்விரி யல்குன் மாய மனத்தவை வகுத்த மாயக்
கனவுரை பிறிது தேவி கட்டுரை பிறிதொன் றாயிற்
றெனைவினை யுதயஞ் செய்ய விடர்பல விளைந்த தென்பால்
வினைகளின் விளைவை யாவர் விலக்குந ரென்று நின்றான். 65

உயிர்ப்பொருள் வடிவு கோற
லுயிர்க்கொலை போலு மென்னும்
பயிர்ப்புள முடைய னேனும்
பற்றறத் துணிவின் மன்னன்
செயிர்த்தவ ளுரைத்த செய்கை
செய்வதற் கிசைந்த தென்றான்
அயிர்ப்பதென் றறத்தின் றிண்மை
யறிவதற் கமைவி லாதான். 66

மாவினில் வனைந்த கோழி
வடிவுகொண் டவ்வை யாய
பாவிதன் னோடு மன்னன்
படுகொலைக் கிடம தாய
தேவிதன் னிடைச்சென் றெய்திச்
சிறப்பொடு வணக்கஞ் செய்தே
யாவவன் றன்கை வாளா
லெறிந்துகொண் டருளி தென்றான். 67

மேவிய தெய்வங் கண்டே விரும்பின தடையப் பட்ட
சாவியி னிடியின் கோழி தலையரிந் திட்ட தோடிக்
கோவிய லரசன் முன்னர்க்க கூவுபு குலுங்கி வீழ
மாவிய லரசன் றன்கை வாள்விடுத் துருகி னானே. 68

என்னைகொல் மாவின் செய்கை யிவ்வுயிர்பெற்ற பெற்றி
சென்னிவா ளறிய வோடிச் சிலம்பிய குரலி தென்கொல்
பின்னிய பிறவி மாலைப் பெருநவை தருதர்க் கொத்த
கொன்னியல் பாவ மென்னைக் கூவுகின் றதுபோ லென்றான்.

ஆதகா தன்னை சொல்லா லறிவிலே னருளில் செய்கை
யாதகா தழிந்த புள்வா யரிகுர லரியு நெஞ்சை
யாதகா தமிர்த முன்னா மதியவள் களவு கொல்லு
மாதகா வினைக ளென்னை யடர்த்துநின் றடுங்கொ லென்றான்.

இனையன நினைவு தம்மால் யசோதர னகர மெய்தித்
தனையனி லரசு வைத்துத் தவவனம் படர லுற்றான்
அனையதை யறிந்துந் தேவி யவமதித் தெனைவி டுத்தா
னெனநினைந் தேது செய்தா ளெரிநர கத்து வீழ்வாள். 71

அரசுநீ துரத்தி யாயி னமைகமற் றெனக்கு மஃதே
விரைசெய்தா ரிறைவ வின்றென் வியன்மனை மைந்த னோடு
மரசநீ யமிர்து கைக்கொண் டருளுதற் குரிமை செய்தா
லரசுதா னவன தாக விடுதுநா மடிக ளென்றாள். 72

ஆங்கவ ளகத்து மாட்சி யறிந்தன னரச னேனும்
வீங்கிய முலையி னாய்நீ வேண்டிய தமைக வென்றே
தாங்கல னவ்வை தன்னோ டவண்மனை தான மர்ந்தான்
றீங்கது குறுகிற் றீய நயமுநன் னயம தாமே. 73

நஞ்சொடு கலந்த தேனி னறுஞ்சுவை பெரிய வாக
வெஞ்சலி லட்டு வங்க ளிருவரு மருந் துகென்றே
வஞ்சனை வலித்து மாமி தன்னுடன் வரனுக் கீந்தா
ணஞ்சொடு படரத் தானும் பிறரொடு நயந்து கொண்டாள். 74

நஞ்சது பரந்த போழ்தி னடுங்கினர் மயங்கி வீழ்ந்தா
ரஞ்சினர் மரணஞ் சிந்தை யடைந்தது முதல தாங்கட்
புஞ்சிய வினைக டைய புகுந்தன பொறிகள் பொன்றித்
துஞ்சினர் துயரந் துஞ்சா விலங்கிடைத் துன்னி னாரே. 75

எண்களுக் கிசைவி லாத விறைவியா மிவடன் செய்கை
கண்களுக் கிசைவி லாத கடையனைக் கருதி நெஞ்சின்
மண்களுக் கிறைவ னாய வரனுக்கு மரணஞ் செய்தாள்
பெண்களிற் கோத னாளை பெரியபா வத்த ளென்றார். 76

தீதகல் கடவு ளாகச் செய்ததோர் படிமை யின்கட்
காதர முலகி தன்கட் கருதிய முடித்தல் கண்டுஞ்
சேதன வடிவு தேவிக் கெறிந்தனர் தெரிவொன் றில்லா
னாதலால் வந்த தின்றென் றழுங்கினர் சிலர்க ளெல்லாம். 77

அறப்பொரு ணுகர்தல் செல்லா னருந்தவர்க்கெளிய னல்லன்
மறப்பொருள் மயங்கி வையத் தரசியன் மகிழ்ந்து சென்றா
னிறப்பவு மிளையர் போகத் திவறின னிறுதி யின்கட்
சிறப்புடை மரண மில்லை செல்கதி யென்கொ லென்றார். 78

இனையன வுழையர் தாமு மெழினக ரத்து ளாரு
நினைவன நினைந்து நெஞ்சி னெகிழ்ந்தனர்புலம்பி வாடக்
கனைகழ லரசன் றேவி கருதிய ததுமு டித்தாள்
மனநனி வலிதின் வாடி மைந்தனே வருக வென்றாள். 79

இனையநீ தனியை யாகி யிறைவனிற் பிரிந்த தென்கண்
வினையினால் விளைவு கண்டாய் விடுத்திடுமனத்து வெந்நோய்
புனைமுடி கவித்துப் பூமி பொதுக்கடிந் தாள்க வென்றே
மனநனி மகிழ்ந்தி ருந்தாள் மறைபதிக் கமுத மாவாள். 80

வாரணி முரச மார்ப்ப மணிபுனை மகுடஞ் சூட்டி
யோரணி யார மார்ப னிசோமதி யிறைமை யெய்தி
சீரணி யடிகள் செல்வத் திருவறமருளல் செல்லா
னோரணி யார மார்ப னுவகையங் கடலு ளாழ்ந்தான். 81

இனையன வினையி னுகு மியல்பிது தெரிதி யாயி
னினையன துணைவ ராகு மிளையரின் விளையு மின்ப
மினையது தெளிவி லாதா ரிருநில வரசு செய்கை
வனைமலர் மகுட மாரி தத்தனை மதியி தென்றான். 82

இரண்டாம் சருக்கம் நிறைவேறியது.

முதற்சருக்கப்பாடல்கள் ... ... 72.

ஆகச் சருக்கமிரண்டின் பாடல்கள் ... ... 154.





உ

# மூன்றாவது சருக்கம்.

மற்ற மன்னன் மதிமதி யென்றிவர்
நற்ற வத்திறை நல்லறம் புல்லலாம்
பற்றி னோடு முடிந்தனர் பல்பிறப்
புற்ற தாகு முரைக்குறு கின்றதே. 1

விந்த நாம விலங்கலில் மன்னவன்
வந்தோர் மாமயி லின்வயிற் றண்டமாய்
நந்து நாளிடை நாயொடு கண்டகன்
வந்தோர் வாளியி னான்மயில் வாட்டினான். 2

அம்பின் வாய்விழு மண்ட மெடுத்தவன்
வம்பு வாரண முட்டையின் வைத்துடன்
கொம்ப னாயிது கொண்டு வளர்க்கென
நம்பு காமர் புளிஞிகை நல்கினான். 3

சந்தி ரம்மதி யாகிய தாயவள்
வந்து மாநக ரப்புறச் சேரிவாய்
முந்து செய்வினை யான்முனை வாளெயிற்
றந்த மில்லச் சுணங்கம தாயினாள். 4

மயிலு நாயும் வளர்ந்தபின் மன்னனுக்
கியலு பாயன மென்று கொடுத்தனர்
வயிரி யாகுமி சோமதி மன்னவ
னியலு மாளிகை யெய்தின வென்பவே. 5

மன்ன னாகிய மாமயில் மாளிகை
தன்னின் முன்னெழு வாருக்குத் தானெழா
தன்னை யஞ்சினர் தங்களைத் தான்வெகுண்
டின்ன வாற்றின் வளர்ந்திடு கின்றதே. 6

அஞ்சி லோதியர் தாமடி தைவர
பஞ்சி மெல்லணை பாவிய பள்ளிமேற்
றுஞ்சு மன்னவன் மாமயிற் றோகையோ
டஞ்சி மெல்ல வசைந்தது பூமிமேல். 7

சுரைய பாலடி சிற்சுவை பொற்கலத்
தரைய மேகலை யாரி னமர்ந்துணு
மரசன் மாமயி லாய்ப்புறப் பள்ளிவா
யிரைய வாவி யிருந்தயில் கின்றதே. 8

வந்து குப்பையின் மாசன முண்டபின்
சிந்து மெச்சில்கள் சென்று கவர்ந்துதின்
றந்து ணும்மக ழுங்கணத் தாடுமாய்ச்
சந்தி ரம்மதி நாய்தளர் கின்றதே. 9

நல்வ தத்தொ டறத்திற நண்ணலர்
கொல்வ தற்குள முன்செய் கொடுமையா
லெல்வ தற்கரு மாதுய ருற்றனர்
வெல்வ தற்கரி தால்வினை யின்பயன், 10

மற்றொர் நாண்மணி மண்டபத் தின்புடை
யற்ற மாவிருந் தட்டபங் கன்றனை
முற்று வார்முலை யாண்முயங் குந்திற
மற்ற மாமயில் வந்தது கண்டதே. 11

அப்பி றப்பி லமர்ந்தன காதலி
யொப்பில் செய்கை யுணர்ந்த துணர்ந்தபின்
றப்பி லல்லது சாரனொண் கண்களைக்
குப்பு றாமிகைக் குத்தி யழித்ததே. 12

மூத்த வாணகை யாண்முனி வுற்றனள்
கைத்த லத்தொரு கற்றிரள் வீசலு
மத்த கத்தை மடுத்து மறித்தது
தத்தி மஞ்ஞை தரைப்பட வீழ்ந்ததே. 13

நாய்முன் னாகி யிறந்து பிறந்தவ
னாய்பின் னொடி நலிந்தது கவ்விய
வாய்முன் மஞ்ஞை மடிந்துயிர் போயது
தீமை செய்வினை செய்திற மின்னதே. 14

நாயின் வாயி னடுங்கிய மாமயில்
போய தின்னுயிர் பொன்றின மன்னவ
னாயு மாறறி யாத விசோமதி
நாயை யெற்றின னாய்பெய் பலகையால். 15

மன்னன் மாமயில் வந்துவிந் தக்கிரி
துன்னுஞ் சூழலுட் சூழ்மயிர் முள்ளுடை
யின்னல் செய்யுமோ ரேன மதாகிய
தன்ன தாகு மருவினை யின்பயன். 16

சந்தி ரம்மதி நாயுமச் சாரலின்
வந்து காரிருள் வண்ணத்த நாகமா
யந்தி லூர்தர வேர்த்துரு ளக்குடர்
வெந்தெ ழும்பசி விட்டது பன்றியே. 17

தாய்கொல் பன்றி தளர்ந்தயர் போழ்தினிற்
சீய மொன்றெனச் சீறுளி யம்மெதிர்
பாய நொந்து பதைத்துடன் வீழ்ந்தரோ
போய தின்னுயிர் பொன்றுபு பன்றியே. 18

மன்னன் மாமயில் சூகரம் வார்புனல்
இன்னல் செய்யுஞ் சிருப்பிரை யாற்றினுள்
உன்னு மொப்பி லுலோகித விப்பெயர்
மன்னு மீனின் வடிவின தாயிற்றே. 19

சந்தி ரம்மதி நாய்கரு நாகமாய்
முந்து சென்று முதலைய தாயது
வெந்து வேர்த்தின மீனை விழுங்குவா
னுந்தி யுந்தி யுளைத்திடு போழ்தினில். 20

அந்த ரத்தொரு கூனிநின் றுடுவாள்
வந்து வாயின் மடுத்தது கொண்டது
கொந்து வேய்குழற் கூனியைக் கொல்கராத்
தந்து கொல்கென மன்னவன் சாற்றினான். 21

வலையின் வாழ்நரின் வாரி பிடித்தபின்
சிலர்ச லாகை வெதுப்பிச் செறிந்தனர்
கொலைவ லாளர் குறைத்தன ரீர்ந்தன
ரலைசெய் தார்பலர் யாரவை சொல்லுவார். 22

சந்தி ரம்மதி நாய்கரு நாகமாய்
வந்து வார்வலைப் பட்டக ராமரித்
தந்தில் வாழ்புலை யாளர்தஞ் சேரிவாய்
வந்தொ ராட்டின் மடப்பிணை யாயதே. 23

மற்றை மீனுமோர் வார்வலைப் பட்டதை
யற்ற மில்லரு ளந்தணர் கண்டனர்
கொற்ற மன்னவ னின்குலத் தார்களுக்
குற்ற செய்கைக் குரித்தென வோதினார். 24

அறுத்த மீனி னவயவ மொன்றினைக்
கறித்தி சோமதி யிப்புவி காக்கவோ
ரிறப்ப ருந்துறக் கத்தில் யசோதரன்
சிறக்க வென்றனர் தீவினை யாளரே. 25

நின்ற கண்டத்து நின்னுயிர் போயது
சென்ற தன்பிறப் போர்ந்து தெளிந்தது
நின்று நின்று துறக்கத் திருந்துத
னன்று நன்றென நைந்திறந் திட்டதே. 26

மன்னன் மாமயில் சூகர மாயமீன்
முன்னை யாட்டின் வயிற்றின் முடிந்ததோர்
மன்னு மாறுரு வெய்தி வளர்ந்தபின்
தன்னை யீன்றவத் தாய்மிசை தாழ்ந்ததே. 27

தாயி னன்னலந் தானுகர் போழ்தினி
லாய கோபத் தடர்த்தொரு வன்றகர்
பாய வோடிப் பதைத்துயிர் போயபின்
றாய்வ யிற்றினிற் றதுவிற் சார்ந்ததே. 28

தாய்வ யிற்கரு வுட்டக ராயது
போய்வ ளர்ந்துழிப் பூமுடி மன்னவன்
மேய வேட்டை யிழைந்தனன் மீள்பவன்
றாயை வாளினிற் றன்னுயிர் போக்கினான் 29

வாளின் வாய்விழும் வன்றகர்க் குட்டியை
நீள நின்ற புலைக்குலத் தோன்றலைத்
தாள்வ ருத்தந் தவிர்த்து வளர்க்கென
வாளி மொய்ம்ப னருளின னென்பவே. 30

மற்றோர் நாண்மற மாதிற்கு மன்னவன்
பெற்றி யாற்பா விப்பெரு வேட்டைபோ
யுற்ற பல்லுயிர்க் கொன்றுவந் தெற்றினன்
கொற்ற மிக்கெரு மைப்பலி யொன்றரோ. 31

இன்றெ றிந்த வெருமைய தூதலைத்
தின்று தின்று சிராத்தஞ் செயப்பெறி
னன்றி தென்றன ரந்தணர் நல்கினோர்
நின்று பின்சில நீதிக ளோதினார். 32

ஆத பத்தி னுலர்ந்தசை யாதலாற்
காது காகங் கவர்ந்தன வாமெனிற்
றீது தாமுஞ் சிராத்தஞ் செயற்கென
வோதி னாரிலி யொன்றுள தென்றனர். 33

நீதி தென்று பிசிதமுந் தேர்ந்துழிச்
சாத நல்ல தசர்முகத் துப்படிற்
பூத மென்றனர் புண்ணிய நூல்களி
னோதை னோரத் துராதிக னென்றரோ. 34

எஃற லும்மிணர் பெய்முடி மன்னவ
னன்று நாமுன் வளர்க்க விடுத்தது
சென்று தம்மெனச் சென்றன ரொற்றர்பி
னன்றி தென்று நயந்தன ரந்தணர். 35

சென்று நல்லமிர் துண்டது தின்றன
ரன்று மன்னன் யசோதர னன்னையோ
டொன்றி யும்ப ருலகினுள் வாழ்கென
நன்றி சொல்லினர் நான்மறை யாளரே. 36

அத்த லத்தக ராங்கது கேட்டபின்
ஒத்த தன்பிறப் புள்ளி யுணர்ந்துட
னித்த லத்திறை யான விசோமதி
மத்த யானையின் மன்னவ னென்மகன். 37

இதுவென் மாநக ருஞ்சய னிப்பதி
யிதுவென் மாளிகை யாமென் னுழைக்கல
மிதுவெ லாமிவ ரென்னுழை யாளராம்
இதுவென் யானிவ னின்னண மாயதே. 38

யான்ப டைத்த பொருட்குவை யாமிவை
யான்வ ளர்த்த மதக்களி றுமிவை
யான ளித்த குலப்பரி யாமிவை
யான்வி ளைத்த வினைப்பய னின்னதே. 39

இவர்க ளென்கடைக் காவல ராமிவ
ரிவர்க ளென்படை நாயக ராமிவ
ரிவர்க ளென்னிசை பாடுன ராடுன
ரிவர்க ளும்மிவ ரென்பரி வாரமே. 40

என்னை நஞ்சுபெய் தின்னண மாயிழைத்
தன்ன மென்னடை யாளமிர் தம்மதி
மன்னு தன்மறை யாளொடு வைகுமோ
வென்னை செய்தன ளோவிவ ணில்லையால். 41

அசைய தாகி யரும்பட ரொன்றிலா
விசையி லாதன யானுற வித்தலைத்
தசைதி னார்கள் தங்களி னென்னையிவ்
வசையின் மன்னவன் வானுல குய்க்குமோ. 42

பேதை மாதர்பெய் நஞ்சினி லெஞ்சியிம்
மேதி னிப்பதி யாதல் விடுத்தபின்
யாது செய்தன னோவினை யேனிடை
யாது செய்குவ னோவுண ரேனினி. 43

இனைய வாகிய சிந்தைக ளெண்ணிலா
வினையி னாகிய வெந்துயர் தந்திடத்
தனையன் மாளிகை தன்னுள நோகமுன்
சினைகொண் டாடுயிர் சென்று பிறந்ததே. 44

சந்தி ரம்மதி நாய்கரு நாகமாய்
வந்தி டங்கரு மாகிய வாடது
நந்து பல்பொரு ளோடு கலிங்கத்து
வந்து மாயிட மாகி வளர்ந்ததே. 45

வணிகர் தம்முடன் மாமயி டம்மது
பணிவில் பண்டம் பரிந்துழல் கின்றநா
ளணிகொ ளுஞ்சயி னிப்புறத் தாற்றயல்
வணிகர் வந்து மகிழ்ந்து விட்டார்களே. 46

தூர பாரஞ் சுமந்த துயரது
தீர வோடுஞ் சிருப்பிரை யாற்றினுள்
ளார மூழ்கிவந் தம்மயி டங்கரை
சேரு மாவினைச் சென்றெறிந் திட்டதே. 47

வரைசெய் தோண்மன்ன வணிகர் மயிடத்தா
லரச வன்ன மெனும்பெய ராகுநம்
மரச வாகன மாயது போயதென்
றரைசெய் தாரர சர்க்குழை யாளரே. 48

அணிகொள் மாமுடி யன்ன னழன்றனன்
வணிகர் தம்பொருள் வாரி மயிடமும்
பிணிசெய் தெம்முழை வெம்மெனப் பேசினான்
கணித மில்பொருள் சென்று கவர்ந்தனர். 49

அரச னாணை யறிந்தரு ளில்லவர்
சரண நான்கினை யுந்தளை செய்தனர்
கரண மானவை யாவுங் களைந்தன
மரண மாமற னில்லது தன்னையே. 50

கோர னீரினைக் காய்ச்சி யுறுப்பரிந்
தார வூட்டிய தன்வயி றீர்ந்தவட்
சார நெய்பெய் சலாகை கடைந்தபின்
கூர்முண் மத்திகை யிற்கொலை செய்தனர். 51

ஆயி டைக்கொடி யாளமிழ் தம்மதி
மேய மேதித் தசைமிக வெந்ததை
வாயின் வைத்து வயிற்றை வளர்த்தனள்
மாயை செய்தன ளென்றனர் மற்றையார். 52

இன்னு மாசை யெனக்குள திவ்வழி
துன்னி வாழ்தக ரொன்றுள நின்றது
தன்னி னாய குறங்கு கடித்தது
தின்னி னாசை சிதைந்திடு மென்றனள். 53

அனங்க னென பெருந்தகை யண்ணலைச்
சினங்கொ ளாவுயிர் செற்றன ணஞ்சினிற்
கனங்கொள் காமங் கலக்கக் கலந்தனள்
மனங்கொ ளாவொரு மாறுட நாயினே. 54

குட்ட மாகிய மேனிக் குலமிலா
வட்ட பங்கனொ டாடிய மர்த்தபி
னட்ட மாகிய நல்லெழின் மேனியள்
குட்ட நோயிற் குளித்திடு கின்றனள். 55

அழுகி னைந்துட னங்கு மவயவத்
தொழுகு புண்ணி னுருவின ளாயினள்
முழுகு சீயின் முடைப்பொலி மேனியள்
தொழுவல் பல்பிணி நோய்களுந் துன்னினாள். 56

உம்மை வல்வினை யாலுணர் வொன்றிலா
யிம்மை செய்த வினைப்பய னேயிவை
யெம்மை யும்மினி நின்றிடு மிவ்வினை
பொய்மை யன்றிவள் பொன்றினும் பொன்றில. 57

நோயி னைசொ லுண்ணுணர் வின்மைகொல்
தீய வல்வினை தேந்த லேகொலோ
மேய மேதிப் பிணத்தை மிசைந்தனள்
மாய மற்றிது தன்னையும் வவ்வுமே. 58

என்று தன்புறத் திப்படிக் கூறினர்
சென்று சேடியர் பற்றிய வத்தக
ரொன்று முற்ற வுணர்ந்தவ டன்னையுஞ்
சென்று கண்டது சிந்தையி னைந்தரோ. 59

தேவி யென்னை முனிந்தனை சென்றொரு
பாவி தன்னை மகிழ்ந்த பயன்கொலோ
பாவி நின்னுரு வின்னண மாயது
பாவி யென்னையும் பற்றினை யின்னணம். 60

நஞ்சி லன்னையொ டென்னை நலிந்தனை
யெஞ்ச லில்சின மின்ன மிறந்திலை
வஞ்ச னைமட வாய்மயி டம்மது
துஞ்சு நின்வயிற் றென்னையுஞ் சூழ்தியோ. 61

என்று கண்டு மொறுமொறுத் தென்செயு
நின்று நெஞ்சம துள்சுட நின்றது
அன்று தேவி யலைப்ப வழிந்துயிர்
சென்று தம்மயி டத்தொடு செல்கதி. 62

மற்றம் மாநக ரத்து மருங்கினிற்
சிற்றில் பல்சனஞ் சேர்பறைச் சேரியி
னுற்று வாரணப் புள்ளுரு வாயினர்
வெற்றி வேலவன் கண்டு விரும்பினான். 63

கண்டு மன்னவன் கண்களி கொண்டனன்
சண்ட கன்மியைத் தந்து வளர்க்கெனக்
கொண்டு போயவன் கூட்டுள் வளர்த்தனன்
மண்டு போர்வினை வல்லவு மாயதே. 64

வேறு.

* தாள மாகிய நயனத்தொ டஞ்சிறை
சாபம் போற்சவி யன்ன
மருளு மாசனம் வளர்விழிச் சுடர்க்க
ணமணி முடிதனை யொத்த

* இக்கவி இளைதுகையால் வந்தது.

வொளிரு பொன்னன சரணங்கள் வயிர
முள்ளொப் பிலபோ ரின்கட்
டளர்வில் வீரியந் தகைபெற வளர்ந்த
னதமக் கிணையனவ யாமே. 65

## மூன்றவது சருக்கம் முற்றிற்று.

முதலிரண்டு சருக்கப்பாடல்கள். ... ... ... 154.

ஆக மோத்தப்பாடல்கள் ... ... ... 219.





உ

# நான்காவது சருக்கம்.

செந்தளிர் புனைந்த சோலைத் திருமணி வண்டுந் தேனுங்
கொந்துகள் குடைந்து கூவுங் குயிலொடு குழுமி யார்ப்பச்
செந்துண ரளைந்து தென்றற் றிசைதிசை சென்று வீச
வந்துள மகிழ்ந்த தெங்கும் வளர்மதுப் பருவ மாதோ. 1

இணர்தழைப் பொழிலி னுள்ளா
னிசோமதி யென்னு மன்னன்
வணர்தகைக் குழவி புட்பா
வலியெனுந் துணைவி யோடு
வணர்தலை வல்லி புல்லி
வளரிளம் பிண்டி வண்ட
ரிணர்தழைத் தவிசி னேறி
யினிதினி னமர்ந்தி ருந்தான். 2

பாடக மிலங்கு செங்கேழ்ச் சீறடிப் பாவை பைம்பொற்
சூடக மணிமென் றோளிற் றொழுதனர் துளங்கத் தோன்றி
நாடக மகளி ராடு நாடக நயந்து நல்லார்
பாடலி லமிர்த ஊறல் பருகினன் மகிழ்ந் திருந்தான். 3

வளையவர் சூழ வுள்ளா மனமகிழ்ந் திருப்ப மன்னன்
றளையவிழ் தொடையல் மார்பன் சண்டமுற் கருமன் போகி
வளமலர் வனத்துட் டைய மனிதரோ டனைய சாதி
களைபவன் கடவுள் கண்ணிற் கண்டுகை தொழுது நின்றான். 4

அருவினை முனைகொ லாற்ற லகம்பர னென்னு நாமத்
தொருமுனி தனிய னாகி யொருசிறை யிருந்து முன்னர்த்
தருமுதல் யோகு கொண்டு தன்னள விறந்த பின்னர்
மருவிய நினைப்பு மாற்றி வந்தது கண்டி ருந்தான். 5

வடிநுனைப் பகழி யானு
  மலரடி வணங்கி வாழ்த்தி
யடிகணீ ரடங்கி மெய்யி
  லருள்புரி மனத்த ராகி
நெடிதுட னிருந்து நெஞ்சில்
  நினைவதோர் நினைவு தன்னான்
முடிபொரு டானு மென்கொல்
  மொழிந்தருள் செய்க வென்றான். 6

ஆரருள் புரிந்த நெஞ்சி னம்முனி யவனை நோக்கிச்
சீரருள் பெருகும் பான்மைத் திறத்தனே போலு மென்றே
பேரறி வாகித் தம்மிற் பிறழ்விலா வுயிரை யன்றே
கூரறி வுடைய நீரார் குறிப்பது மனத்தி னாலே. 7

அனந்தமா மறிவு காட்சி யருவலி போக மாதி
நினைந்தவெண் குணங்க ளோடு நிருமல நித்த மாகிச்
சினஞ்செறு வாதி யின்றித் திரிவித வுலகத் துச்சி
யனந்தகா லத்து நிற்ற லப்பொருட் டன்மை யென்றான். 8

குருமனு மிறைவ கேளாய் களவு செய்தோர்க டம்மை
யிருபிள வாகச் செய்வ னெம்மர சருளி னாலே
யொருவழி யாலுஞ் சீவ னுண்டெனக் கண்ட தில்லை
பெரியதோர் சோரன் றன்னைப் பின்னமாச் சேதித் திட்டும்.

மற்றொருகள்வன் றன்னை வதைசெய்வ முன்னும் பின்னு
மிற்றெண நிறைசெய் திட்டு மிறைவனே பேதங் காணே
னுற்றதொர் குழியின் மூடி யொருவனைச் சிலநாள் வைத்து
மற்றவ னுயிர்போ யிட்ட வழியொன்றுங் கண்டி லேனே. 10

பையவே காட்டங் தன்னைப் பலபின்னஞ் செய்திட் டன்று
வெய்யெரி கண்ட துண்டோ விறகொடு விறகை யூன்ற
வையனே யங்கி தோன்றி யதனையு மெரிய லுற்ற
திவ்வகை காண லாகு மென்று நீயுணர வேண்டும். 11

சிக்கென வாயு வேற்றித் தித்திவாய்ச் செம்மிற் றூக்கிப்'
புக்கவவ் வாயு நீங்கிப் போயபின் னிறைசெய் தாலு
மொக்குமே யொருவன் சங்கோ டொருநில மாளி கைக்கே
திக்கெனத் தொனிசெய் திட்ட தெவ்வழி வந்த தாகும். 12

இவ்வகை யாகுஞ் சீவ னியல்புதா னியல்பு வேறும்
வெய்யதீ வினைக ளாலே வெருவுறு துயரின் மூழ்கி
மையலுற் றழுந்தி நான்கு கதிகளுட் கெழுமிச் செல்வ
ரையமில் காட்சி ஞானத் தொழுக்கத்தோ ரறிவ தாகும். 13

ஆகமத் தடிக ளெங்கட் கதுபெரி தரிது கண்டீ
ரேகசித் தத்த ராய விறைவர்கட் கெளிது போலும்
போகசித் தத்தோ டொன்றிப் பொறிவழிப் படரு நீரார்க்
காகுமற் றுறுதிக் கேது வருளுக தெருள வென்றான். 14

அற்றமி லறிவு காட்சி யருந்தகை யொழுக்க மூன்றும்
பெற்றனர் புரிந்து பேணிப் பெருங்குணத் தொழுகு வாருக்
குற்றிடு மும்ப ரின்ப முலகிதற் கிறைமை தானு
முற்றமுன் னுரைத்த பேறும் வந்துறு முறைமை யென்றான்.

உறுபொரு ணிலைமை தன்னை யுற்றுணர் வறிவ தாகும்
அறிபொரு ளதனிற் றூய்மை யகத்தெழு தெளிவு காட்சி
நறுமலர்ப் பிண்டி நாத னல்லறப் பெருமை தன்மே
லிறுகிய மகிழ்ச்சி கண்டா யிதனது பிரிவு மென்றான். 16

பெருகிய கொலையும் பொய்யுங் களவொடு பிறன்மனைக்கட்
டெரிவிலாச் செலவு சிந்தை பொருள்வயிற் றிருகு பற்று
மருவிய மனத்து மீட்சி வதமிவை யைந்தோ டொன்றி
யொருவின புலைசு தேன்கள் ளொருவுத லொழுக்க மென்றான்.

கொலையின தின்மை கூறார் குவலயத் திறைமை செய்யு
மலைதலில் வாய்மை யாக்கும் வாய்மொழி மதிப்பை யாக்கும்
விலையில்பே ரருளின் மாட்சி விளைப்பது களவின் மீட்சி
புலைதலில் பெருமை திட்ப முறுவலி யொழிந்த தீயும். 18

தெருளுடை மனத்திற் சென்ற தெளிந்துணர் வாய செல்வம்
பொருள்வயி னிறுக்க மின்மை புணர்ந்திடும் புலசு தேன்க
ளொருவிய பயனு மஃதே யொளியினோ டழகு வென்றி
பொருள்மிகு குலனோ டின்பம் புணர்தலு மாகு மாதோ. 19

சிலைபயில் வயிரத் தோளாய் செப்பிய
பொருளி தெல்லாம்
உலைதலில் மகிழ்வோ டுள்ளத்
துணர்ந்தன கொள்க வென்னக்
கொலையினி லொருவ லின்றிக்கொண்டனே
னருளிற் றெல்லாம்
மலைசெய்வ தொழியின் வாழ்க்கை
யழியுமற் றடிக ளென்றான். 20

ஆருயிர் வருத்தங் கண்டா லருள்பெரி தொழுகு கண்ணால்
ஓருயிர் போல நெஞ்சத் துருகினைந் துய்ய நிற்றல்
வாரியில் வதங்கட் கெல்லா மரசவிவ் விதம தற்கே
சார்துணை யாகக் கொள்க தகவுமத் தயவு மென்றான். 21

இறந்தநா ளென்று முள்ளத் திரங்குத லின்றி வெய்தாய்க்
கறந்துயி ருண்டு கன்றிக் கருவினை பெருகச் செய்தாய்
பிறந்துநீ பிறவி தோறும் பெருநவை யுறுவ தெல்லாஞ்
சிறந்தநல் லறத்தி னன்றித் தீருமா றுளது முண்டோ. 22

நிலையிலா வுடம்பின் வாழ்க்கை நெடிதுட னிறுவ லென்றிக்
கொலையினால் முயன்று வாழுங் கொற்றவ னேனு முற்றச்
சிலபக லன்றி நின்றார் சிலரிவ ணில்லை கண்டாய்
அலைதரு பிறவி முந்நீ ரழுந்துவ னநந்தங் காலம். 23

இன்னுமீ தைய கேட்க யசோமதி தந்தை யாய
மன்னவ னன்னை யோடு மாவினற் கோழி தன்னைக்
கொன்னவில் வாளிற் கொன்ற கொடுமையிற் கடிய துன்பம்
பின்னவர் பிறவி தோறும் பெற்றன பேச லாமோ. 24

வீங்கிய வினைக டம்மால் வெருவரத் தக்க துன்பம்
தாங்கினர் பிறந்தி றந்து தளர்ந்தனர் விலங்கிற் செல்வா
ராங்கவர் தாங்கள் கண்டா யருவினை துரப்ப வந்தா
ரீங்குநின் னயலக் கூட்டி லிருந்த கோழிகளு மென்றான். 25

உயிரவ ணில்லை யேனு முயிர்க்கொலை நினைப்பி னாலும்
மயிரிக்ள் பிறவி தோறும் வருந்திய வருத்தங் கண்டா
லுயிரினி லருளொன் றின்றி யுவந்தனை கொன்று சென்றார்
செயிர்தரு நரக னல்லாற் செல்லிட மில்லை யென்றான். 26

மற்றவ னினைய கூற மனநனி கலங்கி வாடிச்
செற்றமுஞ் சினமு நீக்கித் திருவறத் தெளிவு காதல்
பற்றினன் வதங்கள் முன்னம் பகர்ந்தன வனைத்துங் கொண்டு
பெற்றன னடிக ளும்மாற் பெரும்பய னென்று போந்தான். 27

கேட்டலு மடிகள் வாயிற் கெழுமிய மொழிக டம்மைக்
கூட்டினு ளிருந்த மற்றக் கோழிகள் பிறப்பு ணர்ந்திட்
டோட்டிய சினத்த வாகி யுறுவத முய்ந்து கொண்ட
பாட்டருந் தன்மைத் தன்றே பான்மையிற் பரிசு தானும். 28

பிறவிக ளனைத்து நெஞ்சிற் பெயர்ந்தன நினைத்து முன்னர்
யறவியின் மயங்கி யாற்றின் மறுகின மறுகு சென்றே
யறவிற வடிக டம்மா லறவமிர் தாரப் பெற்றேம்
பிறவியின் மறுகு வெந்நோய் பிழைத்தன மென்ற வாறே. 29

அறிவொண் சரண மூழ்கி யறத்தெழு விருப்ப முள்ளார்
குறைவில வமுதங் கொண்டு குளிர்ந்தக மகிழ்ந்து கூவச்
செறிபொழி லதனுட் சென்று செவியினு ளிசைப்ப மன்னன்
முறுவல்கொள் முகத்து நல்லார் முகத்தொரு சிலைவ ளைத்தான்.

சொல்லறி கணையை வாங்கித் தொடுத்தவன் விடுத்த லோடு
நல்லிறைப் பறவை தம்மை நடுக்கிய சடுத்து வீழச்
சில்லறி வினைக ளானுந் திருவறப் பெருமை யாலே
வல்லிரின் மறைந்து போகி மானுடம் பிராய வன்றே. 31

விரைசெறி பொழிலி னுள்ளால் வேனிலில் விளைந்த தெல்லா
மரசனு மமர்ந்து போகி யகநகர்க் கோயி லெய்தி
முரசொலி கழுமப் புக்கு மொய்ம்மலர்க் குழலி னோரோ
டுரைசெய லரிய வண்ண முவகையின் மூழ்கி னானே. 32

இன்னண மரச செல்வத் திசோமதி செல்லு நாளுட்
பொன்னிய லணிகொல் புட்பா வலியெனும் பொங்கு கொங்கை
யின்னிய லிரட்டை யாகு மிளையரை யீன்று சின்னுட்
பின்னுமோர் சிறுவன் றன்னைப் பெற்றனள் பேதை தானே.

அன்னவர் தம்முள் முன்னு னபயமுன் னுருசி தங்கை
யன்னமென் னடையி னுளு மபயமுன் மதியென் பாளாம்
பின்னவர் வளரு நாளுட் பிறந்தவ னிறங்கொள் பைந்தார்
இன்னிளங் குமர னும யசோதர னென்ப தாகும். 34

பரிமிசைப் படைப யின்றும் பார்மிசைத் தேர்க டாயும்
வரிசையிற் கரிமேற் கொண்டு வாட்டொழில் பயின்று மன்னர்க்
குரியவத் தொழில்க ளோடு கலைகளின் செலவை யோர்ந்து
மரசிளங் குமரன் சென்று னடுத்தது கூற லுற்றேன். 35

நாலாகாவது சருக்கம் முற்றிற்று.

முதன்மூன்று சருக்கப் பாடல்கள் … … … … 219.

ஆக மொத்தப் பாடல்கள் … … … … … 254.





உ

# ஐந்தாவது சருக்கம்.

நூற்படு வலைப்பொறி முதற்கருவி நூற்றே
டேற்றிடை யெயிற்றுஞ மலிக்குல மிரைப்ப
நாற்படை நடுக்கட னடுச்செய் நமனேபோல்
வேற்படை பிடித்தரசன் வேட்டையின் விரைந்தான். 1

இதத்தினை யுயிர்க்கினி தளித்திடு மியற்கைச்
சுதத்தமுனி தொத்திரு வினைத்துக ளுடைக்கும்
பதத்தயன் மதக்களி றெனப்படி மநிற்பக்
கதத்துட னிழித்தடு கடத்திடை மடுத்தான். 2

கூற்றமென வடவிபுடை தடவியுயிர் கோறற்
கேற்றபடி பெற்றதில னிற்றைவினை முற்றும்
பாற்றியவ னின்னுயிர் பறிப்பனென வந்தான்
மாற்றரிய சீற்றமொடு மாதவனின் மேலே. 3

ஞானந்தெரி யுமிழ்ந்தெதிர் றுணைத்ததிர்வ சோறு
யைந்திறெடு பொருததோகை யைம்பதி னிரட்டி
செந்தசைகள் சென்றுகவர் கென்றென விடுத்தா
னந்தியருண் மழைபொழியு நாதனவன் மேலே. 4

அறப்பெருமை செய்தரு டவப்பெருமை தன்று
லுறப்புணர்த லஞ்சியொரு விற்கணைவை நிற்பக்
கறப்புடை மணத்தெழு கதத்தரச னேயோ
மறப்படை விடக்கருதி வாளுருவு கின்றான். 5

காளைதகு கல்யாண மித்திர னெனும்பே
ராளியப் திறல்வணிக னரசனுயி ரனைய
கேளொருவன் வந்திடை புகுந்தரச கெட்டேன்
வாளுருவு கின்றதுவென் மாதவன்முன் னென்றான். 6

வெறுத்துடன் விடுத்தர சினைத்துக ளெனப்பே
ரறப்பெரு மலைப்பொறை யெடுத்தவ னடிக்கட்
சிறப்பினை யியற்றிலை சினத்தெரி மனத்தான்
மறப்படையெ டுப்பதுவென் மாலைமற வேலோய். 7

ஆகவெனி னாகவிவ ரழியவெனி லழிக
மேகமிவண் வருகவெனின் வருமதுவும் விதிபின்
ஏகமன ராமுனிவர் பெருமையிது வாகு
மாகமழை வண்கைமத யானைமணி முடியோய். 8

அடைந்தவர்கள் காதலின மரரச ராவர்
கடந்தவர்க டமதிகழ்வில் கடைநரகின் வீழ்வா
ரடைந்தநிழல் போலருளு முனிவுமில ரடிகள்
கடந்ததிவ னுலகியல்பு கடவுளவர் செயலே. 9

இந்திரர்கள் வந்தடி பணிந்தருளு, கெனினுஞ்
சிந்தையுடன் வெந்துயர்க ணின்னனர்கள் செயினுந்
தந்தம்வினை யென்றுநமர் பிறரெனவு நினையா
ரந்தரமி கந்தரு— வத்தரசர் தாரோய். 10

இவ்வுலகி னெவ்வுயிரு மெம்முயிரி னேரென்
றவ்விய மகன்றருள் சுரந்துயிர் வளர்க்குஞ்
செவ்விமையி னின்றவர் திருந்தடி படிந்துன்
வெவ்வினை கடந்துயிர் விளங்கும்விறல் வேலோய். 11

என்றினிது கூறும்வணி கன்சொலிக ழாதே
கன்றுசின முங்கர தலப்படையு மாற்றி
யின்றிவனை யென்னைதொழு மாறளிய னியாவன்
கன்றுதுக ளின்றுகரு மேனியின னென்றான். 12

இங்குலகு தொழுமுனியை யாவனெனி னிதுகேள்
கங்கைகுல திலகனவன் கலிங்கபதி யதனைப்
பொங்குபுய வலியில்பொது வின்றிமுழு தாண்ட
சிங்கமிவ னென்றுதெளி தேர்ந்துணரின் வேந்தே. 13

மேகமென மின்னினொடு வில்லுமென வல்லே
போகமொடு பொருளிளமை பொன்றுநனி யென்றே
யாகதுற வருள்பெருகு மறனொடத னியலே
போகமிகு பொன்னுலகு புகுவனென நினைவான். 14

நாடுநக ரங்களுந லங்கொள்மட வாரு
மாடுகொடி யானையதிர் தேர்புரவி காலாள்
சூடுமுடி மாலைகுழை தோள்வளையொ டார
மாடைமுத லாயினவொ டகல்கவென விட்டான். 15

வானவரு மண்ணின்மிசை யரசர்களு மலைமேற்
றானவரும் வந்துதொழு தவவுருவு கொண்டா
னூனமன மின்றியுயிர் கட்குறுதி யுள்ளிக்
கானுமலை நாடுகள் கலந்துதிரி கின்றான். 16

யானுமல தெனதுமல திதமுமல தெனினு
மானமுடை மாதவனின் பேணிமகி ழானு
யேனைவினை மாசுதன துருவினிறு வாதே
ஞானவொளி நகைசெய்குண நாளுமணி கின்றான். 17

ஈடின்முனி யோகினது பெருமையெனி லிறைவ
காடுபடு கொலையினொடு கடியவினை நின்னைக்
கூடுவதோர் ழிந்ததுகொ லின்றுகொலை வேலோய்
நாடுவதென் ஞமலியிவை நணுகலர்கள் காணாய். 18

என்றவனு ளங்கொள வியம்பின னியம்பச்
சென்றுதிரு வடிமலர்கள் சென்னிமிசை யணியா
வின்றெனது பிழைதணிய வென்றலை யரிந்து
நின்றமுனி சரணினிட வென்றுநினை கின்றான். 19

இன்னதுநி னைந்ததிவ னென்றுகை யெடுத்தே
மன்னனின் மனத்தது விடுத்திடு மனத்திற்
றன்னுயிரின் மன்னுயிர்வ ளர்க்கை தகவாறு
னின்னுயிரை நீகலையி னின்னருள தென்னாம். 20

முன்னமுறை செய்தபொருள் முடிந்திலது முடியப்
பின்னுமிகை பிறவுமுறை பேசுதிற நினைவுந்
துன்னுயிரின் முன்னிதுது ணிந்தபிழை தூராப்
பின்னைநினை கின்றவிது பிழைபெரிது மென்றான். 21

மன்னவன்ம னத்ததைவி ரித்தருள்வ ளர்க்குஞ்
சொன்னவில் சுதத்தமுனி தொன்மலர டிக்கட்
சென்னிமுடி துன்னுமலர் சென்றுறவ ணங்கிப்
பன்னியரு ளிறைவவெமர் பவமுழுது மென்றான். 22

ஆங்குமுனி யவதியி லறிந்தபொரு ளதனை
வாங்கியவ னுணரும்வகை வைத்தருள்செய் கின்றா
னீங்குமு னியற்றிய தவத்தினில சோக
னோங்குபுக ழமருலக மொன்றினு ளுவந்தான். 23

அருமணியி னொளிதிகழு மமரனவ னாகிப்
பிரமனுல கதனுள்மிகை பெறுகடல்கள் பத்துந்
திருமணிய துணைமுலைய தெய்வமட வாரோ
டருமையில னகமகிழ்வின் மருவுமவன் மாதோ. 24

வஞ்சனையி லன்னையுடன் மன்னவனை நஞ்சிற்
றுஞ்சும்வகை சூழ்ந்துதொழு நோய்முழுது மாகி
யஞ்சின்மொழி யமிர்தமதி யருநரகின் வீழ்ந்தாள்
நஞ்சனைய வினைநலிய நாமநகை வேலோய். 25

இருளினிரு ளிருள்புகைபொ டளறுமணல் பரலின்
மருள்செயுரு விலபொருளின் வருபெயரு மவையே
வெருள்செய்வினை தருதுயரம் விளைபுநில மிசையத்
தெருளினெழு வகைநரக குழிகளிவை தாமோய். 26

மேருகிரி யுய்த்திடினும் வெப்பமொடு தட்ப
நீரெனவு ருக்குநி லப்புரைய வைந்தா
யோரிறுறு புகைநரகி னுருகியுடன் விழ்ந்தா
ளாருமில ளறனுமில ளமிர்தமதி யவளே. 27

ஆழ்ந்தகுழி வீழ்ந்தபொழு தருநரக ரோடிச்
சூழ்ந்துது கையாவெரியு ளிட்டனர்கள் சுட்டார்
போழ்ந்தனர்கள் புண்பெருக வன்றறிபு டைத்தார்
முழ்ந்தவினை முனியுமெனின் முனியலரு முளரோ. 28

செந்தசைகள் வெந்தனக டின்றனைமுன் னென்றே
சொந்தழலில் வெந்துகொது கொதுகென வுருகுஞ்
செந்தழலி னிந்திரர்கள் செம்புக டணிப்ப
வெந்தழலி னைந்துருகும் விண்டொழுகு முகனே. 29

கருகருக ரிந்தன னுருவினொரு பாவை
பெருகெரியி னிட்டுருகு மிதுவுமினி தேயென்
றருகணைய நுந்துதலு மலறியது தழுவிப்
பொருபொரு பொரிந்துபொடி யாமுடல மெல்லாம். 30

நாவழுகி வீழ்முழுது நஞ்சுண மடுத்தா
ளாவலறி யதுவுருகி யலமரினு மையோ
சாவவரி திவணரசி தகவில்வினை தருநோ
யாவும்விளை நிலமதனி லினியவுள வாமோ, 31

முன்னுநமர் தந்தைசமு னிந்திலநு கர்ந்தாய்க்
கின்னுமினி துன்னவய வங்கடின வென்றே
தன்னவய வம்பலத டிந்துழல வைத்துத்
தின்னியென நொந்தவைக டின்னுமிகை திறலோய். 32

திலப்பொறியி லிட்டனர்தி ரிப்பவுநெ ருப்பி
னுலைப்பெரு கழற்றலை யுருக்கவுமு ருத்துக்
கொலைக்கழுவி னிட்டனர்கு லைபவுமு ருக்கு
முலைப்பருவ ருத்தமது ரைப்பரிது கண்டாய். 33

ஒருபதினொ டொருபதினை யுந்தியத னும்ப
ரிருபதினொ டைந்துவி லுயர்ந்தபுகை யென்னும்
பொருவரிய துயரினவை பொங்கியுடன் வீழு
மொருபதினொ டெழுகடல்க ளளவுமொளி தாரோய். 34

தொல்லைவினை நின்றுசுடு கின்றநர கத்து
ளல்லலினவை யல்லனவு மமிழ்தமதி யுறுவ
வெல்லையில விதுவிதென வெண்ணியொரு நாவிற்
சொல்லவுல வாவொழிக சுடருநெடு முடியோய். 35

எண்ணமிலி சோதரனெ டன்னையிவர் முன்னாட்
கண்ணியவு யிர்க்கொலை வினைக்கொடுமை யாலே
நண்ணிய விலங்கிடை நடுங்கனர் தொடர்ந்த
வண்ணமிது வடிவமிவை வளரொளிய பூணோய். 36

மன்னன்மயி லாய்மயிரி முள்ளெயின மீனாய்
பின்னிருமு றைத்தகரு மாகியவ னேகி
மன்னுசிறை வாரணம தாகிவத மருவி
மன்னவனின் மகனபய னாகிவளர் கின்றான். 37

சந்திரமுன் மதிஞமலி நாகமொா டடங்கர்
வந்துமறி மயிடமுடன் வாரணமு மாகி
முந்தைவினை நெகிழமுனி மொழியும்வத மருவி
வந்தன்மக ளபயமதி யாகிவளர் கின்றாள். 38

இதுநுமர்கள் பவவினைகள் விளையுமியல் பிதுவென்
றெதுவின்முனி யருளுமொழி யவையவைக ணினையா
விதுவிதுவி திர்ந்தகநெ கிழ்ந்துமிகை சோரா
மதுமலர்கொள் மணிமுடிய மன்னவன்ம ருண்டான். 39

ஆங்கபய வருசியுட னபயமதி தானுந்
தாங்கலர்கள் சென்றுதவ வரசனரு ளாலே
நீங்கியப வங்களைநி னைந்தனரு ணர்ந்தா
ராங்கவர்க ளுறுகவலை யாவர்பிற ரறிவார். 40

வேறு.

தந்தையுந் தந்தை தாயு மாகிய தழுவு காதல்
மைந்தனு மடந்தை தானு மாற்றிடைச் சுழன்ற பெற்றி
சிந்தையி னினைந்து நொந்து தேம்பினர் புலம்பக் கண்டு
கொந்தெரி யழலுள் வீழ்ந்த கொள்கைய மன்ன னானன். 41

எந்தையு மெந்தை தாயு
மெய்திய பிறவி தோறும்
வெந்துயர் விளைவு செய்த
வினையினே னென்செய் கேனோ
யந்தமி லுயிர்கண் மாய
வலைபல செய்து நாளும்
வெந்துயர் நரகின் வீழ்க்கும்
வினைசெய்தே னென்செய் கேனோ. 42

அருளொடு படர்தல் செய்யா தாருயிர்க் கழிவு செய்தே
பொருளொடு போக மேவிப் பொறியிலே னென்செய் கேனோ
வருளின தருவ மாய வடிகளும் மடிகட் கேயுந்
தெருளல னினைந்த தீமைச் சிறியனே னென்செய் கேனோ. 43

மாவியல் வடிவு தன்னை வதைசெய்தார் வண்ண மீதே
லாவினீ யளிய னேது மஞ்சிலே னவதி யென்கொல்
காவல வருளு கென்னக் கலங்கின னரசன் வீழ
மாவல வஞ்ச லென்றம் மாதவ னுரைவ ளர்த்தான். 44

அறியல ராய காலத் தறிவில செய்த தெல்லா
நெறியினி லறிவ தூற நின்றவை விலகி நிற்ப
ரறியலர் வினைக ளாலே யருநவை படுநர்க் கையா
சிறியநல் வதங்கள் செய்த திருவினை நமர்கள் காணாய். 45

அருள்புரி மனத்த ராகி யாருயிர்க் கபய நல்கிப்
பொருள்கொலை களவு காமம் பொய்யொடு புறக்க ணித்திட்
டிருள்புரி வினைகள் சேரா திறைவன தறத்தை யெய்தின்
மருள்செய வருவ துண்டோ வானவ ரின்ப மல்லால். 46

என்றலு மடிகள் பாதத் தெழின்முடி மலர்கள் சிந்தக்
கன்றிய வினைக ளரக் கருணையி னுருகி நெஞ்சிற்
சென்றன னறிவு காட்சித் திருவறத் தொருவ னானேன்
வென்றவர் சரண டைந்தார் விளைப்பது வென்றி யன்றோ. 47

வெருள்செயும் வினைக டம்மை வெருவிய மனத்த னாகி
மருள்செயு முருவ மாட்சி மகனொடு மங்கை தன்னை
யருள்பெரு குவகை தன்னா லமைவில னரிய னும்மைத்
தெருளலன் முன்பு செய்த சிறுமைகள் பொறுக்க வென்றான்.

ஒருயிர்த் தோழ னாகி யுறுதிசூழ் வணிகன் றன்னை
யாருயிர்ச் சரண மாய வடிகளோ டைய நீயு
நேரெனக் கிறைவ னாக நினைவ னென்றினிய கூறிப்
பாரியற் பொறையை நெஞ்சிற் பரிந்தனன் மன்ன னானான். 49

மணிமுடி மகனுக் கீந்து மன்னவன் றன்னோ டேனை
யணிமுடி யரசர் தாமு மவனுயிர்த் துணைவ னாய
வணிகனு மற்று ளாரு மாதவத் திறையை வாழ்த்தித்
துணிவினர் துறந்து மூவார் தொழுதெழு முருவு கொண்டார்.

தாதைதன் றுறவு முந்தத் தானுடன் பட்ட தல்லா
லோதநீர் வட்டந் தன்னை யொருதுகள் போல வுள்ளத்
தாதரம் பண்ணல் செல்லா வபயனு மரசு தன்னைக்
காதலன் குமரன் றம்பி கைப்படுத் தனன்வி டுத்தான். 51

மாதவன் மலர்ந்த சொல்லான் மைந்தனு மங்கை யாய
பேதையும் பிணைய னாளும் பிறப்பினி துணர்ந்த பின்ன
ராதரம் பண்ணல் போகத் தஞ்சினர் நெஞ்சி னஞ்சாய்
மாதவன் சரண மாக வனமது துன்னி னாரே. 52

வினைகளும் வினைக டம்மால் விளைபயன் வெறுப்பு மேவித்
தனசர ணணையு ளார்க்குந் தவவர சருளத் தாழ்ந்து
வினையின விளைவு தம்மை வெருவின வடிகள் மெய்யே
சினவரன் சரண மூழ்கிச் செறிதவம் படர்து மென்றார். 53

ஆற்றல தமையப் பெற்றா லருந்தவ மமர்ந்து செய்மின்
சாற்றிய வகையின் மேன்மேற் சையமா சைய மத்திற்
கேற்றவ னின்மை தன்னை யிதுபொழு துய்மி னென்றா
னூற்றலுக் கேற்ற வாற்றா லவ்வழி யொழுகு கின்றார். 54

அருங்கல மும்மை தம்மா லதிசய முடைய நோன்மைப்
பெருங்குழு வொருங்கு சூழப் பொறற்கருங் குணங்க டம்மாற்
சுருங்கலில் சுதத்த னென்னுந் துறவினுக் கரச னின்றாட்
டருங்கடி கமழுஞ் சோலை யதனுள்வந் தினிதி ருந்தான். 55

அனசன மமர்ந்த சிந்தை யருந்தவ னிசோம திக்குத்
தனயர்க டம்மை நோக்கித் தரியலீர் சரிகை போமி
னெனவவ ரிறைஞ்சி மெல்ல விந்நகரத்து வந்தா
ரனையவ ராக வெம்மை யறிகமற் றரச வென்றான். 56

இனையது பிறவி மாலை யெமரது மெமது மெண்ணி
னினையது வினைகள்பின்னு னிடர்செய்த முறைமை தானு
மினையது வெகுளி காமத் தெய்திய வியல்பு நாடி
னினையது பெருமை தானு மிறைவன தறத்த தென்றான். 57

வேறு.

செய்த வெந்திரியக் கொலையொரு துகள்தனிற்
சென்று றுபவந் தோறு
மெய்து மாயிடற் றீர்ந்திடாக் கொலையிஃ
திருநி லமுடி வேந்தே

மையல் கொண்டிவண் மன்னுயி ரெனைப்பல
வதைசெ யவரு பாவத்
தெய்தும் வெந்துய ரெப்படித் தென்றனைந்
திரங்கு கின்றன னென்றான். 58

ஐயநின் னருளா லுயிர்க்கொ லையினி
லருவி னைநர கத்தாழ்ந்
தெய்தும் வெந்துய ரெனைப்பல கோடி
கோடியி னுறுபழி தீர்ந்தேன்
பொய்ய தன்றிது புரவல குமர
நின்புகழ் மொழிபுணை யாக
மையின் மாதவத் தொருகட லாடுதல்
வலித்த னனிது வென்றான். 59

இன்சொல் மாதரு மிளங்கிளைச் சுற்றமு
மெரித்தி ரளென வஞ்சிப்
பொன்செய் மாமுடிப் புதல்வருட் புட்ப
தந்தற் கிதுபொறை யென்றே
மின்செய் தாரவன் வெறுத்தன னரசியல்
விடுத்த வருடன் போகி
முன்சொல் மாமலர்ப் பொழிலினுள் முனிவராற்
றொழுது நன்முனி யானான். 60

வெய்ய தீவினை வெருவுறு மாதவம்
விதியி னின்றுதி கொண்டா
னைய தாமதி சயமுற வடங்கின
னுடம்பி னையிவ ணிட்டே

மையல் வானிடை வனசனற் குழாங்களில்
வான வன்றா னாகித்
தொய்யில் மாமுலைச் சுரவரர் மகளிர்தந்
தொகுதி யின்மகிழ் வுற்றான். 61

அண்ண லாகிய வபயனுந் தங்கையு
மாபு கமிலை யின்மை
நண்ணி நாயக முனிவனி லறிந்தனர்
நவின்ற னர்குண மெல்லாங்
கண்ணி னார்தம துருவின துடலங்
கள்கழிந் தனகழி போகத்
தெண்ணில் வானுல கத்திரண் டாவதி
னிமைய வர்தா மானார். 62

அம்பொன் மாமுடி யலர்கதிர் குண்டல
மரும ணிதிக ழாரஞ்
செம்பொன் மாமணி தோள்வளை கடகங்கள்
செறிக ழுன்முத லாய
நம்பு நாளொளி நகுகதிர்க் கலங்களி
னலம்பொ லிந்தழ கார்ந்த
வம்பு வானிடு தனுவென வடிவு
டைவா னவரா னாரே. 63

வந்து வானவர் திசைதொறும் வணங்கி
னர்வாழ்த் தினர்மலர் மாரி
மந்த மாருதந் துந்துபி வளரிசை
மலிந்த னமருங் கெங்கு

மந்தி லாடினர் பாடினர் விரும்பிய
வரம்பை யரரு கெல்லாம்.
வந்த தேவியர் மன்மத வாளியின்
மகிழ்ந்து டன்புடை சூழ்ந்தார். 64

மாசின் மாமணி மேனியின் வாச
மோரோ சனைமண நாறத்
தெசொ ரோசனை திளைத்திட முளைத்தெ
ழுந்தன கரணனை யார்க
ளாசி லெண்குண னவதி யொடமைந்
தனரலை கடலள வெல்லா
மேசில் வானுல கிளையி லின்பத்தி
னிலிசைந் துடனியல் கின்றார். 65

## நூற்பயன்.

ஒருவுறு வினைவலி விலக்கு கிற்பது
தருவது சுரகதி தந்து பின்னரும்
பொருவரு சிவகதி புணர நிற்பது
திருவற நெறியது செவ்வி காண்மினே.

ஐந்தாவது சருக்கம் முற்றிற்று.



## பாடல்களின் மொத்தம்.

| | | | |
|---|---|---|---|
| முதற் சருக்கப் பாடல்கள் | ... | ... | 72 |
| இரண்டாம் ,, | ... | ... | 82 |
| மூன்றாம் ,, | ... | ... | 65 |
| நான்காம் ,, | ... | ... | 35 |
| ஐந்தாம் ,, | ... | ... | 65 |
| நூற்பயன் பாடல் | ... | ... | 1 |
| ஆக மொத்தப் பாடல்கள் | ... | ... | 320 |



# செய்யுளகராதி.




| செய்யுள். | பக்கம். | செய்யுள். | பக்கம். |
|---|---|---|---|
| அ | | அ. | |
| அங்கநூல் ... ... | 10 | அருங்கலமு ... | 58 |
| அங்கவள் ... ... | 18 | அருமணி ... ... | 53 |
| அங்குலி ... ... | 7 | அருவினை ... ... | 8 |
| அசையதாகி ... | 37 | அருவினைமு ... | 43 |
| அஞ்சிலோதி ... | 31 | அருளுடை ... | 12 |
| அஞ்சின ... ... | 6 | அருளொடு ... | 56 |
| அஞ்சுதல் ... ... | 16 | அருள்புரி ... | 56 |
| அடைந்தவர் ... | 50 | அல்லது ... | 6 |
| அணிகொள் ... | 38 | அழுகி ... ... | 39 |
| அண்டலர் ... ... | 6 | அறப்பெருமை ... | 49 |
| அண்ணநீ ... ... | 8 | அறப்பொருள் ... | 13 |
| அண்ணல் ... ... | 60 | அறப்பொருள் ... | 28 |
| அத்தலத்தகர் ... | 36 | அறியலர் ... ... | 56 |
| அந்தரத் ... ... | 33 | அறிவாண் ... | 47 |
| அப்பிறப்பில் ... | 32 | அறிவோடு ... | 9 |
| அம்பின் ... ... | 30 | அறுத்த ... ... | 34 |
| அம்பொன் ... | 60 | அற்றமில் ... ... | 44 |
| அம்முனி ... | 5 | அனங்கனுன ... | 39 |
| அரசவை ... ... | 20 | அனசன ... ... | 58 |
| அரசனாணை ... | 38 | அனந்தமா... ... | 43 |
| அரசனின் ... | 12 | அன்றியும் ... ... | 25 |
| அரசன் ... ... | 2 | அன்னண ... ... | 12 |
| அரசுநீ ... ... | 27 | அன்னவர் ... ... | 48 |

| செய்யுள். | | பக்கம். |
|---|---|---|
| ஆ | | |
| ஆகமத்தடி... | ... | 44 |
| ஆகவெனின் | ... | 50 |
| ஆங்கபய | ... | 55 |
| ஆங்கவளக | ... | 27 |
| ஆங்கவளரு ... | ... | 25 |
| ஆங்கவள் | ... | 17 |
| ஆங்குமுனி | ... | 52 |
| ஆடவரன்றி... | ... | 20 |
| ஆடை ... | ... | 8 |
| ஆதகா ... | ... | 27 |
| ஆதபத்தில்... | ... | 35 |
| ஆயிடை ... | ... | 5 |
| ஆயிடைய ... | ... | 17 |
| ஆயிடையரச... | ... | 23 |
| ஆயிடைக்கொடி | ... | 38 |
| ஆரருள் ... | ... | 43 |
| ஆருயிர் ... | ... | 46 |
| ஆழ்ந்தகுழி... | ... | 53 |
| ஆற்றலத ... | ... | 58 |
| இ | | |
| இங்குலகு ... | ... | 51 |
| இஞ்சி ... | ... | 2 |
| இடக்கண்... | ... | 11 |
| இணாதழைப் | ... | 42 |
| இதத்தினை | ... | 49 |
| இதுநமர் ... | ... | 55 |
| இதுவென்மா | ... | 36 |
| இந்திரர்கள்... | ... | 50 |
| இந்துவோ... | ... | 14 |
| இருமுழ ... | ... | 7 |
| இருளினால் | ... | 21 |
| இருளினிருள் | ... | 53 |
| இவர்கள் ... | ... | 36 |
| இவ்வகை ... | ... | 44 |
| இவ்வுலகில் | ... | 50 |
| இளங்களிறு | ... | 14 |
| இளமையின் | ... | 15 |
| இளையவள்... | ... | 14 |
| இறந்தநாள் | ... | 46 |
| இனையது | ... | 58 |
| இனையநீ | ... | 28 |
| இனையவள் | ... | 14 |
| இனையவாகிய | ... | 37 |
| இனையனந் | ... | 10 |
| இனையனநி | ... | 15 |
| இனையனநீ | ... | 27 |
| இனையனப | ... | 22 |
| இனையனவி | ... | 29 |
| இனையனவு | ... | 28 |
| இன்சொல் | ... | 59 |
| இன்றிவண் | ... | 9 |
| இன்றெறிந்த | ... | 35 |
| இன்னணம் | ... | 48 |
| இன்னதுங் | ... | 52 |
| இன்னரி ... | ... | 17 |
| இன்னுமாசை | ... | 38 |
| இன்னுமீ ... | ... | 46 |

| செய்யுள். | பக்கம். |
|---|---|
| **ஈ.** | |
| ஈங்குர ... ... | 9 |
| ஈடின்முனி ... | 52 |
| **உ.** | |
| உம்மை ... ... | 39 |
| உயர்ந்த ... ... | 3 |
| உயிரவன் ... ... | 46 |
| உயிர்ப்பொருள் ... | 26 |
| உருவினெ... ... | 22 |
| உலக ... ... | 1 |
| உளங்கொள ... | 5 |
| உள்விரி ... ... | 1 |
| உறுதியை... ... | 9 |
| உறுபொருள் ... | 45 |
| **எ.** | |
| எண்களுக்கு ... | 28 |
| எண்ணமது ... | 22 |
| எண்ணமிலி ... | 55 |
| எந்தையும் ... | 56 |
| எரிமணி ... ... | 16 |
| எவ்வளவு ... ... | 12 |
| எனமன ... ... | 6 |
| என்மனத்து ... | 18 |
| என்றலுமடி ... | 57 |
| என்றலும்... ... | 25 |
| என்றலுமி... ... | 20 |
| என்றலுமே ... | 21 |
| என்றவன்... ... | 52 |
| என்றினிது ... | 51 |
| என்றலும்மினர் ... | 35 |
| என்றுகண்டு ... | 40 |
| என்றுகூ ... ... | 4 |
| என்றுதன்... ... | 39 |
| என்றுமி ... ... | 8 |
| என்னுயிர்... ... | 19 |
| என்னுயிர் ... ... | 25 |
| என்னைகொல் ... | 26 |
| என்னைநஞ்சு ... | 36 |
| **ஐ.** | |
| ஐபபசி ... ... | 24 |
| ஐயநின் ... ... | 59 |
| ஐவகை ... ... | 10 |
| **ஒ.** | |
| ஒருபதின் ... ... | 54 |
| ஒன்றிய ... ... | 9 |
| **ஓ.** | |
| ஓரின் ... ... | 7 |
| ஓருயிர் ... ... | 57 |
| **க.** | |
| கடையன ... ... | 21 |
| கர்தடு ... ... | 14 |
| கண்மென் ... ... | 49 |
| கண்ணினு... ... | 11 |

| செய்யுள். | பக்கம். |
|---|---|
| கரவினிற் ... ... | 24 |
| கருகருகரி ... ... | 54 |
| கருமனு ... ... | 43 |
| கறங்கென... ... | 7 |
| காரனீர் ... ... | 38 |
| காரியம் ... ... | 20 |
| காளைதகு ... ... | 50 |
| காணும் ... ... | 3 |
| குட்டமா ... ... | 39 |
| குரைகழல்... ... | 15 |
| கூற்றமென ... | 49 |
| கேட்டலும் ... | 47 |
| கொங்கெரி ... | 49 |
| கொலைக்களம் ... | 10 |
| கொலையின ... | 45 |
| கோங்கு ... ... | 3 |
| **ச.** | |
| சண்ட ... ... | 4 |
| சந்திரமுன் ... | 55 |
| சந்திரம்மதி ... | 30 |
| சந்திரம்மதி ... | 32 |
| சந்திரம்மதி ... | 38 |
| சந்திரம்மதி ... | 33 |
| சந்திரம்மதி ... | 37 |
| சிக்கென ... ... | 44 |
| சிலம்பொடு ... | 16 |
| சிலைபயில்... ... | 45 |
| சிகரைய ... ... | 31 |
| செந்தசைகள் ... | 53 |
| செந்தளிர் ... ... | 42 |
| செய்தவெம் ... | 58 |
| சென்றுநல் ... | 36 |
| சொல்லறி... ... | 47 |
| **த.** | |
| தந்தையு ... ... | 55 |
| தரளமாகிய ... | 40 |
| தவழுமா ... ... | 18 |
| தனிவயின் ... | 20 |
| தாதைதன்... ... | 57 |
| தாயினன்னல ... | 34 |
| தாய்சொல்... ... | 33 |
| தாய்முன் ... ... | 32 |
| தாய்வயின்... ... | 34 |
| திசையுலா... ... | 2 |
| திருத்தகு ... ... | 16 |
| திலப்பொறி ... | 54 |
| தீதகல் ... ... | 28 |
| தீதிதென்று ... | 35 |
| துயிலினை ... ... | 21 |
| துன்ப ... ... | 8 |
| துன்னிய ... ... | 18 |
| தூரபாரம் ... ... | 37 |
| தெருளுடை ... | 45 |
| தேவிநீ .. ... | 20 |
| தேவியென் ... | 40 |
| தையலாள்... ... | 21 |

| செய்யுள். | பக்கம். |
|---|---|
| தொல்லை ... ... | 54 |
| தோடலர் ... ... | 16 |
| **ந.** | |
| நகைவிளை ... ... | 23 |
| நங்கைநீ ... ... | 6 |
| நஞ்சது ... ... | 27 |
| நஞ்சிலன்னை ... | 40 |
| நஞ்சொடு ... ... | 27 |
| நரம்புகள் ... ... | 19 |
| நல்வத ... ... | 31 |
| நாடுநகர் ... ... | 51 |
| நாதன் ... ... | 1 |
| நாயின் ... ... | 32 |
| நாவழுகி ... ... | 54 |
| நிலையிலா ... ... | 46 |
| நின்றகண்ட ... | 34 |
| நின்றவர் ... ... | 11 |
| நூற்படு ... ... | 49 |
| நெரிந்த ... ... | 2 |
| நோயினை ... | 39 |
| நோவு ... ... | 3 |
| **ப.** | |
| பண்ணினுக்கு ... | 17 |
| பரிமிசை ... ... | 48 |
| பாடகம் ... ... | 42 |
| பாரிதத்தினை ... | 2 |
| பாவ ... ... | 4 |
| பிறந்தநம் ... ... | 7 |
| பிறந்தவர் ... ... | 13 |
| பிறவிகள் ... ... | 47 |
| புரைபுரை... ... | 23 |
| பூதி ... ... | 19 |
| பெண்ணுயிர் ... | 9 |
| பெருகிய ... ... | 45 |
| பெருமலை ... ... | 10 |
| பேதுறு ... ... | 10 |
| பேதைமாதர் ... | 37 |
| பைம்பொன் ... | 2 |
| பையவே ... ... | 44 |
| பொற்பகங் ... | 21 |
| **ம.** | |
| மக்களில் ... ... | 8 |
| மடங்கனி ... ... | 17 |
| மணிமருள்... ... | 24 |
| மணிமுடி ... ... | 57 |
| மண்டமர் ... ... | 24 |
| மண்ணியல் ... | 23 |
| மயிலும் ... ... | 30 |
| மருவு ... ... | 1 |
| மலமலி ... ... | 12 |
| மலர்ந்த ... ... | 3 |
| மழுகிருள் ... ... | 19 |
| மறவியின் ... ... | 11 |
| மற்றமன்னன் ... | 30 |
| மற்றம்மா ... ... | 40 |

| செய்யுள். | பக்கம். |
|---|---|
| மற்றிவனினை ... | 47 |
| மற்றைநாள் ... | 23 |
| மற்றைமீனும் ... | 34 |
| மற்றொருகள்வன் ... | 44 |
| மற்றோர்நாள் ... | 15 |
| மற்றோர்நாள் ... | 16 |
| மற்றோர்நாண் ... | 35 |
| மற்றோர்நாண் ... | 31 |
| மனம்விரி ... | 25 |
| மன்னன்மயில் ... | 55 |
| மன்னவன்... ... | 52 |
| மன்னனாகிய ... | 31 |
| மன்னனானை ... | 4 |
| மன்னனு ... ... | 11 |
| மன்னன்மாதேவி ... | 19 |
| மன்னன்மாமயில் ... | 33 |
| மன்னன்மாமயில் ... | 34 |
| மன்னன்மா .. | 32 |
| மாசின்மா ... ... | 61 |
| மாதரார் ... ... | 22 |
| மாதவன் ... ... | 57 |
| மாவியல் ... ... | 56 |
| மாவினில் ... ... | 26 |
| மாளவ ... ... | 19 |
| மின்னினு ... ... | 18 |
| மின்னொடு ... | 12 |
| மூத்தவாள் ... | 32 |
| மூர்துசெய் ... | 15 |
| மூழமொரு ... | 7 |
| முன்னமுறை ... | 52 |
| முன்னுயிர் ... | 11 |
| முன்னுநமர் ... | 54 |
| மேகமென... ... | 51 |
| மேருகிரி ... ... | 53 |
| மேவியல் ... ... | 26 |

யா.

| செய்யுள். | பக்கம். |
|---|---|
| யான்படைத்த ... | 36 |
| யானிவ் ... ... | 4 |
| யானுமல ... ... | 51 |
| யானுயிர் ... ... | 25 |

வ.

| செய்யுள். | பக்கம். |
|---|---|
| வஞ்சனை ... ... | 53 |
| வடிநுனை ... ... | 43 |
| வணிகர் ... ... | 37 |
| வண்டளிர்... ... | 15 |
| வந்து ... ... | 31 |
| வந்துடன் ... ... | 8 |
| வந்துமா ... ... | 5 |
| வந்துவானவர் ... | 60 |
| வரைசெய்... ... | 38 |
| வலையின் ... ... | 33 |
| வளவயல் ... ... | 14 |
| வளையவர் ... ... | 42 |
| வள்ளிய ... ... | 5 |
| வன்சொல்... ... | 6 |

| செய்யுள். | பக்கம். | செய்யுள். | பக்கம். |
|---|---|---|---|
| வாடல் ... ... | 4 | வில்லின ... ... | 5 |
| வாரணி ... ... | 28 | வினைகளும் ... | 58 |
| வாளின்வாய் ... | 35 | வீங்கிய ... ... | 46 |
| வானவரு . . ... | 51 | வெய்யதீ ... ... | 59 |
| விண்ணிடை ... | 24 | வெருவுறு ... ... | 61 |
| விந்தநாம ... ... | 30 | வெருள்செயும் ... | 57 |
| விரைசெறி ... | 47 | வெறுத்துடன் ... | 50 |


---

# பாட பேதம்.

| பக்கம். | பாடல். | உள்ளபாடம். | பேதம். |
|---|---|---|---|
| 6 | 25 | அண்டலர். | அண்டவர். |
| 8 | 40 | னடியதிட். | ஒழியவிட். |
| 10 | 50 | லாசிரியர். | லாசரியர். |
| 10 | 51 | மரிபபற. | மரிறப. |
| 12 | 65 | உதிர்பபை. | உதிப்பை. |
| 14 | 4 | யமிழ்த. | யமிர்த. |
| 19 | 32 | நிரலுமன்றி, | நிரலுமின்றி. |
| 20 | 37 | தனங்களுரை. | தணங்களும். |
| 27 | 74 | லட்டுவங. | லட்டுகங். |
| 54 | 32 | முன்னு. | முன்னை. |
| 56 | 45 | க்கையா. | கையாற். |
| | ,, | செய்ததிருவினை. | செய்யத்தீவினை. |
| | ,, | நுமர்கள்காணுய். | யகலுமன்றோ. |
| 60 | 61 | வனசனற். | அனசனர். |

# அபிதான விளக்கம்.

அகம்பனர்.—ஜினமுனிவர். சண்டகருமனுக்கு தபோவனத்தில் ஒழுக்கநெறி உபதேசித்தவர்.

அசோகன்.—அவந்தி தேசத்துள்ள உஜ்ஜயினி நகரத்தரசன். இக்கதாநாயகனது தகப்பன்.

அட்டபங்கன்.—யசோதரனுடைய ஆனைப்பாகன்.

அபயமதி.—அசோகன்பௌத்தி. யசோமதி யரசனது குமாரி. அபயருசியின் தங்கை.

அபயருசி.—அபயமதியின் தமயன். இவ்விருவரும் இரட்டைப்பிள்ளையாகப் பிறந்தவர்கள்.

அமிர்தமதி.—யசோதரன்மனைவி.

அவந்தி.—உஜ்ஜயினி நகர்க்கு மற்றோர்பெயர். இப்பெயர் அந்நாட்டிற்கும் பெயராய் வழங்குதலு முண்டு.

இசோதரன்.—யசோதரனைப்பார்க்க.

இசோமதி.—யசோமதியைப்பார்க்க.

இராசபுரம்.—இராசமாபுரமென்றும் வழங்கப்படுகின்றது. இது ஔதேயநாட்டின் தலைநகர்.

உச்சயினி.—(உஞ்சைையென்பது மிதுவே) அவந்திநாட்டின் தலைநகர்.

உலோகிதம்.—ஓர்வடிவழகியமீன். சிருப்பிரை யாற்றில் பாபகர்மத்தால் யசோதரனடைந்த மீன்வடிவம்.

ஔதேயம்.—யௌதேயம்பார்க்க.

**கலிங்கம்.**—56-தேசங்களில் ஒன்று. கஞ்சஞ்சில்லாவில் கடற்கரையிலுள்ள பட்டணம். இது முன்பு தலைநக ராயிருந்தது.

**கல்யாணமித்திரன்.** — தபோவனத்தில் சுதத்தமுனிவரையண்டி, ஜினதருமங் கேட்டுணர்ந்தவன். வணிகர்கள் தலைவன் (சிரேட்டி)

**குணதரர்.**—அசோகனுக்கு ஜினதருமமுணர்த்தி, ஜினதீட்சையுமளித்தமுனிவர்.

**குணவதி.**—அபிர்தமதியின் செவிலித்தாய். அட்டபங்கனைத் தருமசங்கடத்தால் அபிர்தமதியுடன் சேரும்படி போயழைத்து வந்தவள்.

**சண்டகருமன்.**—ராசபுரத்தரசனும் மாரிதத்தனுடைய தளவரன். அபயருசி அபயமதி இருவரையும் நரபலிக்கென்று தேடிப்பிடித்துக்கொணர்ந்தவன்.

**சண்டமாரி.**—ராசமாபுரிக்கு வெளியிற்கோயில்கொண்டகாளி. வெகு உக்கிரமானவள்.

**சந்திரமதி.**—அசோகன் மனைவி. யசோதரன்றாய்.

**சிருப்பிரை.**—உஜ்ஜயினி நகர்க்கருகிலோடும் ஓர்நதி.

**சுதத்தன்.**—ஓர்ஜினமுனிவன். வசவேட்டைமேற் சென்றயசோமதி அரசன் இவரைக் கொல்லப்போய் உயிர்த்தோழனால் விலக்கப்பட்டு, பிறகு யசோமதிக்கு ஒழுக்கநெறிகூறிய முனிவன்.

**சுவ்வதன்.**—ஸுவிரதர் என்பதின் தற்பவமொழி. 24-தீர்த்தகரருள் ஒருவர். 20-வது தீர்த்தகரர் முனிஸுவிரதர்.

**தீதுதீர் தீர்த்தன்.**—புண்ணிய தீர்த்தன். ஸுவ்விரதன்.

**நாவற்பொழில்.**—ஜம்புத்வீபம். நாவலந்தீவு.

**புட்பதந்தன்.**—மாரிதத்த அரசனின்மூத்த குமாரன்.

**புட்பாவலி.**—யசோமதியரசன் மனைவி.

**மதிமதி.**—சந்திரமதி. அசோகன் மனைவி.

**மாரிதத்தன்.**—ராசபுரத்தரசன். நரபலிக்கென்று கொணர்ந்து நிறுத்திய அபயருசி அபயமதி இவ்விருவருள் அபயருசியால், இந்த யசோதரனது சரிதங்கேட்டு பலியிடுதலொழிந்து நற்பதம்பெற்றவன்.

**யசோதரன்.**—இக்காவியத்தின் கதாநாயகன். அமிர்தமதியின் கணவன். அசோகனது குமாரன்-யசோமதியின் குமாரன்.

**யசோமதி.**—யசோதரன் மகன்.

**யௌதேயம்.**—மாரிதத்தனுடைய தேசம். இதின் தலைநகர் ராசபுரி. இத்தேயத்தைத் தசார்ணமென்றும் வழங்கப்படுகின்றது. உசீநரன்மகன் நிருகன் வம்சத்தா ரரசாண்டதேசம்.

**விந்தம்.**—ஆரியாவர்த்தத்தின் தெற்கிலுள்ள ஒருயர்ந்த மலை, அகத்தியரால் மேலெழாது கீழழுத்தப்பெற்ற மலை.

# யசோதர காவியம்.

## அரும்பதவுரை.

---

பாடல். முதற்சருக்கம்.

9. வயந்தமன்னவன்.—வேனிற்காலத்தரசனும் மன்மதன். வஸந்தம் என்பதன் றிரிபவாம், வயந்தம்.

,, வயந்தம்.—வஸந்தகாலத்தில் செய்யும் ஓர் திருவிழாவுக்கும்பெயர்.

11. தேவி.—ராசகரதேவனையாம் சண்டமாரி.

13. சண்டகோபி.—கடுங்கோபமுடையவள்.

20. அந்தில்.—ஓரிடம்.

,, அனசனத்தவம். — உபவாஸவிரதம். பட்டினியாயிருத்தல்.

21. அபய முன்னு ருசி.—அபய மெனுமொழியை முன்னேயுடைய ருசி அதாவது அபய ருசி. இவன் அபயமதியின் அண்ணன்.

21. அபயமா மதி.—அபயமெனு மொழி முதலிலாகின்ற மதி அதாவது அபயமதி. அபயருசியின் தங்கை.

22. சரிதை.—இல்லற ஒழுக்கம். சிராவகநிலை.

23. குல்லகம்.—இளமை. க்ஷுல்லகம் எனும் ஆரிய மொழியின் தற்பவரூபம்.

25. அண்டலர்.—நெருங்காதவர் அதாவது பகைவர்.
அண்டவர்.—(பாடமாயின்), தேவர்.

30. அநேகவாரம்.—பன்முறை.

34. புகை.—ஒரு யோசனைதூரம்.

35. உபதேசம்.—ஒருபடி. அல்லது ஓரளவு.

37. அமரர்கற்பம்.—தேவர்களின் வாழ்நாளெல்லை.

40. அடியதிட்டு.—நீக்கி அல்லது காற்கீழிட்டு.

46. தடத்து.—உறையிலே தங்கிய. (தடம்).

47. அரதனம்.—ரத்நம் எனும் வடசொலின் தற்பவரூபம்.

48. சித்தர்.—சித்தியடைந்தோர். பஞ்ச பரமேட்டிகளி லொருவகையார்.

49. தீர்த்தகரர். — ஜைனமுனிவர்களுள் முக்கியராம் இருபத்துநால்வர். உலகமெனும் கடலைத் தாண்டியவர்கள் என்பது பொருள். பஞ்ச பரமேஷ்டிகளுள் இவர்களும் ஒரு வகையார்.

50. ஆசிரியர்.—ஆசிரியர் அதாவது ஆசாரியர்கள். நல்லொழுக்க முள்ளார். பஞ்ச பரமேஷ்டிகளில் இவர்களும் ஒரு வகையார்.

51. அங்கநூல்.—ஜைனதருமமுணர்த்தும் நூல்.

,, அங்கபூ.—ஜைன தத்துவநூல். சிராவகாசார நூல்.

,, மெய்நூலளிக்கு நீரார்.—உண்மையைச் சமயநூல் வழியாகப் போதனை புரிபவர்கள். இவர்களும் பஞ்சபரமேட்டிகளி லொருவகையார்.

" ஏழ் தீமைப்பங்கம்.—ஏழ்வகைக் கொடிய நரகமாம் சேறு. அல்லது கெடுக்குமிடம்.

52. சாதுவர்.—சாதுக்கள். பரமகாருணிகர். பஞ்ச பரமேஷ்டிகளில் இவர்களும் ஒரு வகையார்.

63. அறமழை.— தருமோபதேசமாம் மழை.

64. நிரைசெய்து.—வரிசைப்படுத்தி. ஒழுங்குசெய்து.

65. உதிர்ப்பு.—ஜ்ஞாநோதயம். (உதிப்பு).

67. இருவினை.—புண்ணிய பாபரூபமா மிருசெய்கை.

69. இறப்பவும்.—அதிகமாக. மிகவும்.

## இரண்டாஞ்சருக்கம்.

1. சனபதம்.— வடசொற்றொடர். நாடு அல்லது தேசம்.

1. உஞ்சயினி.—உஞ்சை. உஜ்ஜயினி, என்றும் வழங்கப் படுகின்றது. அவந்தி நாட்டின் பிரதான நகரம்.

3. இசோதரன்.—யசோதரனைப் பார்க்க.

14. புஞ்சிய.—மிகுந்த (புஞ்சம். திரட்சி.)

15. துயரி.—தந்தி. வீணை முதலிய வாத்தியங்களில் தைவரற் குறிய உறுப்பு.

18. ஐங்கணை.— மன்மதனுடைய ஐந்துபாணங்கள். (முல்லை, அசோகு, நீலம், சூதம், தாமரை)

19. விடங்கழித்து.— ஒரு தலைக்காமத்தால் நேரும் நோயன்றி, விடம் இங்குத் துன்பத்தை யுணர்த்துகின்றது.

21. அத்திகூடம்.—அத்தி, யானை. கூடம், இடம். அத்தம் துதிக்கை. அதனையுடையது அத்தி. அதாவது யானை. அத்திகூடம்=ஆனைகட்டு மண்டபம்.

25. தோட்டி.—அங்குசம். யானையை யடக்கும் கருவி. மாவெட்டி. என்பது மிது.

27. நீ.ினைந்து.—நீ கற்பனைசெய்து.

28. ஆதும்.—யாதும்.

30. மழுகிருள்.—மழுங்கலான இருளில்.

30. கழுது.—கழுதை, பிசாசம.

31. அத்திபாகன்.—ஆனைப்பாகன்.

33. பூதிகந்தம்.—துர்க்கந்தம்.

5. நீடலே.—நீ தாமதியாது.

37. அனங்கனுரை.—நோயினல தன் அவயவ மழிந்தவரை. (அணங்கு, தெய்வப்பெண்).

38. இகுளை.—தோழி.

,, சாரன்.—களவிற் சார்ந்துபுணர்வோன், கள்ளநாயகன்.

42. மருளி.—காமமயக்குளளவன்.

49. துநமதி.—துர்மதி என்பதன் தற்பவம். கெட்ட எண்ண முளளவன்.

51. மறை.—ரகசியத்தில் கண்டது.

52. மிகைகமழ்நீர்.—வாசனைநீர். பன்னீர்.

53. இருநிறமலர்.—நீலமலர். கருநெய்தல்.

,, அசதியாடல்.—சிரித்துவிளையாடல்.

58. மங்கலக்கிழமை.—செவ்வாய்க்கிழமை. செம்மைநிறம் வாய்ந்தவனுக்குரிய கிழமை. மங்கலன்,

அங்காரகன். இவன் 10ம் இடத்திலிருக்கப்பிறந்தோன் அட்ட மங்கள முதலியன பெறுதலுண்டென்பர் சோதிடர். பலிமுதலிய தீச்செய்கைக்குரியநாளாதலின் மங்கலமாயிற்றென்னலுமாம்.

61. அரணம்.—க்ஷேமம் அல்லது காப்பு.

68. சாலியின்இடி.-சம்பா அரிசியை யிடித்தெடுத்தமா.

72. துரத்தியாயின்.—நீ நீக்கி விடுவாயானல்.

73. அவ்வை.—அம்மை, தாய். (செவ்வை-செம்மை.)

74. லட்டுவேம்.—அப்பவருக்கம். லட்டுகம் என்பது வடநூல்வழக்கு. லட்டென்பது மிது.

76. வரனுக்கு.—புருஷனுக்கு. (வதூ, மணமகள்.)

77. காதரம்.—இங்கு விருப்பத்தை யுணர்த்துகின்றது.

,, சேதனவடிவு.—உயிர்ப்பிராணி, அறிவுள்ளஜந்து.

80. மறைபதி.—கள்ளப்புருஷன். சோரநாயகன்.

## மூன்றுவது சருக்கம்.

1. மதிமதி.—சந்திரமதி.

2. கண்டகன்.—துன்புறுத்துவோன். வேடன், புளிஞன். கண்டகம்=முள்.

4. சுணங்கம்.—நாய். (சுணங்கன்.)

5. உபாயனம்.—காட்சிக் குரியபொருள். காணிக்கைக்குரிய பொருள்.

16. மயிர்முள்.—முள்போற் கூர்மையாகிய பன்றிமயிர். இதனை பொன் கொல்லர் அணிகளிற் பதிக்

துள்ள அழுக்கெடுக்க உபயோகிப்பர். பன்றி முள் என்பதிதுவே.

18. உளியம்.—கரடி.

21. அந்தரம்.—தேவர்கோயில். இங்கு அரண்மனையை யுணர்த்துகின்றது.

கூனி.—கூனுள்ள பெண். அல்லது குனிந்து.

27. சூகரம்.—பன்றி

33. ஆதபத்தில்.—வெயிலில்.

" சிராத்தம்.—சிரத்தையுடன் செய்யப்படும் கிரியை. இது பிதிரர் பொருட்டுச் செய்யப்படுவது.

41. மறையான்.—மறைந்து வருபவன். சோரநாயகன்.

42. அசையதாகி.—பிரவேசமுள்ள தாகி

45. மாயிடம்.—மகிஷம். வடமொழி. மாயிடம் தற்பவமொழி. எருமை என்பதுபொருள்.

48. உழையாளர்—அருகிருப்போர், கிங்கரர்.

56. தொழுவல்.—குட்டநோய்.

61. இறந்திலே.—நீங்கிஞயில்லே. மாண்டிலே

65. சவி.—வடசொல், ஒளி.

" சரணங்கள்.—கால்கள்.பாதங்கள்.

## நான்காவது சருக்கம்.

9. சோரன்.—வடசொல், திருடன், கள்வன்.

12. திந்தி.—காற்றை நிறப்பும் துருத்தி.

15. அற்றயில்.—அழிவில்லாத.

17. புலேசு.—புலால்.

23. முந்நீர்.—கடல், (மழைநீர், ஊற்றுநீர், ஆற்றுநீர் இவைகளாலாவது.)

26. உயிர்க்கோலே.—ஜீவவதை.

31. சில்லறிவினைகள்.—அற்ப அறிவுடையார் செய்யும் வினைகள். (அறிவொடுபுரிந்தவினைகள்).

33. அரசசெல்வம்.—ராஜபோகம்.

ஐந்தாவது சருக்கம்.

23. அவதி.—ஓர்வகைஞானம், கடந்தபிறவிகளைப்பகுத்தறியும் உணர்வு.

24. கடல்கள்.—ஓர் பெருந்தொகைப்பெயர்.

33. திலப்பொறி.--எள்ளிட்டாட்டும்இயந்திரம், செக்கு.

37. மயிரிமுள்.—பன்றியின் மீதுள்ளமெல்லிய முள் போன்ற மயிர்-மயிர்முள் என்றதிதுவே. இ.-விகுதி.

45. திருவினை.—சிறப்பை, இங்கு எதிர்மறையாய் இழிவை யுணர்த்துகின்றது.

61. வனசனற்குழாம்.—தாமரையிற் பிறந்த பிரமனது பதம்பெற்ற நல்ல கூட்டம்.

அனசனர்குழாம்.—எனப்பாட பேதங்கொள்ளில் மனிதர்போல அசனம் உட்கொள்ளாத தேவர்களது கூட்டமெனக் கொள்க.

# பிழை திருத்தம்.

| பக்கம். | பாடல். | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 2 | 3 | இஞ்சு | இஞ்சி. |
| 15 | 1 | மற்றோர் | மற்றொர். |
| 19 | 32 | சீரிற் | சீறிற். |
| 20 | 37 | னாறைக் | னாருங். |
| 22 | 40 | உருவினோ | உருவினொ. |
| 27 | 74 | லட்டுவ | லட்டுக. |
| 32 | 12 | யுணரந்த. | யுணர்ந்த. |
| 36 | 36 | துன்டது | துண்டது. |
| 43 | 5 | பரனென் | பனரென். |
| 53 | 28 | சூழ்ந்து | சூழ்ந்து. |
| ,, | ,, | மூழ்ந்த | சூழ்ந்த. |
| 60 | 2 | வனசனர் | யனசேனர். |
| 64 | 16 | இனையவள் | |

